புகழேந்திப்புலவர்

இயற்றிய

# பஞ்சபாண்டவர் வனவாசம்.



சித்திரப்படப் பதிப்பு

PUBLISHED BY
LONGMANS, GREEN & CO.,
167, MOUNT ROAD, MADRAS,
BOMBAY & CALCUTTA



PUBLISHED BY
LONGMANS, ... & CO.,
167, MOUNT ROAD, MA...

MADRAS:
1914

[*All rights reserved.*]

மாதர் மஞ்சரி: மலர் - 4

புகழேந்திப்புலவர்

இயற்றிய

# பஞ்சபாண்டவர் வனவாசம்



சித்திரப்படப் பதிப்பு.



MADRAS:
PRINTED AT THE VAIJAYANTI PRESS,
(Madras Times Printing & Publishing Co., Ltd).
BY
W. F. GRAHAME ESQ., I.C.S (RETIRED) AT 32, MOUNT ROAD.

1913.

*All Rights Reserved.*] [ரிஜிஸ்தர் செய்தது.

இதிலுள்ள சித்திரப் படங்களின்

## அட்டவணை.



பக்கம்.



குறிப்பு

மாதர்மஞ்சரியிலுள்ள மற்ற ஆப்டோன்படங்களின் விவரத்தை ராப்பரின் பின்பக்கத்திற் காண்க.



பஞ்சபாண்டவர் வனவாசம்

# முகவுரை



கொஞ்சு கிளிமொழியார் கூடிக் குடைந்தாடும்
கஞ்சமலர் வாவிகளும் கனியுதிருஞ் சோலைகளும்
விஞ்சுநல மாடங்களும் விண்தடவு கோபுரத்தின்
நஞ்சணி மிடற்றூர்க்கும் நாகணைத் துயில்வார்க்கும்
செஞ்சொர்ணு லயங்களுமே சிறந்து நிறைந்துளதாய்

விளங்குவது அஸ்தினபுரி என்னும் திருநகரம். இது இப்பொழுது டில்லி என்று வழங்கப்படுகிறது. இதை இராஜதானியாகக் கொண்டு அரசாண்ட சந்திரகுல அரசர்களில் திருதிராஷ்டிரன், பாண்டு என்று இருவர் சகோதரர் இருந்தார்கள். இவர்களில் முன்னவன் குருடனு யிருந்ததால் பின்னவனே அரசாண்டு வந்தான். திரிதிராஷ்டிரனுக்கு, துரியோதனனுதி நூறு புத்திரர்களும், பாண்டுராஜனுக்கு, தருமர் முதலிய ஐந்து புத்திரர்களும் பிறந்தார்கள். இப்புத்திரர்களுக்கெல்லாம் மூத்தவர் தருமர். ஆயினும், பாண்டு மன்னன் இறந்தபிறகு பட்டத்துக்கு வந்தவன் துரியோதனனே.

பாண்டு மக்களாகிய ஐவரும் (இவர்களுக்குப் பாண்டவர் என்பது பொதுப்பெயர்) மிகவும் தர்ம குணமுடையவர்களாதலால் துரியோதனன் பார்த்துக்கொடுத்த இந்திரப்பிரஸ்த நகரையும், அதைச் சேர்ந்த ஊர்களையுமட்டுமே பெற்றுக்கொண்டு, மற்ற பூமியை 'யாராண்டால் என்ன' என்று பேசாமலிருந்தார்கள். துரியோதனன் முதலியவர்கள் (இவர்களுக்குக் கௌரவர் என்பது பொதுப்பெயர்) பாண்டவர் விஷயத்தில் மிகவும் பொருமையுடையவர்களாய், அவர்களுக்கு அநேக கெடுதல்கள் செய்து வந்தனர். துரியோதனன் பாண்டவர்களுக்குச் செய்த கொடுமைகளை இந்நூல் எட்டாவது ஒன்பதாவது பக்கங்களிற் காண்க. அவன் அவர்களுக்குப் பலகொடுமைகளைச் செய்து, கடைசியாக அவர்களைச் சூதாட அழைத்து, அதில் வஞ்சனையாக அவர்களைத் தோற்கச்செய்து அவர்கள் நாடு நகரங்களையெல்லாம் கைப்பற்றிக்கொண்டான். பிறகு அவன், பாண்டவர்கள்

ஐவரும் தமது மனைவி திரௌபதியுடன் பன்னிரண்டு வருஷம் வனவாசமும் ஒரு வருஷம் அஞ்ஞாத வாசமும் செய்துவந்தால் அவர்களுடைய நாடு நகரங்களைத் திருப்பித்தருவதாகக் கூறினான். பாண்டவர்கள் தம் மனைவியுடன் அங்ஙனமே வனவாசஞ் செய்யச் செல்வாராயினர். துரியோதனன் அங்கும் அவர்களைப் பின்தொடர்ந்து அவர்களைப் பலவகையிலும் அழிக்க முயன்றான்.

முதலாவது வருஷம் பாண்டவர் சூரியவனத்திலுறைந்தார்கள். துரியோதனன் துர்வாசரை ஏவி அவர்களைக் கொல்லமுயன்றான். கிருஷ்ணன் உதவியால் பாண்டவர் துர்வாசருக்கு மனமகிழப் போஜனம்படைத்துத் தப்பினார்கள்.

இரண்டாவது வருஷம் அவர்கள் இராமரிஷி வனத்தில் வசித்தார்கள். அப்பொழுது அங்கே கிருஷ்ணர் சாபத்தால் மலைப்பாம்பாய்க்கிடந்த இராமரிஷி வீமன் முதலிய நால்வர்களையும் எடுத்து விழுங்கிவிட்டார். தருமர் அதுகண்டு மிகவும் வருந்தி கிருஷ்ணரை ஸ்தோத்திரித்தார். கிருஷ்ணர் ஒரு எலியாக அம்மலைப்பாம்பின் வாயுட் புகுந்துசென்று அர்ச்சுனன் பிடித்திருந்த வில்நாணியை அறுத்து விட்டார். உடனே வில் எழும்பி, நாகத்தின் வயிற்றைக் கிழிக்க, நால்வரும் அதனின்றும் வெளி வந்தார்கள். கிருஷ்ணர் இராமரிஷிக்குக் காட்சிகொடுத்து அவர் சாபம்பெற்ற வரலாற்றைப் பஞ்சவருக்கு உரைத்தார்.

மூன்றாவது வருஷம் பஞ்சவர் முருக்கமகாரிஷி வனத்தில் வசித்தார்கள். அதைத் தூதுவர்களாலறிந்த துரியோதனன், துரோபதையை அபகரித்து வரும்படி சயிந்தவனை அனுப்பினான். சயிந்தவன் அங்ஙனமே சென்று, ஐவரில்லா வேளைபார்த்துத் துரோபதையை வஞ்சித்துத் தேரில் ஏற்றிக்கொண்டு வந்தான். வீமன் முதலிய நால்வரும் அதைக்கண்டுத் தேரை நிறுத்தித் துரோபதையை மீட்டு சயிந்தவனை அவமானப்படுத்தி அனுப்பிவிட்டனர்.

நான்காவது வருஷம் ஐவரும் காளமகாரிஷி வனத்தில் உறைந்தார்கள். துரியோதனன் அதையறிந்து காளமகாரிஷியைக்கொண்டு அவர்களைக் கொல்ல முயன்றான். ஆனால் கிருஷ்ணர் நச்சுப்பொய்கை உண்டாக்கி, அவர்களைக் காப்பாற்றிவிட்டார்.

ஐந்தாவது வருஷம் சயிந்தவமகாரிஷி வனத்தில் பாண்டவர் உறையும்பொழுது, தெய்வீக மாங்கனியைப் பறித்ததால் அவர்கள் அழிந்துபோய் விடுவார்கள் போலிருந்தது. கிருஷ்ணர் மாங்கனியைத் திரும்பவும் மரத்திற் பொருந்தச்செய்து அவர்களைக் காப்பாற்றினர்.

ஆறுவது வருஷம் பஞ்சவர் காமதேனு பர்வதத்தில் வசித்தார்கள். அதையறிந்த துரியோதனன் படையெடுத்து அவர்களிடம் சண்டைக்குச் சென்றான். செல்லும்வழியில் காமதேனு இடையர்களைக் கொன்றதால், தேவேந்திரன் கோபங்கொண்டு துரியோதனனைக் கொண்டுவரும்படி சித்திரசேனனை அனுப்பினன். சித்திரசேனன் இழுத்துப் போகும்போது துரியோதனன் முறையிடுதலைக் கேட்ட பஞ்சவர் அவனை, சித்திரசேனனிடமிருந்து மீட்டு அனுப்பிவிட்டனர்.

ஏழாவது வருஷம் கந்தர்வ பர்வதத்தில் பாண்டவர்கள் வசித்தார்கள். அப்பொழுது தம்மீது தம்பலமுமிழ்ந்த கந்தருவனுக்கு அர்ச்சுனன் அபயங்கொடுத்ததற்காக, கிருஷ்ணர் கோபித்து துரியோதனனைத் துணைக்கொண்டு பஞ்சவர்களுடன் சண்டை செய்யச் சென்றார். சண்டைமுடிவில் கிருஷ்ணர் பஞ்சவரோடு கலந்துகொண்டார். துரியோதனன் அவமானப்பட்டுப் போய்விட்டான்.

எட்டாவது வருஷம் பாண்டுகுமாரர் குருபாரிஷி வனத்தில் வசித்தார்கள். அப்பொழுது வீமன் துரோபதைக்குப் பாரிசாத புஷ்பம் பறிப்பதற்காகப் போய் குருபாரிஷி வனத்தை யழித்துவிட்டான். அதனல் குருபாரிஷி கோபித்து அவனைச் சபிக்க எண்ணியிருந்தார். ஆனல் கிருஷ்ணபகவான் தந்திரமாய் அதை மாற்றிவிட்டார்.

ஒன்பதாவது வருஷம் ஐவரும் உரோமரிஷி வனத்தில் தங்கியிருந்தார்கள். அங்கே இருந்த உரோமரிஷியிடம் அவர்கள் தங்கள் துன்பத்தைத் தெரிவித்தார்கள். அவர் சிவனிடமிருந்து அஸ்திரம் பெற்றால் துரியோதனதியரை வெல்லலாமென்றுரைத்தார். அந்தப்படியே சிவதனுசைப் பெறவேண்டி அர்ச்சுனன் வியாசர் மொழிப்படி தவ வேடம் பூண்டு சென்றான்.

பத்தாவது வருஷம் பாண்டவர் ஐவரும் பேரண்ட வனத்தில் சென்றிருந்தார்கள். அந்த வனத்தில் வசித்த பேரண்டச்சி தவத்திற்குச் செல்லும் அர்ச்சுனனை வழிமறித்தாள். அர்ச்சுனன் அவளுக்குத் தப்பிச் சென்றான். செல்லும்பொழுது ஏலகன்னி எதிர்ப்பட்டு விருந்துக்கழைக்க, அர்ச்சுனன் காளியைக்கொண்டு அவளை ஏமாற்றிவிட்டுப் போய்விட்டான்.

பதினோராவது வருஷம் ஐவரும் சபாமிருக வனத்தில் தங்கினார்கள். அவ்வனத்திலிருந்த யானையொன்று அர்ச்சுனனை எதிர்த்து வந்தது. அர்ச்சுனன் அதைக் கொன்றான். அப்பொழுது அதன் வயிற்றினின்று ஒரு பிராமணன் வெளிப்பட்டான். அவன் மூலமாக அர்ச்சுனன், நீலகண்டர் வரலாறும், ஊர்க்குருவிவன வரலாறும் அறிந்துகொண்டான்.

பன்னிரண்டாவது வருஷம் பஞ்சவர், காளபைரவ வனத்தில் உறைந்தார்கள். அந்த வனத்தில் அர்ச்சுனன் கடுந்தபசு செய்து சிவபெருமானிடமிருந்து பாசுபதம் பெற்றான்.

குறிப்பு :—இந்நூலை இயற்றிய புகழேந்திப்புலவர் சரித்திரம், இம்மாதர்மஞ்சரியின் முதற்புத்தகமாகிய ஏணியேற்றம் என்னும் நூலின் முகவுரையில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

—— ——



இந்திரப் பிரஸ்தத்தில் பஞ்ச பாண்டவர்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

# பஞ்சபாண்டவர் வனவாசம்.

---

## விநாயகர் தோத்திரம்.

ஐந்து கரத்தோனே அரனார் திருமகனே
ஆறுமுகற்கு மூத்தவனே ஆனைமுகப் பிள்ளையாரே
தொந்தி விநாயகரே தொப்பைக் கணபதியே
பானை வயிற்றோனே பழமேந்துங் கையோனே
மூல முதலேநீர் முன்னடக்க வேணுமையா

## சரஸ்வதி தோத்திரம்.

நாவிற் சரஸ்வதியே நான்முகனார் தேவியரே
சதுர்முகனார் தேவியரே தாயே சரஸ்வதியே
வாக்கு வரயருள்வாய் மறையவனார் தேவியரே
இந்தக்கதை சொல்வதற்கு என்கருத்தில் வாருமம்மா
தப்புக ளில்லாமல் தாயேநீ வாக்கருள்வாய்
பஞ்சவர்கள் தன்கதைக்குப் பாரதியே முன்னிருந்து
குற்றமது வாராமல் கொண்டணைத்துக் காத்தருளும்

---

## கதை வரலாறு.

## முதலாவது-சூரியன்வனம்.

காரானைக் கன்றே கணபதியே முன்னடவாய்
ஐவராம் பாண்டவர்கள் ஆரணியம் போனபின்பு
தேசத் தழகுமன்னன் துர்யோ தனப்பெருமான்
வனவாசம் போனபின்பு மகராஜ னென்னசெய்தான்
அம்மான் சகுனியினை அருகாகத் தானழைத்து
மாமன் சகுனியின் மதிமுகத்தைத் தான்பார்த்து
மாநாகங் கொண்டதொரு மகராஜ னேதுசொல்வான்
சபைகள் நிறைந்திருக்க சர்ப்பக்கொடி யோனுரைப்பான்
ஐவர்வன வாசம்போய் ஐந்தாறு மாதமுண்டு

செத்தாரோ பிழைத்தாரோ சேதி தெரியவில்லை
வனம்போன பஞ்சவர்கள் மாண்டா ரெனவறியேன்
அம்மான் சகுனியை அரவத்துவசன் கேட்கையிலே
மாமன் சகுனியுந்தான் மருமகனுக் கேதுரைப்பான்
தூதரைப் போகவிட்டுத் தொலைதூர மேதேடி
வனமாய் வனங்களிலே வனவாசஞ் செய்கிறதும்
செத்ததுவும் பிழைத்ததுவும் சேதி தெரியுமென்றான்
என்றது கேட்டவுடன் எழுந்தானே துர்யோதனன்
அருகிருக்குந் தூதர்களை அரசுமன்னன் தானழைத்து
ஐவர் வனம்போய் அனேகநா ளாச்சுதே
எந்த வனத்தி லிருக்கிறா ரென்றறிந்து
ஐவர்கண் காணாதே அதிவிரைவி லேவாரும்
காற்றாய்ப் பறந்து கடுகியே வாருமென்றான்
தாம்பூலம் வாங்கித் தானடந்தார் தூதுவர்கள்
கோட்டை கடந்தார்கள் கொத்தளமுந் தாண்டினார்கள்
பட்டணமுந் தாம்கடந்து பாரவனம் போகலுற்றார்
செந்நாய் புலிகரடி சீறும் வனங்கடந்தார்
வேங்கை யடர்ந்தவனம் வெண்களாப் பூத்தவனம்
கோங்கு பெருத்தவனம் கொன்றைகள் பூத்தவனம்
பாதிரி முல்லை பருத்த வனங்கடந்து
ஒருநாரைக் கிருநாரை உயர்ந்தகொம்பில் தாமிருக்கும்
கருநாரைக் கிரைதேடும் கதலி வனங்கடந்து
சூரிய வனந்தனில் போய்ச்சேர்ந்தார் தூதுவர்கள்
பர்னசாலைக் குள்ளிருக்கும் பஞ்சவரைக் கண்டார்கள்
இருக்கு மிடமறிந்து ஏகி நடந்தார்கள்
வனமாய் வனங்கடந்து வாரார்க ளம்பலத்தே
துர்யோ தனனிருக்குஞ் சிங்கா தனத்தின்முன்
சாஷ்டாங்க மாகவே சரணமிட்டார் தூதுவர்கள்
மகராஜர் மெச்சுகின்ற மன்னவரே நீர்கேளும்
சூரிய வனத்திலைவர் சுகமா யிருக்கிறார்கள்
பர்னசாலை மேலாகப் பஞ்சவரைக் கண்டோமென்றார்
அவ்வார்த்தை தான்கேட்டு அரசுமன்ன னேதுசொல்வான்
மாமா சகுனியாரே மன்னவரே நீர்கேளும்
எந்தவிதம் பண்ணுலும் இறவாமற் பஞ்சவர்கள்
தப்பிப் பிழைத்துமே தாரணியில் இருக்கிறார்கள்

வானவாசந் தீர்ந்திங்கு வந்தார்க ளாமானல்
பங்குப் பிரகாரம் பாதிராச்சியங் கேட்பாரே
வாராமல் பஞ்சவரை வனத்திலே கொல்லுதற்கு
ஆலோசனை சொல்லுமையா அம்மானே யென்றுரைத்தான்
மாமன் சகுனிமன்னன் மருமகனுக் கேதுரைப்பான்
செல்வ மருமகனே துர்யோதனா அஞ்சாதே
ஐவரைக் கொல்லவென்ருல் ஆலோசனை சொல்லுகிறேன்
தேவலோ கத்திருக்குஞ் சினமுற்ற துர்வாசர்
அவரை-வருந்தித் தவசுபண்ணுல் வந்திடுவா ரிப்போது
வந்த பொழுதில் வணங்கிச் சரணஞ்சொல்லி
அடிசில் சமைத்து அமுது படைத்தோமானல்
போசன மிட்டுப் புகழ்வேந்தே பொற்பதத்தில்
சரண மடைந்தால் சந்தோஷங் கொண்டிடுவார்
துர்வாசர் தன்மகிமை சொல்லி முடியாது
தேவரா லாகாது ஜயிக்க முடியாது
ஆராலு மாகாது அந்தரிஷி யைஜயிக்க
அப்படிப் பட்டவரை அழைத்துநா மன்னமிட்டால்
சந்தோஷங் கொண்டிடுவார் தவத்தால் பெரியவரும்
ஐவரைக் கொல்லுதற்கு அவரை மனுக்கேட்டால்
நல்லதென்று சொன்னல் நாடு நமதாகும்
ஆராலே யாகும் ஐவரைக் கொல்லவென்ருல்
என்றுசொல் லக்கேட்டு இராஜன்துர் யோதனனும்
உள்ளங் குளிர்ந்து உடனேகத் தானெழுந்தான்
அங்கொருவர் தானறியா தரவக்கொடி யோனடந்தான்
முத்து மிதியடியைத் தொட்டு நடந்தசைந்தான்
பூங்கா வனம்புகுந்து புதுக்கங்கை நீராடி
ஸ்நானங்கள் செய்து சபதபமும் தான்முடித்து
நினைந்து சிவனை நெற்றியில் நீறணிந்து
அரகரா வென்றுசொல்லி அணிந்தான் திருநீறு
ஜலந்தன்னைக் கொண்டு நிலந்தன்னைச் சுத்திசெய்து
தர்ப்பாச னம்போட்டுத் துர்யோ தனராஜன்
துர்வாச மாமுனிவர் அருகுவரத் தானினைந்து
கண்ணிரண்டும் மூடிக் கருத்தில் நினைந்தானே
அருந்தவசு பண்ணுனே அரவக் கொடியோனும்
அப்போது அந்தமுனி யருஞான திருஷ்டியினல்

சர்ப்பக் கொடியோன் தவசு நிலையறிந்து
சந்தோஷ மாகித் தான்வருவார் அந்தரிஷி
சடையுஞ் சடைமுடியுந் தம்பிரா னைப்போல
கையில் கமண்டலமுங் காவி யுடையணிந்து
தண்டு கமண்டலமுந் தருநீற்றுக் கோபியுடன்
வருகிறா ரந்தரிஷி வானுலகந் தான்கடந்து
வனமாய் வனங்கடந்து வழிமலையுந் தான்கடந்து
துர்யோ தனனருகில் தூய முனிவந்தார்
கண்ட வுடன்மன்னன் கடுகியே தானெழுந்து
முக்காலு மன்னன் முடிவணங்கித் தெண்டனிட்டு
ஆண்டவரே ஐயாவே அடியேன் சரணமென்றான்
சிறந்ததுர் வாசரிஷி சித்தமகிழ்ந் தேகுளிர்ந்து
என்னை யழைத்ததுதா னேது கருமமென்றார்
மனத்தில் நினைத்ததெல்லாம் மன்னா வுரையென்றார்
அஞ்சிப் பயந்தவனும் அரசுமன்னன் ஏதுசொல்வான்
அமுது படைக்கவென்று அனேகநா ளென்மனத்தில்
எண்ணி யிருந்தேன்நான் இதுவே கருமமல்லால்
வாரும் மகாமுனியே வருவீர் அமுதுசெய்வீர்
வருந்தி யழைத்துவந்தான் மாளிகை வாசலிலே
வட்ட மணைபோட்டு வந்திரு மென்றுசொல்லி
கைக்குச் சலங்கொடுத்தான் கட்டழகன் கோமானும்
தலைவாழை யிலைபோட்டுத் தண்ணீருந் தான்தெளித்தான்
முக்கனியுஞ் சர்க்கரையும் முன்படைத்தான் மன்னவனும்
கட்டுவர்க் கமுடனே காவலனுந் தான்படைத்தான்
உண்ணுமுண் ணுமென்றே உபசரணை பண்ணலுற்றான்
அன்புடன் போஜனமும் அருந்தினா ரந்தரிஷி
உண்டுபசி தீர்ந்தாராம் உள்ளங் குளிர்ந்தாராம்
கையை யலம்பிக்கொண்டு கனிவாயுஞ் சுத்திபண்ணி
சிறந்ததோர் பீடத்திலே சேர்ந்தாரே துர்வாசர்
துன்னும் முடிவேந்தன் துர்யோ தனராஜன்
பொற்றாம்பா ளந்தனிலே புஷ்பமுஞ் சந்தனமும்
தங்கத்தாம் பாளத்திலே தாம்பூல முங்கொடுத்தான்
மெத்த மகிழ்ந்தாரே மேன்மைத்துர் வாசரிஷி
சர்ப்பக் கொடிபடைத்த தார்மன்ன னைப்பார்த்து
என்ன மனதிலுண்டு இஷ்டமெல்லாங் கேட்டுவிடும்

மனத்தில் நினைந்ததொரு வரங்கள் தருவோமென்றார்
என்றே யவருரைக்க ஏதுரைப்பான் துர்யோதனன்
ஏது வரந்தருவீ ரென்றுரைத்தான் துர்யோதனன்
அப்போது மாமுனியு மவ்வார்த்தைக் கேதுசொல்வார்
கோரும் வரமெல்லாம் கொப்பெனவே தருவேனென்றார்
அப்போது துர்யோதனன் ஆணழக னேதுசொல்வான்
பங்காளிப் பிள்ளைகளோ பாண்டவர்க ளைவருண்டு
ஐவர் வனவாசம் செய்யவே போனார்கள்
சூரிய வனத்தினிலே இருக்கிறார் பஞ்சவர்கள்
ஐவரைக் கொல்லவென்று அனேக மனதாகி
உம்மை வணங்கினேன்நான் உண்மையுள்ள மாமுனியே
பஞ்சவரைக் கொல்வேனென்று பண்பாகச் சொல்லுமென்றான்
எந்த வகையாலும் இறக்கவகை பண்ணுமென்றான்
பாதம் பணிந்தானே பாம்புக் கொடியோனும்
துர்வாச மாரிஷியுஞ் சொல்லுகிறார் வாய்திறந்து
ஏதுதா னும்மைசெய்தா ரிராஜாக்கள் பஞ்சவர்கள்
எப்படிக் கொல்வேனு னிராஜாக்கள் பஞ்சவரை
துர்ய னதுகேட்டு சொல்லுவான் வாய்திறந்து
ஆரணியந் தன்னிலே ஐவ ருருகிற்சென்று
போஜனங் கேட்டாலே புகழ்வேந்தர் பஞ்சவரை
ஐவருக்கே போசனமும் அங்கே கிடையாது
வெந்தசோ றுண்டு விதமறியார் பஞ்சவர்கள்
போசன மில்லையென்றால் பொட்டெனவே சாபமிட்டு
கல்லாக மண்ணுகக் காவலரைச் செய்துவிட்டு
கடுகித் திரும்பிவிடும் கனத்த ரிஷியாரே
போய்வாரு மென்றுசொல்லி பொருந்தவே தெண்டனிட்டான்
துர்வாச மாரிஷியுஞ் சுருக்காக வேயெழுந்து
தண்டு கமண்டலமும் தருபுலித்தோ ளாசனமும்
கடுகி நடந்தாரே காடு செடிதாண்டி
அஸ்தினு புரந்தாண்டி ஆறு சுனைதாண்டி
காடு செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
சில்லென்று பூத்த செடியும் வனுந்தரமும்
கடுகி வருகின்றார் கனத்த ரிஷியவரும்
ஏழுல கையாண்ட எம்பெருமா ளிதையறிந்தார்
அடியளந்த மாயவனுர் ஆதிமூல மேதுசெய்தார்

நம்பினோ ரைக்காக்கும் நாரா யணரெழுந்து
காவலர் பஞ்சவர்க்கு கனமோசம் வந்ததென்று
ஐவராம் பாண்டவர்க்கு அனர்த்தம் வருமென்று
செல்வத் திரவியங்கள் சீரழிந்து போகுதென்று
தோளிற் செபமாலை சோரவிட நாளச்சே
பாவி கெடுத்தானே பஞ்சவரைக் கொல்லவென்று
என்றும் பகையாளி யேற்பட்டான் பஞ்சவர்க்கு
இங்கே யிருந்தோமென்றால் இறந்திடுவார் பஞ்சவர்கள்
நம்பினோ மென்றவரை நாமல்லோ காக்கவேணும்
என்று எழுந்தாரே எம்பெருமாள் மாயவரும்
துவாரகா புரிதாண்டி *துழாய்மௌலி தாம்வாரார்
காடு செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
சிறந்ததுர் வாசருடன் சேர்ந்தாரே யெம்பெருமாள்
ஆலிங்க னஞ்செய்தார் ஆயர் பெருமாளும்
இந்த வனத்துக்கு ஏதுகவை யாய்ப்போகிறீர்
எங்கேநீர் போகின்றீர் என்றார் பெருமாளும்
மகாரிஷி துர்வாசர் வாய்திறந் தேதுசொல்வார்
மாயன் பெருமாளே வந்ததென்ன இவ்வனத்தே
பார்வேட்டை யாகவே பார வனங்கள்வந்தேன்
வனசாரி யாகவே வந்தேன்கா ணிவ்வனத்தே
அவ்வார்த்தை தான்கேட்டு அந்தரிஷி யேதுசொல்வார்
பஞ்சவர்கள் தாமிருக்கும் பார வனங்களிலே
ஐவ ரிருக்குமந்த அடவியிலே போய்ச்சேர்ந்து
புண்ணியர் ஐவரையும் போஜனங் கேட்கவந்தேன்
என்றுசொல் லக்கேட்டு எம்பெருமா ளானவரும்
நாமும் வருகிறோம் நம்மன்ன ரைப்பார்க்க
கூட நடந்தாரே கோபால சுவாமியவர்
இருவரு மாகவே யிருண்ட வனந்தாண்டி
ஓங்கி வளர்ந்ததொரு மூங்கில் வனந்தாண்டி
செந்நாய் புலிகரடி சீறும் வனந்தாண்டி
பாதிரி முல்லை பருத்த வனந்தாண்டி
ஒருநாரைக் கிருநாரை வுயர்கொம்பி லேயிருக்கும்
கருநாரைக் கிரைதேடுங் கதலி வனந்தாண்டி
கடுகி வருகையிலே கரியமா லென்னசெய்தார்

---

*துழாய்மௌலி = துளசிமாலையையணிந்த கிருஷ்ணமூர்த்தி.

பலாமரத்தைக் கண்டதும் பாரளந்தா ரேதுசொல்வார்
மெத்தப் பெரியவரே வேணதவஞ் செய்தவரே
இந்தப் பலாஇலைதான் ஏதுக் குதவுமென்றார்
அவ்வார்த்தை கேட்டவுடன் அரியரிஷி யேதுசொல்வார்
இந்தப் பலாஇலையி லினியபோ ஜனமுண்டால்
பாலஇலையில் போஜனத்தைப் பண்ணவர்க்கு இட்டாலே
அமரர்க்கு அற்புதங்காண் ஆர்க்குங் கிடையாது
எல்லோர்க்குங் கிட்டாது இராமரே யென்றுசொன்னார்
உச்சிதங்கள் தான்கேட்டு உவந்து நடக்கையிலே
அந்த வனங்கடந்து அடுத்தவனம் போகையிலே
காமதே னுப்பாலை கருங்கல்லுப் பாறையிலே
கறந்தே யிருக்கிறதை கண்டார் பெருமாளும்
மாயன் பெருமாளும் வார்த்தையவர்க் கேதுரைப்பார்
மெத்தப் பெரியவரே வேணதவஞ் செய்தவரே
தூயதவத் திற்சிறந்த துர்வாச மாமுனியே
காமதேனு வின்பாலுங் காரியத்துக் காகுமோதான்
இது-ஏதுக் குதவுங்கா ணென்றார் பெருமாளும்
அவ்வார்த்தை தான்கேட்டு அந்தமுனி யேதுசொல்வார்
தெய்வலோ கந்தனிலே தேவருக்குங் கிட்டாது
ஆர்க்குங் கிடையாது அமரருக்குங் கிட்டாது
இது-எடுத்துப் புசித்தாலே ஈசுவரர்க்கும் அற்புதங்காண்
என்றுசொன்ன வார்த்தையை எம்பெருமாள் தான்கேட்டு
சந்தோஷப் பட்டுக்கொண்டே சுவாமி நடந்தாரே
அடுத்த வனந்தனிலே அவரிருவர் போகையிலே
தாமரைத்த டாகத்தைச் சுவாமிகண் டேதுசொல்வார்
ஐயா பெரியவரே அமரர்க்கரி தானவரே
இந்த ஜலந்தானும் ஏதுக்கு ஆகுமென்றார்
துர்வாச மகரிஷியும் சொல்லுகிறார் பொட்டெனவே
தாமரைப் பொய்கையிலே ஸ்நானங்கள் செய்தாலும்
சபதபங் கள்செய்து தாகத்துக் குண்டாலும்
சிவனே யவனுகுஞ் செப்ப முடியாது
என்றுசொன்ன வார்த்தையை எம்பெருமாள் தான்கேட்டு
சந்தோஷப் பட்டுக்கொண்டே சுவாமி நடந்தாராம்
இருவரு மாகவே இணைந்து நடந்தாராம்
சூரிய வனந்தனிலே சேர்ந்தா ரிருவருமாய்

## பஞ்சபாண்டவர் வனவாசம்

பர்னசாலே மேலிருந்த பாண்டவர்கள் கண்டுவிட்டார்
மாயன் பெருமாளும் மாமுனி யானவரும்
வருகிரு ரென்றந்த மகராஜர் தானெழுந்து
திடுக்கிட்டுத் தான்பதைத்துச் சீக்கிரமாய்த் தானெழுந்து
எதிர்கொண்டு ஓடிவந்து இறங்கியே தெண்டனிட்டார்
சாஷ்டாங்க மாகவே சரணமென்று தெண்டனிட்டார்
கடுகி முடுகியே காட்டுத் தழையொடித்து
ஐந்தடுக்கு மெத்தையாக ஆசனம் போட்டார்கள்
இட்டதோ ராசனத்தில் ஏறி யிருவருமாய்
பச்சிலே மெத்தையிலே பதியக் கொலுவிருந்தார்
தக்கப் புகழுடைய தருமரவர் கூறுகின்றூர்
துர்யோ தனன்செய்த சூதுகளேக் கேட்டீரோ
நாடோ டிருந்தவென்னே நம்பவே தானழைத்து
விருந்தருந்த வாருமென்று விருந்தோலே தானனுப்பி
வருந்தி யென்னயழைத்து வஞ்சனேகள் செய்தானே
கொல்ல நினேத்தானே குருடன்மகன் சத்ராதி
வருகிற வழிதனிலே வசிகளேத் தான்புதைத்தான்
அதற்கும் பிழைத்தோமே ஆயரது புண்ணியத்தால்
வசநாவி நீர்பந்தல் வழியில்வைத்தான் மாபாவி
அதற்கும் பிழைத்தோமே ஆண்டவரே உம்மருளால்
பொய்க்குழி வெட்டியே பொற்சிங்கா தனங்களிட்டு
கொல்ல நினேத்தானே குடிகேடன் மாபாவி
அதற்கும் பிழைத்தோமே ஆயரது புண்ணியத்தால்
எண்ணெயிட்டுக் கொள்ளுமென்று எங்களேத் தானழைத்தான்
கொல்ல நினேத்தானே குடிகேடன் மாபாவி
அதற்கும் பிழைத்தோமே ஆயரது புண்ணியத்தால்
நீரிற் கழுநாட்டி நீராட வாருமென்றான்
குளத்தில் வசிநாட்டி குளித்திடப் போங்களென்றான்
அதற்கும் பிழைத்தோமே அரிராமர் புண்ணியத்தால்
உண்ணுகிற சாதத்திலே ஒப்பியே நஞ்சையிட்டான்
குடிக்கிற தண்ணீரில் கொலேக்காரன் நஞ்சையிட்டான்
கொல்ல நினேத்தாளே குடிகேடன் சத்ராதி
அதற்கும் பிழைத்தோமே ஆண்டவரே உம்மருளால்
அரசர் சபைநடுவே அம்பலத்தார் தங்கள்முன்னே
சொக்கட்டான் போட்டான்காண் சோழி விளேயாடி

பகடசா லைபோட்டுப் பந்தியங்கள் பேசினனே
நாடுகளுஞ் சீமைகளும் நகரமும் பேசினனே
அரசும் பறித்தானே அதிகார மும்பறித்தான்
பெரிய விலங்குமிட்டுப் பெருங்கிடங்கி லேயடைத்தான்
காற்று நுழையாத கல்லறைக் கிடங்கிலிட்டான்
அரசர் சபைநடுவே அம்பலத்தார் தங்கள்முன்னே
அறையி லிருந்தபெண்ணை அம்பலத்திற் கொண்டுவந்து
பாஞ்சாலன் பெற்றபெண்ணைப் பாவைபோ லழகியை
அரசர் சபைநடுவே அம்பல மேற்றிவைத்தான்
சொல்லாதுஞ் சொல்லியவன் துகிலுரிந்தான் மாபாவி
வாய்வரிசை யில்லாமல் வம்பாகப் பேசினனே
பார வனவாசம் பன்னிரண்டு வருஷமட்டும்
ஆரணியம் போயிருந்து அப்பா லொருவருடம்
அஞ்ஞாத வாசஞ்செய்து அப்பாலே வந்தக்கால்
ஊரில் உருமாறி யொளித்திருந்து வந்தக்கால்
காடு திரிந்துவந்தால் காவல்நகர் தாரேனென்றான்
பங்குள்ள பிரகாரம் பாதிநாடு தாரேனென்றான்
பார வனவாசம் பரதேசம் வந்துவிட்டோம்
எங்கள்-பொழுது தொலையுமோ பூமியர சாளுவமோ
என்று தொலையுமோ எக்காலம் சென்றிடுமோ
நாங்கள் சுகமாக நாட்டினை யாளுவமோ
எங்கள் விதிவசமும் எப்படியோ நாமறியோம்
பாதஞ் சரணமென்று பணிந்தாரே தருமராஜர்
மாயன் பெருமாளும் வாய்திறந் தேதுசொல்வார்
தலையி லெழுதினதை தள்ளிவைப்பா ரொருவருண்டோ
வரும்வினை வந்தாக்கால் மடியேந்த வேண்டாமோ
ஈச னெழுதினதில் எள்ளளவுங் குறையாது
என்று-பிரிய வசனத்தைப் பெருமா ளுரைத்தாரே
தக்க புகழுடைய தருமரவ ரேதுசொல்வார்
இந்த ரிஷியாரும் ஏதுவகை யாகவந்தார்
என்று மவர்கேட்க ஏதுசொல்வார் மாயவரும்
வந்த வருத்தத்தை மாயவரும் கேளுமென்றார்

என்றுசொல் லக்கேட்டு இயலான தருமராஜர்
துர்வாச மாமுனிக்குத் தோத்திரம் செய்வித்து
சொல்லுவார் வாய்திறந்து தூய தருமராஜர்
அடியேனைத் தேடியே ஆண்டவரே வந்தென்ன
கமலபதம் நொந்திடவே கால்நடையாய் வந்தீரே
செந்தா மரைப்பாதம் செம்புண்ணாய்ச் சிவந்ததுவோ
தேடிவந்த காரியத்தைச் செப்புமென்றார் மாமுனியை
துர்வாச மாமுனியும் சொல்லுகின்றார் வாய்திறந்து
குருகுல வம்மிசத்தில் குந்தியார் புத்திரரே
போஜனங் கேட்கவந்தேன் புகழ்பெரிய தருமரேநான்
தேவருக்கு மற்புதமாய் சிவனார்க்கும் பிரீதியாக
இப்போது போஜனங்க ளிட்டாலே யல்லாது
கல்லாய் சபிப்பேனென்றார் கனத்த ரிஷியாரும்
மெத்தப் பயந்தாரே வில்வேந்தர் தருமராஜர்
ஆயரைப் பார்த்துமல்லோ அதிக விசாரமிட்டார்
மடிந்து விடுங்காலம் வந்துதே யென்னசெய்வோம்
என்று புலம்புகையில் எம்பெருமா ளேதுசொல்வார்
வீமா மதகரியே வேல்வேந்தர் வாருமென்றார்
பருத்த வனங்களிலே பலாஇலை நீபறித்து
கருங்கல்லின் மேலாகக் காமதேனு பாலிருக்கும்
காராம் பசும்பாலைக் கடுகியே பேர்த்தெடுத்து
தாமரைப் பொய்கையிலே சலங்கொண்டு வாருமென்றார்
என்றுசொல்ல மாயன் எழுந்துநடந் தான்வீமன்
கடுகி முடுகியே காற்றாய்ப் பறந்துவந்து
காமதேனின் பாலையவன் கடுகியே பேர்த்தெடுத்து
பருத்த வனங்களிலே பலாஇலை தான்பறித்து
தாமரைப் பொய்கையிலே சலங்கொண்டு ஓடிவந்தான்
துர்வாச மாமுனியே சுவாமி யெழுந்தருளும்
கைக்குச் சலங்கொடுத்துக் கடுகவே தருமராஜர்
வட்ட மணைபோட்டு வந்தமருஞ் சுவாமியென்று
பலாஇலையில் போஜனத்தைப் பாங்காய்ப் படைத்தார்கள்
உபசாரம் பண்ணியே உண்ணுமையா சுவாமியென்றார்



பாண்டவர் துர்வாசரை உபசரித்து உண்ணச்சொல்லுதல்.

போஜனத்தை மாமுனியும் புசித்த பிறகாக
ஆயாசந் தீர்ந்தாரே அந்த ரிஷியாரும்
கையலம்பிக் கொண்டாராம் கனமகிழ்வு கொண்டாராம்
தாம்பூல மும்வாங்கிச் சந்தனமுந் தானணிந்து
ஐவரைக் கொல்லவந்த அந்தத்தூர் வாசரிஷி
தேவர்க ளருந்துகிற திவ்விய போஜனத்தை
போதப் படைத்தார்கள் புகழ்வேந்தர் பஞ்சவர்கள்
இப்படிப் பட்டவரை எப்படிக் கொன்றிடலாம்
என்று மனமகிழ்ந்து இராசரை வாழ்த்தினர்
ஐவராம் பாண்டவரை அந்தரிஷி வாழ்த்தினர்
ஐவரை யும்வாழ்த்தி ஆயரைத் தெண்டனிட்டு
இருங்க ளிருங்களென்று எழுந்து நடந்தாரே
கடுகி முடுகியே கரியமலை தான்தாண்டி
சூரிய வனந்தாண்டி சுருக்காய் வருகிறாராம்
காடுகள் தாண்டியே கரியமலை தான்தாண்டி
அஸ்தினா புரத்தை அடுத்தாரா மந்தரிஷி
துர்யோ தனனிருக்கும் துலங்குசபை தன்னில்வந்தார்
துர்யோ தனராஜன் சுருக்காகத் தானெழுந்து
அடிபணிந்து தெண்டனிட்டு ஐயா சரணமென்றான்
சிங்கா தனம்போட்டுச் சிறப்பாக வீற்றிரென்றான்
ஆசனத்தின் மேலாக அந்தமுனி வீற்றிருந்தார்
தூய முடிவேந்தன் துர்யோ தனன்கேட்பான்
ஐவரை யுங்கொன்று அதம்பண்ணிப் போட்டீரோ
கல்லாய்ச் சபித்தீரோ கடுகியே வந்தீரோ
என்றுபல கேட்டானே இதயம்கல் லானமன்னன்
துர்வாச மாமுனிவர் தோஷிமொழி கொள்ளாமல்
கோப மிகக்கொண்டு கொப்பனவே யேதுசொல்வார்
ஐவரையுங் கொல்லென்று அனுப்பினாய் பாதகனே
ஐவர்போ லுபசரணை ஆருமே செய்ததில்லை
தேவர்கள் தானருந்துந் திவ்விய போஜனங்கள்
போதப் படைத்தார்கள் பொன்னடியைத் தாம்வணங்கி
சரண மடைந்தார்கள் சந்தோஷ மாகிவந்தேன்

ஐவரையுங் கொல்லவென்று அனுப்பினாய் பாதகனே
உன்னுடைய வம்மிசத்தில் ஒன்றும் விளங்காது
ஐவரது கையாலே அனர்த்தமாய்ப் போகவென்று
சாபங் கொடுத்தாரே சமர்த்துள்ள மாமுனியும்
செப்பி நடந்தாரே தெய்வலோ கந்தனிலே
துர்வாச மாமுனியும் தெய்வலோ கந்தனிலே
அப்போது துர்யோதனன் அங்கே விசனமுற்று
எண்ணாத எண்ணமெண்ணி இருந்தான் துயரத்துடன்
ஐவருக் காகவே ஆய ரிருக்கும்போது
மாயன் பெருமாளும் வார்த்தைக ளேதுசொல்வார்
தூய முடிவேந்தன் துர்யோதன மன்னவனும்
தூய மனமுடைய துர்வாச மாமுனியை
அரவக் கொடியோனும் அனுப்பினா னும்மைக்கொல்ல
துர்யோதனன் சொற்படி துர்வாச மாமுனியும்
உம்மை-கொல்ல மனதாகிக் கோபித்து வந்தாரே
அதையறிந் துங்களைநான் ஆதரிக்க இங்குவந்தேன்
என்றுரைக்க மாயவரும் ஏதுரைப்பார் தருமருமே
உம்மைநம் பியல்லோ உயிர்கொண் டுலாவுகிறோம்
நீரே துணையல்லால் வேறு துணையுமுண்டோ
அடியாரைக் காக்கின்ற ஆதி பரம்பொருளே
ஏழைகளைக் காக்கின்ற எம்பெருமா ளாண்டவரே
பன்னிரண் டுவருஷம் பாரவனந் திரியுமட்டும்
ஏது வினைவருமோ எம்பெருமாள் நானறியேன்
இன்னமென்ன வஞ்சனையோ எம்பெருமாள் நானறியேன்
வரும்வினை யாவுக்கும் மாயவரே துணைவாரும்
அரக்குமா மாளிகையில் ஐவரைக் காத்தீரே
அபயமென்ற துரோபதைக்கு அட்சயத் துகில்கொடுத்தீர்
உம்மகிமை யாரறிவார் உலகளந்த மாயவரே
சரணஞ் சரணமென்று தாள்பணிந்தார் பஞ்சவர்கள்
சாஷ்டாங்க மாகவே சரணமிட்டார் பஞ்சவர்கள்
மாயன் பெருமாளும் மனது மிகக்குளிர்ந்து
ஐவர்கள் மேல்பின்னும் அதிகப் பிரியமுடன்

சந்தோஷப் பட்டுமாயன் சால மனங்குளிர்ந்தார்
மாயன் பெருமாளும் வார்த்தைக ளேதுசொல்வார்
இந்த வனந்தாண்டி இனியவனம் போங்களென்றார்
மற்றொரு வனத்திலேதான் மன்னரே போங்களென்றார்
அடுத்த வனந்தனிலே ஐவரும்போய் வாசம்பண்ணார்
தெற்குமேற் குக்கிழக்கு சேனதூரஞ் சென்றாலும்
வடக்கு திசையிலேதான் மன்னவரே போகவேண்டும்
ஏதுவினை வந்தாலும் என்னை நினைத்திடுங்கள்
என்றே முடித்துசொல்லி எம்பெருமாள் தாமெழுந்தார்
வட்டமிடுங் கருடனேறி மாயவரும் போனாரே
காடு செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
அழகான துவாரகைக்கு ஆண்டவரும் போய்நடந்தார்

முதலாவது சூரியன்வனம் முற்றிற்று.

---

## இரண்டாவது இராமரிஷி வனம்.

பின்னிரண் டாம்வருஷம் பிறந்தது பஞ்சவர்க்கு
அந்த வனந்தாண்டி அப்பாலே போகலுற்றார்
இராம ரிஷிவனத்தில் ஏகினார் பஞ்சவர்கள்
கூடை தலைமேலே குடிவாழ்க்கை கானகத்தில்
முன்னை முசுட்டையும் முகிழ்விரிந்த தூதுவளை
பண்ணை கலவையும் பறட்டை புளிக்கரணை
தின்று திரிகிறார்கள் தேசந் திரிவார்போல்
ஐந்தடுக்குப் பர்னசாலை அவ்வனத்தி லுண்டுபண்ணார்
ஏழடுக்குப் பர்னசாலை எழிலாக உண்டுபண்ணார்
பர்னசாலை மேலாகப் பஞ்சவர்கள் வீற்றிருந்தார்
அந்த வனத்திலே ஐவர்வன வாசம்செய்தார்
அந்த வனந்தனிலே அழகான இராமரிஷி
தவசிற் பெரியவரும் தம்பிரா னனவரும்
சரணங்கள் பண்ணினாலே சாதங் கறியிடுவான்

போஜன மிட்டுபின்பு புஷ்பங்கள் தான்கொப்பான்
காவி யுடையுடனே கைமணியுந் தான்கொடுப்பான்
புலித்தோலு மாசனமும் பொருந்தவே தான்கொடுப்பான்
சரண மடைந்து சாமிபோய் வாருமென்பான்
தாதர் பெரியவர்கள் தப்பெடுத்து வந்தாலும்
அரிராமா வென்றுசொல்லி அனந்தம்பேர் வந்தாலும்
இராமாராமா வென்றசத்தம் இராமரிஷி கேட்டாலும்
அரிகரி யென்றசத்தம் அந்தரிஷி கேட்டாலும்
கோவிந்தா வென்றசத்தம் குருமுனி கேட்டாலும்
கோபித்துக் கண்சிவந்து கொப்பெனவே தானெழுந்து
சீறி வரும்புலிபோல் சிவ்வெனவே தானெழுந்து
கையில் தடியெடுத்துக் கடுகி யடிப்பானே
வாரி யெடுத்துமவர் வல்லுயிரைக் கொள்ளைகொள்வான்
அப்படி யாகவே அநேகநா ளிருக்கும்போது
மாயன் பெருமாளும் வார்த்தை யதுவறிந்து
தள்ளாடுங் கிழவனைப்போல் தானே வடிவெடுத்தார்
பரந்த முகம்நிறைந்த பழுத்த மரம்போல
தாத வடிவாக சுவாமி வருவாராம்
இராம ரிஷியிருக்கும் இனிய வனந்தனிலே
அந்த ரிஷியிருக்கும் ஆச்சிரம முட்புகுந்து
ஹரிஓம் ஹரிஓமென்று அடித்தாராந் தப்பதனை
சாரங்க பாணியென்று சங்குதனை தானூதினர்
அந்தச்சத்தந் தான்கேட்டு அரியரிஷி தானெழுந்து
கோபித்துக் கண்சிவந்து கொப்பெனவே தானெழுந்து
யானையின் மேலேதான் ஆண்சிங்கம் புகுந்தாப்போல்
தாத னொருவனையுந் தடியா லடிக்கலுற்றான்
மாறி யடித்தானே மகத்தான இராமரிஷி
அந்த-அடிபட்டுக் கொண்டு அரிகரி இராமாவென்றார்
மறுகா லொருதரமும் மாறினன் இராமரிஷி
அவ்வடியும் பட்டுக்கொண்டு அரிகரி இராமாவென்றார்
அவன்-மாறி யடித்தானே மாயனென் றறியாமல்
சுழற்றி யடித்தானே சுவாமியென் றறியாமல்

அவ்வடியும் பட்டவுடன் அரிராமர் கோபமாகி
கண்கள் சிவந்துமல்லோ காந்தாள மூமெழும்பி
ஆகாய மாகவே ஆயர் வளர்ந்தாரே
விசுவரூப மாகவே மேகவண்ணர் தான்வளர்ந்தார்
கண்டானே இராமரிஷி கால்கை தடுமாறி
அடித்தொடை யுங்காலும் அதிர விடவிடென்ன
மெத்தப் பயந்து விழுந்தா னடிபணிந்தான்
சுவாமி சரணமென்று தாள்பணிந்தான் இராமரிஷி
மூக்காலுந் தெண்டனிட்டு முடிவணங்கி போற்றிசெய்தான்
அப்போது மாயவரும் அருளாள ரேதுசொல்வார்
மாயன் பெருமாளும் வார்த்தைக ளேதுசொல்வார்
போ ஜனங்கள் போடுவதும் போதப் பணிவதும்
மயேசுவர ரடியார்க்கு வணங்குவதே யல்லாது
என்ற னடியாரை இகழ்ச்சியாய்ப் பேசுவதும்
மாறி யடித்துமே வாயத்தம் பண்ணுவதும்
அகந்தைகள் பண்ணுவதும் ஆகுமோ இராமரிஷி
ஆகாத காரியங்கள் அனர்த்தங்கள் தேடிக்கொண்டீர்
இவ்வார்த்தை கேட்டுமே இயலான இராமரிஷி
மெத்தப் பயமாகி விஷ்ணுவைத் தான்பணிந்து
கைகட்டி வாய்புதைத்து கடுகியே யேதுசொல்வான்
ஆதி சிவன்பாதம் அடியே னறிந்திருப்பேன்
உம்முடைய பாதத்தை ஒருகாலும் நானறியேன்
தேடியுங் காணுததால் தேவரீ ரும்பாதம்
ஆண்டவரே யுமைக்காண அநேகநாள் தவமிருந்தேன்
கோரித் தவமிருந்தும் கோவிந்தா கண்டதில்லை
ஆகையி னுலேதான் ஆயர் வுமைக்காண
உம்முடைய அடியாரை உதாசினம் பண்ணுவது
இந்த விதமாக இருந்தேன் நெடுநாளாய்
என்வினை யகன்றதின்று எம்பெருமா ளும்மாலே
பாதமதைக் கண்டபோதே பாவங்கள் போக்கிவிட்டேன்
அஞ்சிப் பயந்தவனும் ஆசாரம் பண்ணினுன்
காயாம்பு வண்ணருமே கரியமா லேதுசொல்வார்

அகந்தைகள் செய்ததினால் அனேகபாவ மூன்றனுக்கு
சாபம் பிடியுமென்றார் சௌரி பெருமாளும்
ஆயிரம் வருஷமட்டும் அரவமாய்ப் போகவென்றார்
அப்போது இராமரிஷி ஆயரை யேதுகேட்பார்
எம்பெருமா ளிச்சாப மெப்போது தீருமென்றார்
அப்போது மாயவரும் அருளாளர் ஏதுசொல்வார்
ஐவராம் பாண்டவர்கள் ஆரணியம் வருகிறார்கள்
வனவாசம் வருகிறார்கள் மன்னர்பஞ்ச பாண்டவர்கள்
தருமர்தம்பி நால்வோரைத் தாமெடுத்து விழுங்கிடுவீர்
வெற்றி மதயானை வீம னர்ச்சுனரை
நகுலர் சகாதேவர் நரபாலர் நால்வரையும்
எடுத்து விழுங்கியே இருக்கின்ற வேளையிலே
அர்ச்சுனன் வில்லாலுன் அங்கம் பிளந்துவிடும்
அந்தச் சமயத்தில் அங்கோநான் வந்திருப்பேன்
நான்வந் திருந்துனக்கு நற்காட்சி தருவேனென்றார்
அப்போது இராமரிஷி ஆயரிட்ட சாபத்தினால்
அரிராமர் சாபத்தால் அப்பாம்பு முண்டாச்சு
அநேகநா ளாய்பாம்பா யவ்வனத்தி லேயிருக்கும்
அதையறியார் பஞ்சவர்கள் அவ்வனத்தி லேயிருந்தார்
இராம ரிஷிவனத்தில் ராஜாக்கள் தானிருந்தார்
பர்னசாலை யுண்டுபண்ணிப் பஞ்சவர்க ளங்கிருந்தார்
காயும் பழங்களும் கந்தமூ லங்களுண்டு
ஐவரு மங்கேயே ஆலித் திருக்கும்போது
தெற்குமேற் குக்கிழக்குத் தேடிக் கனிபறிப்பார்
வடக்கு திசைநோக்கி மன்னவர்கள் போவதில்லை
அவ்வனத்தி லேயொருநாள் அடங்காத வீமனவன்
மெத்தவகங் காரமுடன் வீமனுமங் கேகினைவாய்
கடுகி யெழுந்திருந்தான் கனிகள் பறிக்கவென்று
வடக்குத் திசைதனிலே மாயன்போ காதேயென்றார்
காயுங் கனியுமங்கே கடுகியே கிட்டாதோ
வேண்டிய ராட்சதர்கள் வேத முனிகளுண்டோ
அவ்விடத்தி லதிசயங்க ளெல்லா மறிவோமென்று

கடுகி யெழுந்திருந்தான் கட்டழகன் வீமனவன்
சல்லடங்கள் போட்டுப்பின் தட்டி வரிந்துகட்டி
தட்டி வரிந்துகட்டி தாமரைப்பூச் சுங்குவிட்டு
கையில் கதையடுத்துக் கடுகியே தானடந்தான்
வடக்குத் திசைநோக்கி வாரான் மதகரியான்
காயுங் கனியுமங்கே கடுகப் பழுத்திருக்கும்
அவ்விடத்தி லேகனியும் அனேகம் பழுத்திருக்கும்
அருநெல்லி சிறுநெல்லி அழகான தமர்த்தைகளும்
கொச்சித் தமர்த்தையுடன் குடகு பலாப்பழமும்
மாங்கனியுந் தேங்கனியும் வண்ணப் பலாப்பழமும்
மட்டில்லா பழங்களெல்லாம் வனத்தில் சொரிந்திருக்கும்
அளவில்லாக் கனிகளெல்லாம் அவ்வனத்தில் தாமிருக்கும்
கண்டானே வீமனவன் கண்கள் மிகக்குளிர்ந்தான்
பார்த்தானே வீமனவன் பார்வையிரண் டுங்குளிர்ந்தான்
மெத்தக் கனிகளிங்கே வேணதெல்லாந் தாமிருக்க
உண்டு பிழைப்பார்க ளென்றல்லோ வுலகளந்தார்
தின்று பிழைப்பார்க ளென்று திருமாலும்
வடக்குதிசை போகாதே யென்ருரே மாயவரும்
சுவாமி பெருமாளவர் சந்நினைவைக் கண்டேனே
என்று மனத்திலெண்ணி ஏங்கி நடந்தானே
எண்ணுது மெண்ணினுன் இயலான வீமனவன்
அந்த வனத்தி லவனுக வுள்நுழைந்து
மரத்தின்மே லேறினுனே மதவீம ராசனவன்
உச்சியிற் கனிபறித்து உண்டுபசி தீர்ந்தான்காண்
காயுங் கனிபறித்து கடுகவே தான்புசித்தான்
வாயாரத் தின்றுமே வயிருரத் தான்புசித்தான்
அண்ணற்குந் தம்பியர்க்கும் அனேகங் கனிபறிக்க
அருநெல்லி சிறுநெல்லி அழகான தமர்த்தையுடன்
சோலைப் பலாக்கனியும் தூயவி ளாங்கனியும்
கிளையை வளைப்பானுங் கிள்ளியொரு பழம்பறிப்பான்
செடியை வளைப்பானும் சிவந்தபழம் பறிப்பானும்
அங்கங் கேகனிக ளனேகம் பறிக்கையிலே

அடுத்த புதரிலேதா னரவ மெழுந்திருந்து
சரிந்த வனத்தினிலே சர்ப்ப மெழுந்திருந்து
மதவீம ராசாவை மலைப்பாம்பு கண்டதுகாண்
தாராமுகன் மலைப்பாம்பு சந்தோஷ மாகவேதான்
மனது மிகக்குளிர்ந்து மதகரியா னருகில்வந்து
வாயைத் திறந்துமங்கே மதவீம னைப்பிடித்து
எடுத்து விழுங்கிற்று இயலான வீமனைத்தான்
பாம்பென்று பார்த்ததில்லை பாரமத வீமனவன்
சர்ப்பமெனப் பார்த்ததில்லை சமர்த்துள்ள வீமனவன்
கால்கொண்ட தூரமட்டுங் கடுகெனவே தானடந்தான்
விசைகொண்ட தூரமட்டும் வீசி நடந்தானே
வழியுந் தெரியாமல் வந்தவிடங் காணாமல்
பாதை தெரியாமல் பாம்பென் றறியாமல்
பெருங்குடலில் சார்ந்துகொண்டான் பெருமான் நிகர்வீமன்
பாம்பென் றறிந்தானே பார முடிவேந்தன்
சர்ப்பமென் றறிந்தானே சமர்த்துள்ள வீமனவன்
எண்ணாது மெண்ணியே இருந்துவி சாரமிட்டான்
அண்ணரைத் தம்பியரை அல்லவரை நான்பிரிந்து
கூடப் பிறந்தவரை கொற்றவரை நான்பிரிந்து
ஒக்கப் பிறந்தவரை உடற்பிறப்பை நான்பிரிந்து
மாளும் விதியின்றோ வந்தே னறியாமல்
ஆகையி னாலேதான் ஆயர்போ காதேயென்றார்
அறியாமல் வந்தினா லகப்பட்டே னென்னசெய்வேன்
மாயன்சொல் கேளாமல் வந்துவிட்டே னிவ்வனத்தில்
அண்ணர் தருமராயர் அழுது புலம்புவரே
தம்பியரைத் தேடியவர் தானே புலம்புவரே
அறியாமல் வந்தேனா னண்டவரே யென்னசெய்வேன்
ஆயரே கோவிந்தா ஆதிமூலம் வந்தருளும்
மாயரே கோவிந்தா மகாதேவா காத்தருளும்
என்று புலம்பி யிருந்தானே வீவனவன்
தக்க புகழுடைய தருமரவ ரென்னசெய்வார்
அர்ச்சுனன் கனிபறித்து அண்ணரண்டை வந்தபின்பு

வாய்திறந்து தருமராயர் மதிமயங்கி யேதுசொல்வார்
வெற்றி மதயானை வீமன் கனிபறிக்க
மதவீமன் போயுமல்லோ மன்றுநெடும் போதாச்சு
போன விடத்திலே புதுமையொன்றும் நானறியேன்
மதவீமன் போனசெய்தி வார்த்தையொன்றும் நானறியேன்
அண்ணரைத் தேடியே அழைத்தோடி வாராயோ
ஓடி யழைத்துமே ஒருநொடியில் வாராயோ
கண்டதும் அழைத்துமே கடுகெனவே வாராயோ
அப்போ தர்ச்சுனனும் ஆணழக னேதுசொல்வான்
அப்படியே போய்வாரேன் அடியேன் சரணமென்று
சரணம் சரணமென்று சாய்த்தான் திருமுடியை
முக்கால் வலம்வந்து மூன்றுமுறை தெண்டனிட்டான்
போகவிடை தாருமென்று போர்விசயன் தெண்டனிட்டான்
போய்வாரு மென்றுசொல்லிப் போக விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்தானே விசயப் பெருமாளும்
சல்லடம் தான்போட்டு தட்டி வரிந்துகட்டி
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
பில்லே *சமுதாடு பிகுவெடுத்த வொட்டியாணம்
பட்டுதட்டி கட்டியல்லோ பாலாவுந் தான்சொருகி
அம்புவில்லுந் தானெடுத்து அர்ச்சுனன் வாரானே
காடு செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறு சுனைதாண்டி யதிகவனந் தான்தாண்டி
சில்லென்ற காடும் செடியும் மலைதாண்டி
காலடியைத் தேடிக்கொண்டே கடுகெனவே தான்வருவான்
பார வனங்களிலே பார்த்திபன் வாரானே
அவ்வனத்தி லேகனிகள் அனேகம் பழுத்திருக்கும்
கண்டானே அர்ச்சுனனும் காவலனு மேதுசொல்வான்
காலடியைக் கண்டோமே காவலனைக் காணோமே
எங்கேயும் காணோமே இயலான வீமனைத்தான்
கூவி யழைப்போமென்று கொற்றவன் தான்நினைந்தான்
அண்ணரே வீமரென்று அழைத்தானே வாள்விசயன்

* சமுதாடு — ஓர் ஆயுதம்.

கூவி யழைக்கலுமே குறல்கேட்டு வீமனுக்கு
அர்ச்சுனன் தேடிவந்தே அழைக்கிறு னென்றுசொல்லி
மாலே முடியான் மதவீம னேதுசொல்வான்
காளே யர்ச்சுனரே கடுங்காளே தூரநில்லும்
அருகேநீ வாராதே அர்ச்சுனு தூரநில்லும்
கிட்டநீ வாராதே எட்டநில்லும் அர்ச்சுனரே
இங்கேநீ வாராதே இறந்திடுவீர் தம்பியரே
தூரநில்லும் அர்ச்சுனு சேரவந்தால் மோசமடா
ஏதோ பெரும்பாம்பு என்னே விழுங்கினது
அரவத்தின் வாயிலேநா னகப்பட்டுக் கொண்டேனப்பா
இனிப்பிழைப்பே னென்றுநீ எண்ணுதே தம்பியரே
தப்பிப் பிழைப்பேனென்று தம்பிநீ எண்ணுதே
மற்றும் பிழைப்பேனென்று எண்ணுதே மன்னுநீ
ஆயாச மாகாதே அண்ணருடன் சொல்லுமப்பா
மனவருத்தங் கொள்ளாதே மன்னருக்குச் சொல்லுமப்பா
தக்க புகழுடைய தருமாநம தண்ணரவர்
வெளுத்ததைப் பாலென்பார் வெள்ளமதை நீரென்பார்
பொய்சொல்லான் புண்ணியவான் புகழ்வேந்த ரண்ணருக்கு
சிந்தை கலங்காமல் தேறுதலே சொல்லுமப்பா
மனது கலங்காமல் வார்த்தைகளேச் சொல்லுமப்பா
வனவாசந் தீர்ந்தபின்பு வையகத்தே போனபின்பு
சேனே பரிவாரம் துர்யோதனன் பாளேயத்தை
செண்டாட்ட மாட்டிவைத்துச் சேனேகளேக் கொன்றழித்து
கர்னன் சகுனியையுங் கண்டதுண்ட மாகவெட்டி
துர்யோ தனன்முதலாச் சோதரர் நூற்றுவரை
மற்றும் படைகளெல்லாம் மண்ணேடே சாய்த்துவெட்டி
அண்ணருக்குப் பட்டங்கட்டி அரசாண் டிருங்களப்பா
தருமருக்குப் பட்டங்கட்டித் தரணியை யாண்டிடுங்கள்
எப்போதும் போலே இராச்சித்தை யாண்டிடுங்கள்
பெற்ருள் வயிறதனில் இட்டேன் பெருநெருப்பை
குந்தியம்மாள் தன்வயற்றில் கொடியதணல் வைத்தேனே
எழுத்துப் படியல்லால் எவரால் விலக்கவசம்

தலையி லெழுத்துத்தான் தவருது தம்பியரே
அன்றெழுதுங் கர்த்தனவன் அழித்தெழுத போவதில்லை
விதிவசத்தை யாராலும் வெல்லவே முடியாது
இனிம்பிழைப்பே னென்றுநீ எண்ணுதே தம்பியரே
கிட்டநீ வாராதே எட்டநில்லு தம்பியரே
போய்வாரு மென்றுனே போர்க்கடங்கா வீமனவன்
அவ்வார்த்தை தான்கேட்டு அர்ச்சுனன் துக்கமுற்று
கண்ணீரைச் சோரவிட்டுக் காளை யர்ச்சுனனுர்
மெத்த சலித்துடலம் விசாரம் பெரிதாகி
அண்ணுவே யென்வீமா அடியே னொருவார்த்தை
பாம்பின் வயிற்றிலேநீர் பாராமல் மாண்டதுவும்
அரவத்தின் வயிற்றிலேநீர் ஆணழகா மாண்டதுவும்
அண்ணன் தருமருடன் அடியே னெவார்த்தை
உரைத்தேனே யானுக்கால் உள்ள மிகப்பதறி
துள்ளிப் பதைத்துயிரை துடிதுடித்து விட்டிடுவார்
எப்படி நானுரைப்பேன் என்னுடைய அண்ணுவே
போக மனம்வருமோ போர்வேந்தே அண்ணுவே
உன்னைவிட்டு நான்பிரிந்து உயிருந் தரிப்பேனே
இப்பெரிய பாம்புதனை இக்ஷணத்திற் கொன்றிடுவேன்
வயிற்றைக் கிழித்திடுவேன் வந்துவிடு மண்ணுவே
என்றே யெழுந்தானே எழில்சே ரர்ச்சுனனும்
வில்வளைத்து நாரிபூட்டி வில்லைக்குணத் தொனிசெய்து
அம்பருத் தூணியிலே அஸ்திரம் எடுக்கையிலே
பார மலைப்பாம்பு பார்த்ததே அர்ச்சுனனை
கான மலைப்பாம்பு கண்டதே அர்ச்சுனனை
அப்போது மலைப்பாம்பு ஆவலுடன் ஓடிவந்து
அர்ச்சுனரைத் தான்பார்த்து ஆவலுடன் ஓடிவந்து
வாள்விசய னைப்பார்த்து வாயைத் திறந்துவந்து
எடுத்து விழுங்கிற்று இயலான அர்ச்சுனனை
பார்த்தனெனு மர்ச்சுனனை பாம்பு விழுங்கியது
எடுத்து விழுங்கியது ஏப்பம்விட்டுத் தானிருக்கும்
அப்போது வில்வளைத்த அர்ச்சுனனு மேதுசெய்தான்

அரவத்தின் தன்வயிற்றில் அர்ச்சுனனும் தான்விழுந்தான்
அண்ணுவே அண்ணுவே அடியேனும் வந்துவிட்டேன்
நானுமிங்கே வந்துவிட்டேன் நலம்பெரிய அண்ணுவே
அண்ணன்தரும ராஜருக்கு ஆர்போ யுரைப்பார்கள்
எழுத்துப் படியல்லோ இருவருக்கு மொன்ருச்சு
என்செய்வே னென்செய்வே னென்று புலம்புகையில்
வெற்றி மதயானே வீமனவ னேதுசொல்வான்
வில்விசயா வேதன் விதித்த விதிப்படியே
என்றே யிருவருமா யிருந்து புலம்புகிருர்
அனேக நெடும்பொழுது ஆன பிறகாக
தக்க புகழுடைய தருமரவ ரேதுசொல்வார்
தம்பி நகுலாநீ தாம முடியானே
வெற்றி மதயானே வீமனேத் தான்தேடி
போனதோ ரர்ச்சுனனேப் பின்னேவரக் காணேனே
இன்னம் வரக்காணேன் ஏதொன்றும் நானறியேன்
இக்காட்டில் ராட்சதர்கள் எத்தனேயோ கோடியுண்டு
எவரோடே சண்டை யிடுகிரு ரென்றறியேன்
காணவும் போகிறேனே கட்டழகர் தம்பியரை
பார்க்கவும் போகிறேனே பார்மன்ன ரிருவரையும்
தேடி யழைத்துச் சீக்கிரம் வருவீரோ
பார்த்தே அழைத்துப் பரிநகுலா வருவீரோ
என்றே உரைத்தங்கே எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்
இவ்வார்த்தை தான்கேட்டு எழுந்தான் நகுலனுமே
பட்டுதட்டி ஒட்டியாணம் பசும்பொன்னுற் சமுதாடும்
நீண்டிடுங் கால்களுக்கு நெருஞ்சிப்பூச் சல்லடமாம்
மண்டியிடுங் கால்களுக்கு மாதளம்பூச் சல்லடமாம்
தூக்கிவைக்குங் கால்களுக்குத் துத்திப்பூச் சல்லடமாம்
சல்லடங்கள் போட்டுமேலே தட்டி வரிந்துகட்டி
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூங் சுங்குவிட்டு
தன்னு யுதங்களேயே தானெடுத்துச் சீர்நகுலன்
காடு செடிதாண்டி கரியமலே தான்தாண்டி
செந்நாய் புலிகரடி சீறும் வனந்தாண்டி

காலடி யைப்பார்த்து கடுகியே தேடினபின்
அக்கான கந்தனிலே ஆராய்ந்து தேடினபின்
அண்ணாவே யென்வீமா அர்ச்சுனா யென்றழைத்தான்
கூவி யழைத்தானே கோடை நகுலனுமே
அழைத்தகுரல் கேட்டதங்கு அர்ச்சுனற்கும் விமனுக்கும்
வெற்றி மதயானை வீமனு மேதுசொல்வான்
ஆணழகுமன்னன் அர்ச்சுனனு மேதுசொல்வான்
தம்பீ நகுலாவோ தாம முடியானே
அண்ணனையும் என்னையும் அரவம் விழுங்கினது
மலைப்பாம்புக் கிரையானோம் மன்னவனே தம்பியரே
கிட்டநீ வாராதே எட்டநில்லு மென்பிறப்பே
சேரநீ வாராதே தூரநில்லு மென்பிறப்பே
அண்ணருக்குப் போய்சொல்லும் அரவம் விழுங்கினதாய்
அஸ்தீனா புரத்துக்கு அண்ணாவைக் கூட்டிப்போய்
துர்யோ தனனுடனே சொன்னாலே செய்திகளை
அர்ச்சுனரை விமரை அரவம் விழுங்கிற்றென்றால்
மெத்த மகிழ்ந்திடுவான் விஷநாகங் கொண்டவனும்
தருமாபுர முள்ளதெல்லாம் தருமரை யாளுமென்பான்
எப்போதும் போல்நீங்க ளிராச்சியத்தை யாண்டிருங்கள்
இனியும்-நாங்கள் பிழைப்போமென்று எண்ணாதீர் தம்பியரே
இவ்வார்த்தை தான்கேட்டு ஏதுசொல்வான் நகுலனுமே
அண்ணரே நீர்கேளும் அரவத்தைக் கொல்லுகிறேன்
வெட்டி யெறிகிறேன் வெளிப்படுங்க ளண்ணன்மாரே
உங்களை விட்டெனக்குப் போக மனம்வருமோ
விட்டுப் பிரியவே வேறு மனம்வருமோ
அண்ணார் வயிற்றிலே அனலைச் சொரிவேனோ
சிறுவன்போய்ச் சொன்னாலே சீவனை விட்டிடுவார்
மாள நினைப்பாரே மதிகேடு வந்துவிடும்
போக மனம்வருமோ புண்ணியரே யென்றனுக்கு
அவ்வார்த்தை தான்கேட்டு அர்ச்சுன னேதுசொல்வான்
தலையி லெழுதினதை தள்ளிவைக்கப் போகிறீரோ
ஏட்டி லெழுதினதை யெடுத்தெறியப் போகிறீரோ

வரும்வினைகள் வந்தாலே மடியேந்த வேண்டாமோ
அயனெழுத் தவ்வளவு ஆகையால் மாண்டுவிட்டோம்
இனிநாம் பிழைப்போமென் றெண்ணுதீர் தம்பியரே
மற்றும் பிழைப்போமென்று மன்னவரே யெண்ணுதீர்
போடா நகுலாவென்று புகன்று னர்ச்சுனனும்
செப்பும் மொழிகேட்டுச் சீராய் நகுலனுமே
இப்பாம்பை வெட்டி யெறிகின்றே னிப்போது
பாம்புதனைக் கொல்வேனென்று பட்டா வுருவிநின்றான்
பார்த்தது அப்பாம்பு பாரமுடி மன்னவனை
கண்திறந்து பார்த்தது கடுக மலைப்பாம்பு
வாயைத் திறந்தவனை வாரி விழுங்கினது
பாம்பின் வயிற்றிலேதான் பரிநகுலன் போய்விழுந்தான்
அண்ணுவே யென்னையும் அரவம் விழுங்கிற்றே
என்னையுங் கூட எடுத்து விழுங்கிற்றே
உங்க ளுடனுக ஒருவனுஞ் சேர்ந்தேனென்றான்
மூவருக்கும் ஒரெழுத்தாய் முடிந்ததே என்னசெய்வோம்
அண்ணரைத் தம்பியரை ஆரணங்கைக் கையைவிட்டோம்
என்று புலம்பியே இருக்கின்ற வேளையிலே
வில்லாளி பார்த்தனுமே வீமனுமே யேதுசொல்வான்
அப்போதே சொன்னேனே தப்பு வருமென்று
என்வார்த்தை கேளாமல் இங்குவந்தீர் தம்பியரே
வந்த விடந்தனிலே வல்வினையைக் கண்டீரோ
என்றே யவர்கள்சொல்லி யிருந்து விசாரமிட்டார்
இப்படி யாகவே இருக்கின்ற வேளையிலே
பலநாழி சென்றபின்பு பார்த்திபர் தருமராஜர்
மெத்தவி சாரப்பட்டு வெகுவாய் மனங்கலங்கி
சகாதேவ னைப்பார்த்து தரும ருரைக்கலுற்றார்
வீமன்கனி பறிக்கப்போய் வெகுநேர மாச்சுதப்பா
அழைத்தோடி வாருமென்று அர்ச்சுனரைப் போகவிட்டேன்
அர்ச்சுனர் தேடிப்போய் அநேகநாழி கையாச்சு
போனதோ ரர்ச்சுனனும் பின்புவரக் காணேனே
நகுலனைப் போகவிட்டு நம்மவரைப் பாருமென்றேன்

காளை நகுலனுமே கடுகவரக் காணேனே
செத்தார் பிழைத்தாரோ செய்தி தெரியவில்லை
மாண்டாரோ யானறியேன் மன்னவனே என்னசெய்வேன்
ஆரோடே சண்டை அமரது செய்கிருரோ
எவரோடே சண்டை ஏடாகூ டங்களுண்டோ
அவர்களைப் பார்த்துநீ யழைத்தோடி வாராயோ
ஓடி யழைத்துநீ ஒருநொடியில் வாராயோ
கண்டு அழைத்துநீ கடுகெனவே வாராயோ
அண்ண ருரைகேட்டு அழைத்துமே வாராயோ
அப்போது சகாதேவன் ஆணழகன் தானெழுந்து
சல்லடங்க ளிட்டுமல்லோ தட்டி வரிந்துகட்டி
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
கச்சை வரிந்துகட்டிக் கருங்கச்சை சுங்குவிட்டு
ஆயுதந் தானெடுத்து அடைவாய் நடக்கலுற்ருன்
காலடியைத் தேடியேதான் கடுகி நடக்கலுற்ருன்
காடுஞ் செடியுங் கனத்தமலை தான்தாண்டி
ஆறுஞ் சுனையு மதிகவனந் தான்தாண்டி
சில்லென்ற காடுஞ் செடியும்வனந் தான்தாண்டி
தேடியே வாரானே திசைதோறுங் கானகத்தில்
எங்கெங்குந் தேடினுனே இனியவிட மாராய்ந்தான்
கண்ணுலே கண்டதில்லை காளைக ளானவரை
பாரா விடங்களில்லை பாரமுடி ராஜர்களை
தேடியே வந்துமவன் திகைத்தாற்போல் நின்றுவிட்டான்
அடியளந்த மாயவரே ஆதிமூலம் வந்தருளும்
அண்ணு மதவீமா அருச்சுனரே சீர்நகுலா
(என்று) கூவி யழைத்தானே கொற்றமன்ன வீரியனும்
கூவி யழைத்தகுரல் கேட்டது மூவருக்கும்
ஏன்காண் சகாதேவா எங்குவந்தீர் தம்பியரே
அரவம் விழுங்கினது ஆணழகர் மூவரையும்
தூரநில்லுந் தம்பியரே சேரநீ வாராதே
எட்டநில்லுந் தம்பியரே கிட்டநீ வாராதே
அரவம் விழுங்கினதாய் அண்ணருக்குச் செய்திசொல்லு

(நீ) அழுது புலம்பாதே அண்ணரைக் கூட்டிப்போய்
அஸ்த்தினு புரிக்கு அடைவுடனே போய்ச்சேரும்
வீமராருச்சுனரை மிக்க நகுலரையும்
அண்ணன்மார் மூவரையும் அரவம் விழுங்கினதாய்த்
திரியோ திரனுடனே செய்திநீ சொன்னுலே
சந்தோஷ மாவானே சர்ப்பக் கொடியோனும்
மெத்த மகிழ்ந்திடுவான் விடநாகங் கொண்டவனும்
தருமா புரத்தையல்லோ சர்ப்பக்கொடி யோன்கொடுப்பான்
சீமை தருவானே சிறந்த துரைத்தனமும்
பூமி தருவானே பொல்லாச் சுயோதனனும்
அண்ணரும் நீருமே அவ்வரசை யாண்டிருங்கள்
போங்காணுங் தம்பியரே புகழ்பெரிய ராசாவே
என்று மவருரைத்து இருக்கின்ற வேளையிலே
இவ்வார்த்தை தான்கேட்டு இளைய சகாதேவன்
அண்ண ருரைகேட்டு ஆணழக னேதுசொல்வான்
மன்ன ருரைகேட்டு மறுவார்த்தை யேதுசொல்வான்
போயுரையு மென்றுசொல்லி புண்ணியரே சொன்னீர்கள்
புகழ்வேந்த ரண்ணருக்குப் போய்நா னுரைத்தாக்கால்
சொன்னேனே யாமாகிற் சொர்க்கபதி சேர்ந்திடுவார்
இவ்வார்த்தை தான்கேட்டு இன்ன மிருப்பாரோ
மூவரைப் பறிகொடுத்து முடிசூட்டி யாளுவரோ
(அவர்) செத்து மடிந்திடுவார் சிவலோகஞ் சேர்ந்திடுவார்
மாண்டு மடிந்திடுவார் வைகுந்தஞ் சேர்ந்திடுவார்
சென்றுநான் சொன்னுலே சீவன் விடுவாரே
துடித்த புழுப்போலே துள்ளி விழுவாரே
அடித்த மயில்போலே அலறி விழுவாரே
சாகத் துணிவாரே தர்மலிங்க ரண்ணுவும்
போகத் துணிவாரே பொறுமையுள்ள தர்மலிங்கம்
எப்படிக்குப் போயுரைப்பேன் என்னுடைய அண்ணர்களே
என்று சகாதேவன் ஏங்கிப் புலம்பலுற்றுன்
அடியற்ற மரம்போல அலறிப் புரண்டழுவான்
மலையே பருவதமே மாண்டு மடிந்தீரோ

செம்மலே பருவதமே செத்து மடிந்தீரோ
உங்களைப் பறிகொடுத்து ஒருத்தனாய்ப் போவேனோ
அண்ணர்களே யென்றுசொல்லி அலறிப் புலம்பினான்
அழுத குரல்கேட்டு அம்மூவ ரேதுசொல்வார்
தலையி லெழுதினதைத் தள்ளிவைக்கப் போறீரோ
ஏட்டி லெழுதினதை எடுத்தெறியப் போறீரோ
ஈச னெழுதியதில் எள்ளளவுங் குறையாது
சொல்லாதே தம்பிநீ சுருக்கா யெழுந்திரென்றார்
பேசாதே தம்பிநீ போய்ப்பிழையும் வையகத்தில்
இவ்வார்த்தை தான்கேட்டு ஏதுசொல்வான் சகாதேவன்
(உங்களைப்) பார்த்து நடக்கவேதான் பாவி மனம்வருமோ
கண்டு நடக்கவேதான் கால்களுந் தாம்வருமோ
பொறுத்து நடக்கவேதான் போக மனம்வருமோ
இப்பாம்பைக் கொன்றிடுவேன் இயலான ராஜர்களே
பாம்புதனைக் கொல்லுகிறேன் பாருமென்று வாளெடுத்தான்
என்று உருவினான் இளைய சகாதேவன்
கத்தி உருவையிலே கண்டதே அப்பாம்பு
கண்டது மலைப்பாம்பு கணிதனூற் கோமானை
வாயைத் திறந்து வாரி விழுங்கினது
எடுத்து விழுங்கினது இளையசகா தேவனையும்
அப்போ சகாதேவன் ஆணழகுமன்னன்
என்னையும் விழுங்கினது என்னுடைய அண்ணாவே
உங்க ளுடனாக ஒருவனும் வந்துவிட்டேன்
அவ்வார்த்தை தான்கேட்டு ஆணழக ரேதுசொல்வார்
எம்வார்த்தை தள்ளி இருந்தீரே தம்பியரே
நால்வருக்கும் ஒரெழுத்து நான்முக னெழுதிவைத்தான்
அண்ணர்தர்ம ராசாவை அல்லவருங் கையைவிட்டோம்
ஆச்சி துரோபதையை யரிவையரைக் கையைவிட்டோம்
என்று புலம்பியேதா மிருந்தார்கள் நால்வருமே
அநேக நெடுநேர மான பிறகாக
தக்க புகழ்பெரிய தருமரவ ரேதுசொல்வார்
அன்னமே சொர்னமே அமிர்தப் பசுங்கிளியே

தேனே மடமயிலே தித்திக்குந் தெள்ளமுதே
கன்னல் மொழியாளே கற்கண்டே சர்க்கரையே
சாந்துக் கழுத்தியரே சந்தனப்பூ மேனியரே
கோர்வைக் கழுத்தியரே குங்குமப்பூ மேனியரே
குங்கும மொத்ததொரு கொம்பே ரிடையாளே
நெருப்பிற் பிறந்தபெண்ணே நீலவர்ணன் தங்கையரே
கைமோசம் வந்ததுவே கண்மணிக ளேக்காணேன்
போக வழியறியேன் புதுமைக ளொன்றறியேன்
செத்தார் பிழைத்தாரோ சேதியொன்றும் நானறியேன்
மாண்டார் பிழைத்தாரோ மறுவார்த்தை நானறியேன்
கடுகி யெழுந்திருங்காண் கானகத்தில் தேடிடுவோம்
என்று புலம்பி எழுந்தா ரிருவருமாய்
காலடியைப் பார்த்துமே கடுகியே வாரார்கள்
தேடியே வாரார்கள் சீரான கானகத்தில்
அப்பா மதவீமா அழகான வருச்சுனரே
தாம முடிநகுலா தம்பிசகா தேவனெனக்
கூவிப் புலம்புகையில் குரல்கேட்டுத் தம்பியர்க்கு
அண்ணன் குரல்கேட்டு அருச்சுன னேதுசொல்வான்
ஏன்காணும் அண்ணுவே இடையநில்லு மென்பிறப்பே
சேரநீ வாராதே அண்ணுவே தூரநில்லும்
அருகேநீ வாராதே அண்ணுவே தூரநில்லும்
பாம்பு விழுங்கினது பார வனந்தனிலே
இங்கே மலேப்பாம்பு எடுத்து விழுங்கினது
நால்வருக்கு மோரெழுத்து நான்முக னெழுதிவைத்தான்
(உம்) அங்கஞ் சலியாதீர் அழுது புலம்பாதீர்
இனிப்பிழைக்கப் போரூமென் றெண்ணுதே யண்ணுவே
இவ்வார்த்தை தான்கேட்டு இயலான தர்மலிங்கம்
துள்ளிப் புலம்புகிருர் சொரணே தெரியாமல்
வெற்றி மதயானே வீமா மதகரியே
ஏழு பிராயத்திலே இடும்பனேக் கொன்ருயே
பத்து பிராயத்திற் பகாசுர னேக்கொன்று
அரக்குமா மாளிகையி லேவரையும் நீயெடுத்தாய்

ஐவரையு நீயெடுத்தாய் அந்தப்பெ லனடங்கி
பாம்புக் கிரையாக இருந்தாயோ பார்வேந்தா
எழுபது லக்ஷம்யானை இழுக்கவொண்ணுக் கெதையெடுத்து
அமரது செய்கின்ற ஆண்மையுள்ள வீமாநீ
மலைப்பாம்பைக் கொல்லுதற்கு மறந்தாயோ வீமாநீ
சந்தன மிருபுயத்தைச் சாற்ருயோ பூமியிலே
குங்கும மிருபுயத்தைக் கொள்ளையென்று சாற்ருயோ
கல்லான தூணைக் கறையா னெரிக்குமோதான்
இரும்பான தூணும் இற்று விழுமோதான்
நீமடியுங் காரியத்தை நிண்ணயத்தை யானறியேன்
ஆச்சா பருவதமே அழிவில்லை என்றிருந்தேன்
ஆச்சா பருவதமும் அழியும்நா ளாச்சுதே
கற்பகத் தூணுக்குக் கலக்கமில்லை யென்றிருந்தேன்
கற்பகத் தூணுங் கரையும்நா ளாச்சுதோ
என்னை யலையவிட்டு இப்பாம்புக் கிரையாணுய்
நூலார் கடுந்திரளார் நூறுபேர் மன்னர்களைக்
கொல்லுவே னென்றுசொன்ன கொடிய சபதமெல்லாம்
மறந்தாயே தம்பிநீ மலைப்பாம்புக் கிரையாக
என்னை மறந்துநீ யிறந்துவிட ஞாயமுண்டோ
என்று புலம்புகிருர் இயலான தருமருமே
மாரடித்துத் தோளடித்து மண்மேல் விழுந்தலறி
களைத்து விழுந்தாரே கட்டழகர் மூர்ச்சையானுர்
அப்போ துரோபதையும் ஆரணங்கு மேதுசெய்தாள்
பச்சைத் தழையொடித்துப் பைங்கிளியாள் துரோபதையும்
காட்டுத் தழையொடித்துக் கடுகெனவே வீசலுற்ருள்
வீசினுள் தருமருக்கு விடாய்கள் மிகத்தெளிய
வீசக் களைதெளிந்து வேந்தர் புலம்புகிருர்
அப்பாடா அப்பாடா ஆணழகா தம்பியரே
காளை அருச்சுனு கடுங்காளை சேவகனே
எடுக்காத வில்வளைத்து இளங்கொடியை மாலையிட்டாய்
நீர்பார்த்து மீனெய்தாய் நின்றிலங்கு பூமுடியாய்
அழகில் மிகுந்தவரே அர்ச்சுனு தம்பியரே

நீர்மடியுங் காரியமும் நிண்ணயமும் நானறியேன்
இடது புயமான இயலான அர்ச்சுனரே
என்னை மறந்தீரோ இப்பாம்புக் கிரையாக
உங்களை மடியவிட்டு ஒருநாழி தங்குவனே
கூட மடிந்திடுவேன் கொற்றவரே உங்களுடன்
நானு மடிந்திடுவேன் ராஜர்களே உங்களுடன்
அங்க முருகுதையோ ஆவிதண லாகுதையோ
நெஞ்சந் தனிலேயே நெருப்பா யெரியுதிப்போ
ஈரலுக் குள்ளே இருந்துதணல் பற்றுதடா
கும்பியி னுள்ளேயல்லோ குடவிளக்கா யெரியுதடா
மனது தரிக்கவில்லை வயிறெரிச்சல் தீரவில்லை
உங்களைப் பறிகொடுத்து உலகத்தி லிருப்பேனே
நானு மடிந்திடுவேன் ராஜர்களே உங்களுடன்
உங்களைப் புசித்தபாம்பு எங்களைப் புசியாதோ
உன்னைப் புசித்தபாம்பு என்னைப் புசியாதோ
என்று மனந்தளர்ந்து எழுந்தாரே தருமலிங்கம்
மலைப்பாம்பு தன்னருகே வந்து தலைகொடுத்தார்
இறங்கினார் தருமலிங்கம் என்னையும் விழுங்குமென்றார்
தாராமுகன் மலைப்பாம்பு தள்ளி விடுகுது
எதிரிலே வந்தாலும் இடைந்து விடுகுது
பக்கத்தில் வந்தாலும் பார்த்துமே போய்விடுது
தக்க புகழுடைய தரும ரவருரைப்பார்
சமர்த்துள்ள மலைப்பாம்பே தம்பியரை விழுங்கிவிட்டாய்
என்னை விழுங்குமென்று எதிரேநான் வந்தாலும்
என்னபாவஞ் செய்தேனே என்னை விலக்கிவிட்டாய்
ஏதாலும் பாவிநான் இருந்தாலு மாகாது
ஐயோ வெனத்தருமர் அழுது புலம்புகிறார்
குய்யோ முறையோவென்று கூவிப் புலம்புகிறார்
தோரா வடிவழகி துரோபதையுங் கூறுவாள்
ஆண்டவரே ஐயாவே அழகுள்ள தருமரேநீர்
மாயவரை நீருமிப்போ மனத்தில் நினையுமென்றாள்
எம்பெருமாள் வந்தாலே எல்லாந் தெரியுமென்றாள்

அப்போது தருமருக்கு அந்த நினைவுவந்து
அவ்வார்த்தை தாங்கேட்டு அழகான தருமலிங்கம்
மாயனைத் தாநினைந்து வருந்திப் புலம்புகிறார்
மாயன் பெருமாளே வந்தருள வேண்டுமையா
ஆலிலைமேற் பள்ளிகொண்ட ஆதிமூலம் வாருமையா
பாற்கடலிற் பள்ளிகொண்ட பாரளந்தார் எம்பெருமாள்
மச்ச வடிவுகொண்ட மாயவனே நின்சரணம்
கூர்ம வடிவுகொண்ட கோபாலா நின்சரணம்
கல்லான அகலிகையை நல்லபெண் ணாக்கிவைத்தீர்
எல்லை யளந்தீரே எதிரில்லை யென்றீரே
மூலமென்ற குஞ்சரத்தை முகில்வண்ணா காத்தீரே
இராமராய் நீர்பிறந்து இராவணனைச் சங்கரித்தீர்
இலங்கை யழித்தீரே இராட்சதரை வென்றீரே
அரக்குமா மாளிகையில் ஐவரையுங் காத்தீரே
அபயமென்ற துரோபதைக்கு அக்ஷயத் துகில்கொடுத்தீர்
உம்மகிமை யாரறிவார் உம்பர்பிரான் தானறிவார்
தஞ்சமென்ற பஞ்சவரைத் தற்காக்குந் தெய்வமல்லோ
செல்வத் திரவியங்கள் சீரழிந்து போருமையா
கையில் செபமாலை கனங்குலைந்து போருமையா
உள்ளங்கை நெல்லிப்பழம் உருக்குலைந்து போருமையா
அம்பல வாசலிலே ஐவரையுங் காத்தீரே
இத்தனைநாள் காத்தீரே இன்றல்லோ மாண்டுவிட்டோம்
ஏழை யழுதகண்ணீர் கூரியவாள் தப்பாது
நானழுத கண்ணீரும் ரம்பங்கொண் டறுக்காதா
வாரீரோ கிருஷ்ணவென் மனத்துயரந் தீராயோ
(என்று) அபயம் அபயமென்று அழுது புலம்புகிறார்
தோரா வடிவழகி துரோபதையா ளேதுசொல்வாள்
அண்ணா மணிவண்ணா அடியேனுக் குதவிசெய்வாய்
மஞ்ச ளிழந்தேன் மணமிழந்தேன் பூவிழந்தேன்
தாலிச் சரடிழந்தேன் தலைவிரிக்க நாளாச்சே
ஐவரிட்ட மங்கிலியம் அழியவில்லை யென்றிருந்தேன்
மங்கிலியந் தானிழந்து மண்ணில்விழ நாளாச்சே

ஆரைக் கழுத்தி அரைக்கழுத்தி யானேனே
கோரைக் கழுத்தி குறைக்கழுத்தி யானேனே
செல்வங் குலேந்துநான் சீரு மழிந்தேனே
ஐவருங்கை விட்டாரே அலேந்துவிட நாளாச்சே
மங்கிலியப் பிச்சைநீ தாராயோ மன்னவரே
என்குறையைத் தீராயோ இங்கேநீ வாராயோ
அபயக்குர லிட்டுமெங்கே அழுதாள் துரோபதையும்
மார்கொண்ட கண்ணீரை வழித்தெறிந்தாள் மண்மேலே
அப்போது மாயவரும் ஆதிமூலந் தாமறிந்தார்
அழுத குரல்கேட்டு ஆயன் பெருமாளும்
செல்வத் திரவியங்கள் சீரழிந்து போகுதே
பெட்டியிலே பூஷணம் பெருமை குலேயுதே
தோளிற் செபமாலே தோடவிழ்ந்து போகுதே
கையிற் செபமாலே கனங்குலேந்து போகுதே
வருந்திப் புலம்புகிற மனத்துயரம் தீர்க்கவென்று
அழுது புலம்புகிற அத்துயரந் தீர்க்கவென்று
ஏழைகள் தந்துயரம் தீர்க்கவென்று எம்பெருமாள்
வாரார் பெருமாளும் வட்டமாங் கருடனேறி
துவாரகா புரியைவிட்டு சுவாமியவர் வாராரே
காடுஞ் செடியுங் கரியமலே தாந்தாண்டி
வேங்கை யடர்ந்தவனம் வெண்களாப் பூத்தவனம்
கோங்கு பெருத்தவனம் கொன்றைகளாப் பூத்தவனம்
பாதிரி முல்லே பருத்தவனந் தாந்தாண்டி
சில்லென்ற காடுஞ் செடியும்வனந் தாந்தாண்டி
மூங்கி லடர்ந்திருக்கும் முல்லே வனந்தாண்டி
சூரியன் தன்வனத்தைச் சுறுக்காகத் தாந்தாண்டி
இராம ரிஷிவனத்தில் இராமரும் வந்துவிட்டார்
மாயன் வருகிறதை வழியிலே தான்பார்த்து
தருமருந் துரோபதையும் தாமெதிரே ஓடிவந்தார்
தருமருந் துரோபதையுஞ் சரணமிட்டார் மாயவரை
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டார்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டார்

அறுகால் வலம்வந்து அடிவணங்கித் தெண்டனிட்டார்
சிங்கா தனம்போட்டு ஸ்ரீராமர் தாமிருக்க
ஆசனமும் போட்டார் அரிராமர் தாமிருக்க
இட்டசிங் காதனத்தில் எம்பெருமாள் வீற்றிருந்தார்
மாயன் பெருமாளும் வாய்திறந் தேதுசொல்வார்
அடியளந்த மாயவரும் ஆதிமூல மேதுசொல்வார்
அழுத குரலேது அழைக்கவந்த காரணமேன்
வேண்டி யழைத்த விபரமென்ன சொல்லுமென்றார்
வருந்தி யெனையழைத்த விபரமென்ன சொல்லுமென்றார்
வீம ரருச்சுனர்கள் வேந்தர்க ளெங்கேயென்றார்
தம்பிமார் நால்வர்களுந் தார்வேந்தா எங்கேயென்றார்
அழுது புலப்புவதேன் ஆரணங்கே துரோபதையும்
ஏதுக் கழுதீர்க ளெனக்கறியச் சொல்லுமென்றார்
தக்க புகழுடைய தருமரவ ரேதுசொல்வார்
தம்பிமார் நால்வரையும் சர்ப்பம் விழுங்கிற்றென்றார்
என்னை யழைத்தவகை எனக்கறியக் கூறுமென்றார்
தாராமுகன் மலைப்பாம்பு தானும் விழுங்கிற்றென்றார்
தம்பியரைப் பறிகொடுத்துத் தரிப்பேனோ பூமியிலே
மலையைப் பறிகொடுத்து மண்மே லிருப்பேனோ
அங்கம் பொறுக்குமே அரிராமா என்னசெய்வேன்
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
எவரைச் சதமென்பே னினியாரைத் தஞ்சமென்பேன்
ஆகையி னாலேதான் ஆண்டவரே உமையழைத்தேன்
என்றுரைக்கத் தாம்கேட்டு எம்பெருமா ளேதுசொல்வார்
எழுத்து விதிதன்னை எவரால் விலக்கவசம்
தலையி லெழுதினதைத் தள்ளிவைக்கப் போறோமோ
ஏட்டி லெழுதினதை எடுத்தெறியப் போறோமோ
அன்றெழுதுங் கர்த்தரல்லோ அழித்தெழுதப் போறாரோ
இட்ட படியொழிய எள்ளளவுங் குறையாது
வரும்வினை வந்தாலே மடியேந்த வேண்டாமோ
ஆராலே யாகுமிது ஆயுசுக்குக் கர்த்தருண்டோ
எவராலே யாகுமிது இவர்களைத் தானெழுப்ப

என்னாலே ஏதாகும் இயலான தர்மலிங்கம்
இவ்வார்த்தை தான்கேட்டு ஏதுசொல்வார் தர்மலிங்கம்
என்னாலே யாகாதென் றேனே கழித்துவிட்டீர்
உம்மாலே யாகாத தொன்றுண்டோ வையகத்தில்
எல்லா முமதுசெயல் என்றிருந்தேன் மாயவரே
தம்பிமார் தாம்பிழைக்கச் சாமிநீர் கண்பாரும்
உடன்பிறப்புத் தாம்பிழைக்க உத்தமரே கண்பாரும்
என்பிறப்புத் தாம்பிழைக்க எம்பெருமாள் காத்தருளும்
கண்பாரிவ் வேளையெனக் கண்ணனையுந் தெண்டனிட்டார்
புண்ணியமாய்ப் போகுதெனப் பெருமாளைத் தெண்டனிட்டார்
அப்போ துரோபதையு மாரணங்கு மேதுசெய்தாள்
முந்தாணி யேந்திநின்றாள் முருகுழலாள் துரோபதையும்
மங்கிலியப் பிச்சையல்லோ மாயா வெனக்கருளும்
வாடாத மங்கிலியம் வலவா வெனக்கருளும்
என்று மவள்சொல்லி இளங்கொடியாள் துரோபதையும்
மாயனுட பாதத்தை வணங்கித் தொழுதுநின்றாள்
இவ்வார்த்தை தான்கேட்டு எம்பெருமாள் மனமிரங்கி
அங்கு மொருகிருஷ்ணன் ஆய ரிருக்கையிலே
சின்ன எலிபோலே சுவாமி வடிவுகொண்டார்
மலைப்பாம்பு தன்செவியில் மாயவரும் போய்நுழைந்தார்
அருச்சுனன்வில் நாணிதனை அறுத்தாரே மாயவரும்
வில்நாணி தானறவே வில்நிமிர்ந்து வாய்கிழிந்து
நகுலன் சகாதேவன் நல்விஜயன் வீமனுமே
ராம ரிஷியுடனே நன்றாய்வெளிப் பட்டார்கள்
ஐவரு மாகவேதா னப்பாம்பின் வெளியானார்
மாயன் பெருமாளை வந்து நமஸ்கரித்தார்
தக்க புகழுடைய தர்மருக்குத் தெண்டனிட்டார்
தக்க புகழுடைய தர்ம ரவர்பார்த்து
வாழ்த்தி மனமகிழ்ந்து மன்னர் தருமருமே
மனது குளிர்ந்தாரே மகாராஜர் தர்மலிங்கம்
துரோபதை நாயகியுஞ் சிந்தை மிகக்குளிர்ந்தாள்
மலர்ந்த செந்தாமரைபோல் மனது மிகக்குளிர்ந்தார்

அலர்ந்த செந்தாமரைபோல் அகமு மிகக்குளிர்ந்தார்
ராம ரிஷியாற்கு நற்காட்சி தந்தாராம்
மாயன் பெருமாளும் வார்த்தைக ளேதுசொல்வார்
இந்த வனந்தாண்டி இனியவனம் போங்களென்றார்
அப்போது தர்மலிங்கம் ஆயரைப் பார்த்துரைப்பார்
இந்த ரிஷியாரு மிங்குவந்த கன்மமென்ன
வந்த கன்மந்தனை வாய்திறந்து சொல்லுமென்றார்
அப்போது மாயவரும் அருளாள ரேதுசொல்வார்
இந்தரிஷி காரியத்தை இயம்புவேன் நீர்கேளும்
மாயாண்டி தன்னடியார் வந்தால் வணங்குவர்காண்
என்றனடி யார்கள்வந்தால் இகழ்ச்சிகள் பண்ணுறதும்
ஏடாகூ டங்கள்பண்ணி எட்டி யடிக்கிறதும்
இப்படி யாகவே இருந்தார் வெகுகாலம்
அப்போது நானொருநா ளங்கே வடிவெடுத்தேன்
தாத வடிவெடுத்துத் தப்புக்கொட்டி பிச்சையென்றேன்
அரிகரி ராமாவென்று ஐயாவே பிச்சையென்றேன்
அப்போது ராமரிஷி அவசரமா யோடிவந்து
என்னை யடித்தாரே இயலான ராமரிஷி
அடிபட்டுக் கொண்டதொரு ஆக்ருஷ மானதினால்
(நான்) பட்ட அடியாலே இட்டேன் பெருஞ்சாபம்
அப்போது ராமரிஷி ஆயரே என்றழுது
வல்லாளன் ராமரிஷி வாய்திறந்து ஏதுசொல்வான்
ஐவர்பஞ்ச பாண்டவர்க ளாரணியம் வந்தாக்கால்
தருமர் தவிரவைத்து நால்வரையும் விழுங்கிடுவாய்
நாலுபே ரையெடுத்து நன்றாய் விழுங்கிடுவாய்
அப்போதுன் சாபம் அடைவுடனே தீர்த்திடுவேன்
என்று மவர்க்குரைத்து என்பதிக்குப் போய்நடந்தேன்
அப்போதிட்ட சாபமது இப்போ தொலைந்ததுகாண்
(நீங்க) ளிந்த வனத்தைவிட்டு இனியவனம் போங்களென்றார்
அப்போது எம்பெருமாள் அரிராமர் தானெழுந்தார்
ராமரிஷி ஐவர்களும் நங்கை துரோபதையும்
எம்பெருமாள் மாயவற்கு எல்லோரும் தெண்டனிட்டார்

பஞ்சவர்க ளைவருக்கும் பாஞ்சாலி துரோபதைக்கும்
மாயன் பெருமாளும் மனங்குளிர வாழ்த்தியபின்
எந்த வனங்களிலே இடரது வந்தாலும்
இடரது வந்தாலே என்னை நினையுங்கள்
என்று மவருரைத்து எம்பெருமாள் போகலுற்றார்
வட்டமாங் கருடனேறி மாயவரும் போகலுற்றார்
காடுஞ் செடிதாண்டி கரியமலை தாந்தாண்டி
ஆறுஞ் சுனையு மதிகவனந் தாந்தாண்டி
வேங்கை யடர்ந்தவனம் வெண்களாப் பூத்தவனம்
கோங்குபெ ருத்தவனம் கொன்றைகளாப் பூத்தவனம்
வனமா வனந்தாண்டி வந்துவிட்டார் மாயவரும்
துளப மணிமார்பன் துவாரகை போய்ச்சேர்ந்தான்
சிங்கா தனத்தின்மேல் ஸ்ரீ கிருஷ்ணர் தாமிருந்தார்
இப்படி யாகவே இவரிருக்கும் வேளையிலே
மாயவனார் போனபின்பு மகாராஜர் பஞ்சவர்கள்
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் ஆரணங்கு துரோபதையும்
மன்னர்பஞ்ச பாண்டவர்கள் மயிலணையாள் துரோபதையும்
அந்த வனத்தி லனேகநாள் சென்றபின்பு
இப்படி யாக இவரிருக்கும் வேளையிலே
மூன்றும் வருஷம் பிறந்தது பஞ்சவர்க்கு

இரண்டாவது இராமரிஷிவனம் முற்றிற்று.

---

## மூன்றாவது முருக்கமகாருஷி வனம்.

---

அந்த வனத்தைவிட்டு அப்பாலே போகலுற்றார்
கூடை தலைமேலே குடிவாழ்க்கை கானகத்தே
கோலிவைத்த சீமாடு கூடைதலை மேலேவைத்தார்
மன்னிவைத்த சீமாடு வனமே குடித்தனமாய்
முருக்க ரிஷிவனத்தில் முடிகிவந்தார் பஞ்சவர்கள்
அந்த வனத்திலே அல்லோரும் வந்தமர்ந்தார்

ஓரடுக்குப் பர்னசாலை உண்டுபண்ணூர் பஞ்சவர்கள்
மூன்றடுக்குப் பர்னசாலை முடிமன்ன ருண்டுபண்ணூர்
ஆறடுக்குப் பர்னசாலை ஆணழக ருண்டுபண்ணூர்
ஏழடுக்குப் பர்னசாலை எழிலாக வுண்டுபண்ணூர்
பர்னசாலை மேலேயல்லோ பஞ்சவர்கள் வீற்றிருந்தார்
இப்படி யாக இவரிருக்கும் வேளையிலே
தென்ன முடிவேந்தன் திரியோதிர னேதுசொல்வான்
சபைகள் நிறைந்திருக்கும் சர்ப்பக் கொடியோனும்
ஆர்காணும் ராசர்களே அழகான மன்னர்களே
முத்துக் கிரீடம் முடிசூடும் மன்னர்களே
வச்சிரக் கிரீடந் தரித்ததொரு மந்த்ரிகளே
மாணிக்கக் கிரீடந் தரித்ததொரு மன்னர்களே
அத்தண்டை பேரையுமே அனைவரையுந் தான்பார்த்து
மாநாகங் கொண்டதொரு மகாராஜ னேதுரைப்பான்
ஐவர்வன வாசம்போய் அநேகநெடு நாளாச்சே
மூன்றும் வருஷமது மொழியலாம் பஞ்சவர்க்கு
(அவர்) எந்த வனத்திலே இருக்கிற ரென்றறியேன்
செத்தார் பிழைத்தாரோ சேதி தெரியவில்லை
மாண்டார் பிழைத்தாரோ மறுவார்த்தை தெரியவில்லை
ஆரடா தூதுவரே அருகிருக்கும் மல்லர்களே
பாரப் புலிபோலே பஞ்சவர்க ளைவருமே
வீரப் புலிபோலே வேந்தர்க ளைவருமே
எந்த வனத்தி லிருக்கிற ரென்றறிந்து
ஐவரும்மைப் பாராதே அறிந்தோடி வாருமென்றான்
காவலர்க ளும்மையவர் காணாதே வாருமென்றான்
இவ்வார்த்தை தான்கேட்டு எழுந்திருந்தார் தூதுவர்கள்
ஒற்ற ளொருவனவ னேடினான் கானகத்தே
காடுஞ் செடியுங் கரியமலை தாந்தாண்டி
ஆறுஞ் சுனையுமல்லோ அதிகவனந் தாந்தாண்டி
வேங்கை யடர்ந்தவனம் வெண்களாப் பூத்தவனம்
கோங்கு பெருத்தவனம் கொன்றைகளாப் பூத்தவனம்
வனமா வனந்தாண்டி வாரார்கள் தூதுவர்கள்

சூரியன் தன்வனத்தே சுறுக்காய் நடந்துவாரார்
ராம ரிஷிவனத்தே நடந்தார் நலமாக
முருக்கமகா ரிஷிவனத்தே நடந்தார் நலமாக
அந்த வனத்திலே ஐவரையுங் கண்டார்கள்
பர்னசாலே மேலாகப் பஞ்சவரைக் கண்டார்கள்
அவரு மறியாமல் ஆணழகர் திரும்பிவந்தார்
காடுஞ் செடியுங் கரியமலே தாண்டிவந்தார்
அஸ்தினு புரம்நாடி ஆணழகர் திரும்பி வந்தார்
தென்ன முடிவேந்தன் திரியோதிரன் முன்னேவந்தார்
ஆண்டவரே ஐயாவே அடியேன் சரணமென்ருர்
தென்னர் முடிவேந்தன் திரியோதிர னேதுசொல்வான்
போனீரே தூதுவரே புதுமையென்ன சொல்லுமென்ருன்
காளிபே ரண்டனவன் கடுகியே யேதுசொல்வான்
முருக்கமகா ரிஷிவனத்தில் முடிமன்னரைக் கண்டுவந்தோம்
பர்னசாலே மேலேயல்லோ பஞ்சவரைக் கண்டோமையா
அவ்வார்த்தை கேட்டானே அரவக்கொடியோனும்
சிந்தை கலங்கியவன் திடுக்கிட்டு மெய்மறந்து
மனமுந் திடுக்கிட்டு வாய்திறந் தேதுசொல்வான்
இப்பெரிய சபைதனிலே யிருக்கின்ற ராஜர்களே
அம்பலத்தில் கொலுவிருக்கும் அரசர்முடி மன்னர்களே
இத்தண்ட ராஜர்களே இயலான மந்திரிகளே
கத்திகட்டுந் துரைகளே கனத்தமுடி மன்னர்களே
ஆண்மையுள்ள துரைகளே அல்லவருங் கேட்டிருங்கள்
என்வார்த்தை தள்ளாமல் ராஜர்களே கேட்டிருங்கள்
பாஞ்சாலன் பெற்றெடுத்த பைங்கிளியாள் துரோபதைமேல்
தோரா வடிவழகி துரோபதைமே லெந்தனுக்கு
ஆசை யலேயுதுகாண் ஆரணங்கு துரோபதைமேல்
நினேக்க நினேக்கவேதான் நெஞ்சு முருகிடுது
மயிலணேமே லாசையல்லோ மறக்கவில்லே யெந்தனுக்கு
அவளாசை தன்னுலே யவளே வரவழைத்தேன்
வணங்குவா ளென்றுசொல்லி வார்தைபல பேசினேன்
இணங்குவா ளென்று எத்தனேயோ சொன்னேன்காண்

வணங்காமற் போனாளே மாது கருங்குழலாள்
இணங்காமற் போனாளே ஏலப் பசுங்கிளியாள்
வந்திருந்து அம்பலத்தில் வார்த்தைகள் பேசினேன்காண்
வாருமிரு மென்றேன் மடிமேலே ஏறுமென்றேன்
மார்போடே மார்பணைத்து மருவிமுத்தந் தாருமென்றேன்
தோளோடே தோளணைத்துச் சுகமுத்தந் தாருமென்றேன்
வாரும்நீ துரோபதையே வலதுதுடை யேறுமென்றேன்
அகந்தைகள் பண்ணுகிறாள் ஆகடியஞ் சொல்லுகிறாள்
அவள்மெத்தப் பேசி அகந்தைகளும் பண்ணினாளே
ஆகையால் துரோபதையை யடித்துத் துரத்திவிட்டேன்
ஆரணங்கைக் கூடுகைக்கு ஆசைமெத்தத் தோணுகுது
அவள் மீதி லாசைகொண்டு அல்லவர்க்கும் சொல்லுகிறேன்
அவளையுங் கொண்டுவர வரசருண்டோ சொல்லென்றான்
பாஞ்சாலன் பெண்ணைப் பாவை துரோபதையை
சிறையாப் பிடித்துவர துரைகளுண்டோ சொல்லுமையா
கொண்டு வருவோர்க்குக் கோடித னந்தருவேன்
அழைத்து வருவோர்க்கு ஆனைசேனை நான்தருவேன்
சீமையும் பூமியும் துரைத்தனங்கள் நான்கொடுப்பேன்
ஐவ ரறியாமல் ஆரணங்கைக் கொண்டுவந்தால்
துரோபதையைக்கொண்டுவந்து தூங்குமஞ்ச மேற்றிவைத்தால்
பாவையரைக் கொண்டுவந்து படுக்கைமஞ்ச மேற்றிவைத்தால்
என்னுடைய நாடுகளும் எழில்கருணன் ஆதீனம்
சீமைகளும் பூமிகளும் செல்வமும் நான்தருவேன்
வல்லாண்மைக் காரருண்டோ மந்திரி யெழுந்திருங்கள்
போற துரைகளுண்டோ புண்ணிய சேனைகளே
பிடியுங்கள் தாம்பூலம் பேர்பெரிய ராஜர்களே
என்றுசொல்லக் கேட்டார்கள் இயலான ராஜாக்கள்
அனைவோரும் பேசாம லஞ்சிப் பயந்திருந்தார்
சிந்துதேசாதிபதி தீரன்மகன் சயிந்தவனும்
சொல்லுவான் வாய்திறந்து துரைக ளறிந்திருக்க
மைத்துனரே நீர்கேளும் மகராஜ பூபதியே
தோரா வடிவழகி துரோபதை நாயகியை

பத்துநாட் குள்ளாகப் பைங்கிளியைக் கொண்டுவாரேன்
எட்டுநாட் குள்ளாக இளங்கொடியைக் கொண்டுவாரேன்
ஐவ ரறியாமல் ஆரணங்கைக் கொண்டுவாரேன்
மன்ன ரறியாமல் மயிலணையைக் கொண்டுவாரேன்
தாம்பூலந் தான்பிடித்தான் தாம முடியானும்
அந்தமொழி தான்கேட்டு அரவக் கொடியோனும்
சந்தோஷப் பட்டானே சர்ப்பக் கொடியோனும்
மெத்த மகிழ்ந்தானே வேந்தன்துரி யோதனனும்
உள்ளங் குளிர்ந்துசிலிர்த் துடம்பெங்கும் பூரித்தான்
அள்ளியே தாம்பூல மாணழகன் கைக்கொடுத்தான்
போட்டிருந்த ஆபரணம் பொட்டென வேகொடுத்தான்
இட்டிருந்த பூஷணங்கள் இஷ்ட முடன்கொடுத்தான்
பொன்னிழைத்த பட்டாடை போர்த்தானே மேலாக
போய்வாரு மென்றே புகழ்வேந்தன் தானுரைத்தான்
வெகுமானம் பெற்றுமல்லோ விடைபெற்று மன்னவனும்
பயணம் பயணமென்று பயணபேரி யடியுமென்றான்
ஆனைசேனை பரிவாரம் அடங்கலும் பயணமென்றான்
ஆனைமேற் செண்டாவும் அழகுநிசான் பிடியுமென்றார்
ஆனைமேற் பேரிகையை அடியுமென்றார் ஓசையுடன்
குதிரையின்மேல் டங்காவும் கொடிமுரசு சீலைகளும்
பாஞ்சசன்யம் தேவதத்தம் பலவாத் தியம்முழங்க
சச்சரிகை வீராணம் தாக்கி முரசறைய
அக்ரோணி சேனை அடங்கலும் பயணமென்றான்
அதிரதரும் சமரதரும் அர்த்தரத மாரதரும்
கலிங்கர் தெலுங்கர்களும் காஸ்மீரக் கன்னடரும்
ஈழத்து வங்கணரும் இளநாட்டுச் சோனகரும்
சட்டை கழற்றாத சாளுவ ரானவரும்
போட்டசட்டை வாங்காத பொந்திலிய ரானவரும்
இட்டசட்டை வாங்காத எழிலான மன்னவரும்
குப்பாயம் வாங்காத குச்சிலிய மன்னவரும்
ஆனை யரசுரிமை அளவற்ற கன்னியரும்
வெள்ளித் தடிக்காரர் வேணலட்சங் கோடியுண்டு

மகுட முடிதரித்த மன்னவர்க ளானவரும்
பட்டத்து ராசர்களும் பார்மகுட வர்த்தனரும்
அத்தனை பெயருடனே ஆணழகன் பயணமானான்
நீண்டிடுங் கால்களுக்கு நெரிஞ்சிப்பூச் சல்லடமாம்
தூக்கிவைக்குங் கால்களுக்குத் துத்திப்பூச் சல்லடமாம்
குந்தியிடுங் கால்களுக்குக் குரிஞ்சிப்பூச் சல்லடமாம்
மண்டியிடுங் கால்களுக்கு மாதுளம்பூச் சல்லடமாம்
சல்லடங்கள் தான்போட்டு தட்டிவ ரிந்துகட்டி
தட்டிவ ரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
பட்டுதட்டி கட்டியல்லோ பாங்கெடுத்துத் தான்சொருகி
முத்தி னுறுமாலை முகத்தழகாய்க் கட்டினானே
இட்டான் திருநாமம் எரிகின்ற சூரியன்போல்
பொன்னிழைத்த துப்பட்டாவைப் போர்த்தானே மேலாக
அம்புவில்லுங் கைபிடித்து ஆணழகன் வெளியானான்
தேரை யலங்கரித்துத் தேர்ப்பாகன் கொண்டுவந்தான்
தேரைச்சுற்றித் தெண்டனிட்டு சிவ்வென்று ஏறினான்
ஏறின போதோ எடுத்தார் நெடுங்குடையை
பக்கத்தில் வெண்சாம ரைப்பட்டுக் குடைகவிய
இருபக்கம் வெண்சாம ரைரத்னக் குடைகவிய
முத்துக் குடைகவிய முடிமன்னர் தான்சூழ
மேளதா ளம்முழங்க வேந்தர்களும் பயணமிட்டார்
வாரான் சயிந்தவனும் மச்சு ரதம்குலுங்க
தெற்குத் தெருதாண்டி தேரோடும் வீதிவிட்டு
ஆயிரந் தெருதாண்டி அங்காடி தான்தாண்டி
கடையுங் கடைத்தெருவும் கருமார வீதிவிட்டு
பட்டணத் தெருதாண்டி பார்மன்னன் வாரானே
செந்தூ ளெழும்புகுது சூரியனைக் கப்புகுது
கருந்தூ ளெழும்புகுது கதிரோனைக் கப்புகுது
வாரான் சயிந்தவனும் மச்சு ரதங்குலுங்க
அப்போ சயிந்தவனும் ஆலோ சனைகள்பண்ணி
துரோபதையைக் கொண்டுவரத் துரிதமுடன் போறோமே
போற விடந்தனிலே புதுமைகளை நாமறியோம்

வழியிற் சகுனங்கள் மனதில் குறிப்போமென்று
தருமதே வதையேநீ சாட்சிசொல்ல வேணுமென்ருன்
அப்போது சகுனங்கள் ஆகுது மன்னனுக்கு
பொல்லாத சகுனங்கள் பொருந்துது மன்னனுக்கு
வாயசம் இடமாச்சு வலியனும் வலமாச்சு
காடை வலமாச்சு கள்ளரெதிர்ப் பட்டார்கள்
சாரை குறுக்காச்சு சயிந்தவன்மேற் பல்லிசொல்லும்
குத்திப் பிடியுமென்று கோட்டானும் ஓலமிடும்
வெட்டுவெட்டு மென்றுசொல்லி வேடரெதி ராஞர்கள்
ஓரி யலறிடவே ஓர்பார்ப்பா னெதிராஞன்
பச்சை மரத்திலே பதுவிருந்த பல்லியது
பட்ட மரமேறி பலபலென்று சொல்லிடுமாம்
எட்டுசொல் லாந்தையது திட்டெனவே மரணமென்று
நெருப்பெடுத் தோர்கிழவி நின்றிழவு தான்கொடுத்தாள்
இந்தச் சகுனமெல்லாம் இராசனுங் கண்டானே
நினையாத் துயரமெல்லாம் நினைத்து மனமுருகி
எண்ணுது மெண்ணி இருந்துவி சாரமிட்டான்
இச்சகுனந் தன்னுலே இறந்துவிடப் போருேமோ
வந்தப் பயணமினி வழிதிரும்பப் போருேமோ
திரும்பினே மாகில் சிரிப்பார்கள் ராசாக்கள்
என்னை மதியார்கள் ஏளிதஞ் செய்வார்கள்
வந்து திரும்பிவிட்டால் மதியான் திரியோதிரன்
அன்றெழுதுங் கர்த்தன் அழித்தெழுதப் போருனே
ஏம னெழுத்தலவோ எள்ளளவுங் குறையாது
வரும்வினைகள் வந்தாலே மடியேந்த வேண்டாமோ
உள்ள படிக்கு ஒருநாளுங் குறையாது
என்று மனதிலெண்ணி இராசனும் போய்நடந்தான்
காடுஞ் செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறுஞ் சுனைதாண்டி அதிகவனந் தான்தாண்டி
வேங்கை யடர்ந்தவனம் வெண்களாப் பூத்தவனம்
கோங்கு பெருத்தவனம் கொன்றைகளாப் பூத்தவனம்
புலிகள் கரடிகளும் பெருத்தவனந் தான்தாண்டி

சூரியன் தன்வனத்தில் சேர்ந்தானே சயிந்தவனும்
அன்றுமுகா மங்கிருந்து அடுத்ததொரு மற்றூநாள்
காலையில் பயணமாகி கடுக வழிநடந்தான்
ராம ரிஷிவனத்தில் நடந்தார்கள் சேனையெல்லாம்
அன்றுமுகா மங்கிருந்து அடுத்ததொரு மற்றூநாள்
அந்தவ னந்தனிலே அத்தண்ட சனம்நிறுத்தி
உத்தண்ட மன்னவனும் ஒருத்தனுந் தேரேறி
முருக்கமகா ரிஷிவனத்தில் முடுகி நடந்தானே
சயிந்தவனும் பர்னசாலை தேடியே வாரானே
தூர ரதம்நிறுத்தி துரோபதையாள் முன்னேவந்தான்
பர்ன சாலையிலே பத்தினியாள் வீற்றிருந்தாள்
ஒருத்தியு மாகவேதா னுத்தமியாள் வீற்றிருந்தாள்
பாவி சயிந்தவனும் பர்னசாலை முன்னேவந்தான்
அப்போது பாஞ்சாலி ஆரணங்கு துரோபதையும்
கண்டாள் சயிந்தவனைக் கட்டழகி துரோபதையும்
அண்ணனைக் கண்டு அலறியே ஓடிவந்தாள்
தமயனைக் கண்டாளே தானெழுந்து சரணமிட்டாள்
வட்ட மணைபோட்டு மணித்தடுக்கு தான்போட்டாள்
இருமிரு மென்றுசொல்லி இளங்கொடியாள் வருந்திடவே
அப்போ சயிந்தவனும் ஆணழகன் தானெழுந்து
வட்ட மணைமேலே வந்திருந்தான் சயிந்தவனும்
தோரா வடிவழகி துரோபதையா ளேதுசொல்வாள்
இந்த வனத்திலே ஏதுக்காய் வந்தீர்கள்
வனசாரி வந்தீரோ மகாதவசாய் வந்தீரோ
அண்ணுவே நீர்வந்த அதிசயத்தைச் சொல்லுமென்றாள்
மாலை முடியானும் வாய்திறந் தேதுசொல்வான்
ஐவரும் நீயுமாக ஆரணியம் வந்தீர்கள்
வனவாசம் வந்தீரென்று மண்டலத்திற் பேராச்சு
பார்க்கும் படியாகப் பைங்கிளியே வந்தேனே
உங்களுட சீமையும் உலகமும் விட்டுவிட்டு
வனவாசம் வந்ததொரு வகையென்ன தங்கையரே
இங்கே பரதேசம் ஏன்வந்தீர் தங்கையரே

ஒன்று மொளியாமல் உரையுங்காண் தங்கையரே
அப்போ துரோபதையா ளாரணங்கு தான்கேட்டு
தோரா வடிவழகி துரோபதையா ளேதுசொல்வாள்
அண்ணுவே நாங்கள்வந்த அதிசயத்தை நீர்கேளும்
பரதேசம் வந்தோமெங்கள் பரிதாபங் கேளுமென்ருள்
தருமா புரத்தையல்லோ தாரணியை யாண்டிருந்தோம்
ஐவரையுங் கொல்லவென்று அரசன்திரி யோதிரனும்
பஞ்சவரைக் கொல்லவென்று பாவிதிரி யோதிரனும்
விருந்தருந்து மென்றுசொல்லி வேந்தரைக் கொல்லவென
பூபன்கு மாரனுக்குப் பூநூற்கலி யாணமென்று
பூநூற் கலியாணம் பொருத்தந்தப்பிப் போகுதென்று
உடனேவரத் தருமருக்கு ஓலை யெழுதிவிட்டான்
மெய்யாலும் ஓலையென்று வேந்தர் மனதிலெண்ணி
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் அஸ்தினு புரம்நாடி
வார வழிதனிலே மன்னவரைக் கொல்லவென்று
வசநாவித் தண்ணீர்ப் பந்தல் மன்னவர்க்குப் போடுமென்ருன்
தப்பிப்பி ழைத்தார்கள் சுவாமியுட புண்ணியத்தால்
நடக்கும் வழிதனிலே நச்சுமுள்ளை நாட்டினன்
ஊசி யெழுகூசி ஒருகோடி நாட்டினன்
கூரம்பு கத்திகளும் குறுக்கேபு தைத்து வைத்தான்
கொடிமுள்ளுங் கத்திகளும் குறுக்கேபு தைத்துவைத்தான்
தண்ணீர் குடித்துமே சாவார்க ளென்றுசொல்லி
பார வசிதனையே பருவதம்போல் நாட்டிவைத்தான்
கொல்ல நினைத்தானே குருடன்மகன் சத்ராதி
அதுக்கும் பிழைத்தார்கள் ஐவர்பஞ்ச பாண்டவர்கள்
தப்பிப்பி ழைத்தார்கள் சுவாமியுட புண்ணியத்தால்
மாளிகை வாசலிலே வந்த பிறகாக
பொய்க்குழியை வெட்டியல்லோ போத மனிதர்வைத்தான்
பொய்ச்சிங்கா தனங்களிட்டுப் புகழ்வேந்தர் பஞ்சவரைக்
கொல்ல நினைத்தானே குருடன்மகன் சத்ராதி
அங்கும் பிழைத்தார்கள் ஐவர்பஞ்ச பாண்டவர்கள்
ஏண்ணெயிட்டுக் கொள்ளுமென வண்ணமிட் டழைத்தானே

மல்லர்களை விட்டு வதைத்தெறிந்து போடுமென்றான்
அதுக்கும் பிழைத்தார்கள் ஐவர்பஞ்ச பாண்டவர்கள்
தப்பிப்பி ழைத்தார்கள் சாமியுட புண்ணியத்தால்
பவளத் திருக்குளத்திற் பாரவசி நாட்டினனே
நீரிற் கழுநாட்டி நிர்மூடன் குளியுமென்றான்
கொல்ல நினைத்தானே குருடன்மகன் சத்ராதி
தப்பிப் பிழைத்தார்கள் சாமியுட புண்ணியத்தால்
உண்கின்ற சோற்றிலேதான் ஒருகாலே நஞ்சையிட்டான்
குடிக்கிற தண்ணீரில் கொலைகாரன் நஞ்சையிட்டான்
சோழி விளையாடி சொக்கட்டான் சூதாடி
ஆடாத சூதாடி அரவக் கொடிவேந்தன்
சீமைத் துரைத்தனங்கள் தேசமுழு தும்பறித்தான்
நாடு பறித்தான் நகரமெல்லாம் தான்பறித்தான்
ஆணிப்பொன் தேரும் அணியணிச்சிங் காதனமும்
அந்தமுத லாடுமாடும் அடங்கலும் தான்கெலித்து
ஐவரையுந் தான்கெலித்தான் ஆஸ்தானந் தான்கெலித்தான்
ஐவரையுங் காவலாக அறையி லடைத்துவிட்டான்
பார விலங்குகொண்டு பருவிலங்கு பூட்டினனே
ஏழுலட்சம் பெருவிலங்கு எடுத்துவந்து பூட்டினனே
காற்று நுழையாத கல்லறையாங் கிடங்கில்வைத்தான்
தள்ளியே கொண்டுவந்து தடிவீரர் காவல்வைத்தான்
சுற்றி நகரங்கம் தூதுவரைக் காவல்வைத்தான்
அரையி லிருந்தஎன்னை அம்பலத்தில் தள்ளிவைத்தான்
மூலையி லிருந்தவென்னை முற்றத்தில் தள்ளிவைத்தான்
ஒருவர் மயிர்பிடிக்க ஒன்பதுபேர் துகிலுரிய
இருவர் மயிர்பிடிக்க இருபதுபேர் பின்னிழுக்க
பாவி மயிர்பிடிக்கப் பத்துபேர் துகிலுரிய
ஆடம் பலத்தே அரையர் சபைநடுவே
பேரம் பலத்தே பெரியோர் சபைநடுவே
அரசர் சபையிலே அலையத் துகிலுரிந்தான்
வாய்வரிசை யில்லாமல் வம்பாட்டம் பண்ணினனே
வாடிபோடி யென்றேசி வலதுதுடை யேறுமென்றான்

துஷ்டத் தனங்கள்பண்ணித் துரியோ திரன்பாவி
ஆகடியம் பேசினனே அம்பலவர் தம்சபையில்
பார வனவாசம் பரதேசம் ஓட்டிவிட்டான்
பன்னிரண்டு தன்வருஷம் பாரவனந் திரியுமென்றான்
மறைவா யொருவருஷம் வந்திரு மென்றுசொன்னான்
பதின்மூன்றுஞ் சென்றபின்பு பட்டணத்தே வந்தாக்கால்
பங்குள்ள பிரகாரம் பாதிநாடு தாரேனென்றான்
வந்துவிட்டோ மண்ணவே வனமே குடித்தனமாய்
கூடை தலைமேலே குடிவாழ்க்கை கானகத்தில்
மன்னிவைத்த சும்மாடு வனமே குடியிருப்பாய்
வேடரைப் போலவேதான் வில்லியரைப் போலாக
கள்ளக் குறவரைப்போல் காட்டி லிருக்கின்றோம்
எங்கள் குறைதீர எக்காலஞ் சென்றிடுமோ
நாங்கள் சுகமாக ராச்சியத்தை யாள்வோமோ
பஞ்சவர்கள் சுகமாகப் பாருலகம் ஆள்வாரோ
(நீர்) அறியாது போலாக அண்ணவே கேட்கவந்தீர்
தெரியாது போலாகக் கேட்கவந்தீ ரண்ணவே
ஒன்று மறியீரோ உத்தமரே அண்ணவே
இவ்வார்த்தை தான்கேட்டு ஏதுசொல்வான் மன்னவனும்
பகுதிப் பணம்வாங்கப் போயிருந்தேன் பைங்கிளியே
சேனைத் திரளுடனே சென்றிருந்தேன் வெகுதூரம்
போன பிறகாகப் புதுமை பிறந்ததுகாண்
காற்று விசேஷமாகக் கேட்டுவந்தேன் தங்கையரே
(நான்) அறிந்தேனே யாமாகில் அவகேடு வாராது
அன்றிருந்தே னானாலே அம்பலமு மேற்றுவாரோ
துகிலுரியப் பார்ப்பேனோ துரோபதை நாயகியே
எந்தன் மனம்பொறுத்து இருப்பேனோ தங்கையரே
(நான்) வந்த பிறகந்த வயண மறிந்தேன்காண்
மனது தரியாமல் வந்தே னுனைக்காணச்
சிந்தை மனங்கலங்கித் தேடிவந்தேன் தங்கையரே
உன்வார்த்தை கேட்டபின்பு உள்ள முருகுதம்மா
(நீ) சொன்னபடி யாலேயென் சிந்தைக லங்குதம்மா

(நீ) பத்தினியா ளென்றுசொல்லி சற்று மறிவானோ
உத்தமியா ளென்றுசொல்லி ஊதாரி யறிவானோ
காமாட்சி யென்கிறதை கழுசிறைய னறிவானோ
ஏது மறியாமல் இகட்சிகள் பண்ணிவிட்டான்
ஒன்று மறியாமல் உதாசினங்கள் பண்ணினனே
(அவன்) வாழ்வுங் குலைந்துவிடும் மகிழ்ச்சி யடங்கிவிடும்
செல்வ மடங்கிவிடும் செருக்கு குலைந்துவிடும்
பொறுத்தது னலேயம்மா பொல்லாங்கு வாரதில்லை
அவனுக்கே நாசகாலம் ஆகுது பொறுத்திரம்மா
அஞ்சாதே தங்கையரே ஆயாசங் கொள்ளாதே
(நீ) ஆயாசப் படுவதெல்லா மவனுக்கே கேடுவரும்
பொறுத்தவர் பூமியாள்வார் பொங்கினவர் காடாள்வார்
ஏதுக்கு மஞ்சாதே என்பிறப்பே தங்கையரே
பாரப் புலிபோலே பஞ்சவர்க ளெங்கேயம்மா
வீரம் புலியதுபோல் வீரர்க ளெங்கேயம்மா
மைத்துனன்மா ரைவர்களும் மகாராஜ ரெங்கேயம்மா
ஐவரையுங் காணவென்று ஆவலாய் வந்தேனம்மா
(அவர்) போன விடமறியேன் போயிருக்குந் தாவறியேன்
தங்கு மிடமறியேன் சஞ்சரிக்குந் தாவறியேன்
பார்க்க மனதாகிப் பைங்கிளியே வந்தேனம்மா
காண மனதாகிக் கானகத்தே வந்தேனம்மா
இந்நேர மாச்சுதே இராஜர்களைக் காணேமம்மா
தனியாக வுன்னைவிட்டுத் தருமரு மெங்கேபோனர்
ஒண்டியா யுன்னைவிட்டு உத்தம ரெங்கேபோனர்
இன்றுநான் காணுதற்கு இல்லாமற் போச்சுதம்மா
இன்ன மொருவேளை யிவர்களைநான் காணுகிறேன்
(அவ) ராணய்ப் பிறந்தவர்க ளலைந்தாலுங் குற்றமில்லை
(நீ) பெண்ணாய்ப் பிறந்தவள்தான் பின்தொடர நீதியுண்டோ
ஐவ ருடனேநீ அழுது திரிவானேன்
அழுது திரிவானேன் அல்லற் படுவானேன்
(என்) மாளிகை வாசலுக்கு வாரீரோ தங்கையரே
பார வனந்திரிந்து பஞ்சவர்கள் வாரமட்டும்

எந்தனது மாளிகைக்கு வாரீரோ தங்கையரே
அரண்மனைக் குந்தனைநா னழைத்துமே போகவந்தேன்
வெதும்பி விடாய்த்துநீ வெயிலில் திரிவானேன்
வாரீரோ தங்கையரே மாளிகைக்குக் கொண்டுபோறேன்
(என்று) வருந்தி யழைத்தானே மாபாவி சயிந்தவனும்
அவ்வார்த்தை தான்கேட்டு ஆரணங்கு மேதுசொல்வாள்
ஐவரையும் விட்டு வருவேனோ அண்ணாவே
விட்டுப் பிரியவேதான் வேந்தே மனம்வருமோ
அண்ணாவே நீர்கேளும் ஆனா லொருவார்த்தை
(நான்) வரவேணு மென்று மனது முமக்கிருந்தால்
வனம்போன பஞ்சவர்கள் வருகிற போதாச்சு
ஐவர் வரும்வேளை ஆச்சுது அண்ணாவே
ஐவரைக் கேட்டுநீ அழைத்துப்போ மண்ணாவென்றாள்
பஞ்சவரைக் கேளுமண்ணா பாரவனந் தொலைத்துவாரேன்
ஐவர் வரும்வேளை ஆச்சுது அண்ணாவென்றாள்
இவ்வார்த்தை தான்கேட்டு இடும்பன் சயிந்தவனும்
எண்ணுது மெண்ணியல்லோ இருந்து விசாரமிட்டான்
ஐவர்வந்தால் மோசமல்லோ ஆகாது காரியங்கள்
என்று சயிந்தவனும் எண்ணினான் தன்மனதில்
காவலர்கள் வந்தாலே காரியங்க ளாகாது
கையி லிருந்ததொரு கத்தியைத் தாழவைத்து
கடுக வெழுந்தானே கட்டழகன் சயிந்தவனும்
ஐவர்வந்தால் சேதிசொல்லு மஸ்தினா புரம்போறேன்
இட்டுப் போகவென்றே இந்நேரம் காத்திருந்தேன்
ஐவரை யுங்காணே மம்மா துரோபதையே
இன்னமொரு வேளைவந் திட்டுக்கொண்டு போறேனம்மா
ஐவருக்குச் சொல்லி அழைத்துக்கொண்டு போறேனம்மா
போக விடைதாரும் போய்வாரேன் தங்கையரே
செல்ல விடைதாரும் சென்றுவாரேன் தங்கையரே
என்று மவன்கேட்க ஏதுசொல்வாள் துரோபதையும்
அப்படியே போய்வாரும் அண்ணாவே என்றுசொன்னாள்
விடைபெற்றுச் சயிந்தவனும் வேந்த னெழுந்திருந்து

பர்னசாலை விட்டிறங்கிப் பார்வேந்தன் போகலுற்முன்
கடுக நடந்தானே கட்டழகன் சயிந்தவனும்
அழகு ரதமேறி அக்கான கந்தாண்டி
(அவன்) மச்சு ரதமேறி வாரானே மன்னவனும்
போரான் சயிந்தவனும் பொன்னின் ரதமேறி
அனேகதூரம் போனபின்பு ஆரணங்கு துரோபதையாள்
கத்திதனைக் கண்டாளே கட்டழகி பாஞ்சாலி
வைத்து மறந்தானே மன்னவனும் ஆயுதத்தை
இங்கேவைத்துத் தான்மறந்தா னென்று மவளெழுந்து
கத்தி தனையெடுத்துக் கடுகி நடந்தாளே
அண்ணு சயிந்தவனே அனேகதூரம் போகாதே
நில்லுங்கா ணண்ணுவே நெடுந்தூரம் போகாதே
(என்று) கூட நடந்தாளே கொம்பனையாள் துரோபதையும்
அப்போ சயிந்தவனும் அழும்பு நினைவுகொண்டு
கேளாது போல நடந்தான் கெடுநினைவாய்
அறியாது போலே நடந்தானே ஆணழகன்
கூட நடந்தாளே கொம்பனையாள் துரோபதையும்
சேர நடந்தாளே தேன்மொழியாள் துரோபதையும்
அண்ணுவே அண்ணுவென் றக்கணமே கூச்சலிட்டாள்
அழும்பன் சயிந்தவனுக் கப்போதான் கேட்டதுபோல்
திரும்பி யவன்பார்த்துத் தேரை நிறுத்தினுனே
(அவன்) நெடுந்தூரம் வந்தபின் நிறுத்தினுன் தன்ரதத்தை
அப்போ துரோபதையும் அருங்கிளியா ளேதுசொல்வாள்
அண்ணுவே ஏன்காணும் அனேகதூரம் வந்துவிட்டாய்
இந்தாரு மென்ருளே ஏலக் கருங்குழலாள்
அப்போ சயிந்தவனும் ஆணழக னேதுசொல்வான்
எட்டியே தாருமென்ருன் இருந்தபடி சயிந்தவனும்
அப்போ துரோபதையாள் ஆரணங்கு ஏதுசெய்தாள்
ஒருபடி ஏறியல்லோ உத்தமியா ளிந்தாவென்ருள்
அப்போ சயிந்தவனும் ஆணழக னேதுசொல்வான்
எட்டவில்லை கத்தியென்ருன் இன்னங்கொ டுப்பதற்கு
மற்று மொருபடியை மயிலனையா ளேறினுளே

அப்போதும் எட்ட வில்லை யென்றனே ஆணழகன்
மூன்றும் படியேறி மொய்குழலாள் நின்றுகொண்டு
ஆயுதங்க ளிந்தா னென்றாள் ஆரணங்கு துரோபதையும்
சயிந்தவனுந் தான்பார்த்துச் சந்தோஷ மாகியல்லோ
(நாம்) வந்ததொரு காரியங்கள் வசப்பட்டு தென்றுசொல்லி
மெத்த மனமகிழ்ந்து மெல்லியரைக் கொண்டுபோக
(அவள்) ஏறின போதேயவன் எகிரவிட்டான் தன்ரதத்தை
காற்றாய்ப் பறந்ததுகாண் கட்டழகன் தன்ரதமும்
போகுதே யந்தரமாய்ப் பொல்லாத கானகத்தில்
தோரா வடிவழகி துரோபதையு மேதுசொல்வாள்
அண்ணா சயிந்தவனே அழிநினைவு தேடிவிட்டாய்
ஐவர்களுந் தாமறிந்தால் அனர்த்தம்வரு முந்தனுக்கு
பஞ்சவர்க ளறிந்தாலே பழுதல்லோ உன்குடிக்கு
நிறுத்தும் ரதத்தையென்றாள் நிறுத்தானே பாதகனும்
அப்போ துரோபதையாள் ஆரணங்கு மனங்கலங்கி
சிந்தை கலங்கியவள் திடுக்கிட்டு மெய்மறந்து
மாது மனஞ்சலித்து மயிலனையா ளேதுசெய்தாள்
அப்போ துரோபதையாள் அபயக் குரலிடுவாள்
ஐவர்பஞ்ச பாண்டவரே அபய மபயமென்றாள்
ஆகாய வாணியம்மா அல்லவரும் பார்த்திருங்கள்
ஐயன் பிடாரியரே அந்தர தேவதையே
அந்தர தேவதையே சந்திர சூரியரே
காளிகளே கூளிகளே கானகத்துப் பட்சிகளே
இந்த வனத்தி லிருக்கு மிருகங்களே
பாருங்கள் பாருங்கள் பாவியவன் செய்கிறதை
எல்லோரும் பாருங்கள் இவனுடைய துர்க்குணத்தை
என்னைச் சிறைபிடிக்க இழுத்துக்கொண்டு போறானே
பஞ்சவர்க்குத் தானுரையும் பார்த்திருந்த பட்சிகளே
ஐவருக்குத் தானுரையும் ஆகாய வாணியம்மா
நாய்க்குக் கிடைக்குமோ நல்லமுழுத் தேங்காயும்
செரிப்பேனோ உந்தனுக்குச் சேர்பந்து நான்தருவேன்
(உனக்) காவனென்று பாராதே அடிப்பேன் முறத்தாலே

என்ற துரோபதையு மிளங்கொடியா ளேதுசெய்தாள்
ஐயோ சிவனேயென்று அழுது புலம்புகிருள்
மாயவரே சுவாமியென்று மாது புலம்புகிருள்
அப்போது பஞ்சவர்கள் அரன்பூசை தான்முடித்து
அரிபூசை சிவபூசை எல்லா மவர்முடித்து
நடந்தார்கள் பஞ்சவர்கள் ஞாயி றுதித்தாப்போல்
வாரார்கள் பஞ்சவர்கள் வடக்கெழுந்த சூரியன்போல்
பர்ணசாலை தன்னருகே பஞ்சவர்கள் வந்தார்கள்
அங்கேதான் துரோபதையை ஆரணங்கைக் காணுமல்
காணுமல் பஞ்சவர்கள் கலங்கின ரன்னேரம்
தக்க புகழ்பெரிய தருமரவ ரேதுசொல்வார்
வெற்றி மதயானை வீமனைத் தான்பார்த்து
வீமா மதகரியே வில்வேந்தா என்பிறப்பே
நெருப்பிற் பிறந்தவளை நீலவண்ணன் தங்கையரை
அக்கினியில் வந்துதித்த அபிஷேகப் பத்தினியை
பாஞ்சாலன் பெண்ணை பைங்கிளியைக் காணேனே
அழகில் மிகுந்தபெண்ணை அருங்கிளியைக் காணேனே
ஆரெடுத்துப் போனரோ அறியேனே தம்பியரே
எவரெடுத்துப் போனரோ ஏது மறியேனே
பார்த்துவா தம்பியென்றூர் பார மதகரியை
என்றது கேட்டு எழுந்தார்கள் தம்பியர்கள்
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
ஆயுதங்கள் தாமெடுத்து அடைவுடனே போய்நடந்தார்
தெற்குத் திசையிலே தேர்விஜயன் தேடிவாரான்
வடக்குத் திசைநோக்கி வாரான் சகாதேவன்
மேற்குத் திசையிலேதான் நகுலனும் தேடிவாரான்
கிழக்குத் திசைநோக்கி வீமனுந் தேடிவாரான்
அந்த வனங்களிலே ஆராய்ந்து வாரபோது
தேரடியைக் கண்டுமல்லோ திரும்பினன் வீமனவன்
காற்றுவேக மாகவேதான் கடிகிவந்தான் வீமனவன்
எட்டிப்போய்த் தான்பிடித்தான் இயலான ரதத்தையவன்
வீமனைக் கண்டாளே மெல்லிநல்லாள் துரோபதையும்

அழுதகண்ணைத் தான்துடைத்தாள் ஆயாச முந்தீர்ந்தாள்
கைகொடுத்தான் துரோபதைக்குக் கடுக இறக்கிவிட்டான்
கண்டு இடிவிழுந்தான் காளை சயிந்தவனும்
பார்த்து இடிவிழுந்தான் பாவி சயிந்தவனும்
சிந்தை கலங்கியவன் திடுக்கிட்டு மெய்மறந்து
மூர்ச்சையாய் விழுந்தானே முடிமன்னன் சயிந்தவனும்
ஒருகையால் ரதந்தூக்கி உதிரடித்தான் மண்மேலே
அவனுடைய தேர்ச்சட்டம் அழகு குதிரைகளும்
சட்டஞ்சட்ட மாகவேதான் தவிடுபொடி யாச்சுதங்கே
தேரு முறிந்ததுகாண் சேர்ப்பித்தான் மண்மேலே
வெற்றி மதயானை வீமனவ னேதுசொல்வான்
ஏதடி பெண்ணேநீ யிளங்கொடியே துரோபதையே
வந்த வயணமென்ன வகையாகச் சொல்லுமென்றான்
அப்போ துரோபதையா ளாரணங்கு தான்பார்த்து
அஞ்சிப் பயந்துமவள் அருங்கிளியா ளேதுசொல்வாள்
வந்தானே சயிந்தவனும் வாருமிரு மென்றுசொன்னேன்
(நாம்) வனவாசம் வந்ததொரு வயணங்கள் கேட்கையிலே
சொன்னேன் வயணமெல்லாம் சூதாகத் தான்கேட்டு
அவ்வார்த்தை தான்கேட்டு ஆயுதத்தைக் கீழேவைத்தான்
மறந்துவிட்டா னென்று மன்னவரே நானெண்ணி
ஆயுதத்தைத் தானெடுத்து அண்ணுவென் றோடிவந்தேன்
எட்டிக் கொடுமென்றான் ஏறினேன் தேர்மேலே
ஏறின போதே எகிரவிட்டான் தன்ரதத்தை
இவ்வளவு தான்சேதி யென்றா ளிளங்கொடியும்
அவ்வார்த்தை தான்கேட்டு ஆங்கார வீமனவன்
வெற்றி மதயானை வீமனவ னேதுசெய்தான்
காட்டுக் கொடிபிடுங்கிக் கடுகியே ஓடிவந்தான்
மூர்ச்சை தெளிந்தானே முடிமன்னன் சயிந்தவனும்
காட்டுக் கொடியாலே கட்டினான் சயிந்தவனை
அப்போ மதவீமன் ஆங்காரங் கொண்டவனும்
தன்காலில் கட்டிக்கொண்டு தானடந்தான் வீமனுமே
பர்னசாலை தன்னருகே பாவிதனைக் கொண்டுவந்தான்

தருமருக்கு முன்னாலே தள்ளிக்கொண்டு வந்தானே
கண்டாரே தர்மராயர் காளை சயிந்தவனை
வாருங்காண் மைத்துனரே வந்தீரெனைத்தேடி
தேடியே வந்ததென்ன சீரான கானகத்தில்
வந்த வயணமெல்லாம் வாய்திறந்து சொல்லுமென்றார்
தர்மரவர் கேட்கையிலே தார்வேந்தன் வாய்திறந்து
மாபாவி சயிந்தவனும் வார்த்தைக ளேதுசொல்வான்
(உங்களைப்) பார்க்கப் பிரியமுடன் வந்தேனே பஞ்சவரே
காண மனதாகி வந்தேனே காவலரே
வந்த இடந்தனிலே உந்தனைநான் காணவில்லை
தங்கையரைக் கண்டேனே தங்கள் வயணமெல்லாம்
விபரமாய்ச் சொல்லுமென மெல்லியரைத் தான்கேட்டேன்
அப்போ துரோபதையாள் ஆரணங்கு மேதுசொல்வாள்
வனவாசம் வந்ததொரு வயணமெல்லாந் தானுரைத்தாள்
திரியோ திரனுரைத்த சேதிகளைத் தானுரைத்தாள்
அவ்வார்த்தை தான்கேட்டு அறவே மனஞ்சலித்தேன்
இருமிரு மென்றுசொல்லி யேகி வழிநடந்தேன்
வச்சிரா யுதத்தை வைத்து மறந்துவிட்டேன்
கையி லெடுத்துக்கொண்டு கடுகவந்தாள் தங்கையரும்
எட்டிக் கொடுமென்றேன் இயலான தங்கையரே
அவ்வளவில் வீமன்வந்து அடித்தானே கெதையாலே
இடுப்பிலே கயிறுகட்டி இழுத்துவந்தான் தங்கள்முன்னே
இவ்வார்த்தை சொல்லி இளைந்தாற்போ லேயழுதான்
சாயாப்பு மன்னவரும் தரும ரதுகேட்டு
மெத்த மனமுருகி வேந்தரவ ரேதுசொல்வார்
வெற்றி மதயானை வீமரைத் தானழைத்து
கனிகள் பறித்துக்கொண்டு கடுகியே வாருமென்றார்
அந்தச்சொல் தாங்கேட்டு அனைவோருங் கோபமுற்றார்
நகுலச காதேவ ராசாக்கள் கோபமுற்று
கண்கள் சிவந்துமவர் காந்தாளக் கோபமுற்று
நெற்றி விழிசிவக்க நீலவிழி பொறிபறக்க
உச்சி மயிர்துடிக்க உத்தமர்க ளேதுசொல்வார்

அண்ணாவே நீர்கேளும் அடியே னொருவார்த்தை
துரோபதையைக் கொண்டுபோக வந்தவொரு தோஷியற்கு
பாவையரைக் கொண்டுபோக வந்தவொரு பாதகற்கு
போசனமும் போடுவாரோ புகழ்பெரிய அண்ணாவே
ஆக்கினைகள் பண்ணி அனுப்புவோ மிவனையென்றார்
பொல்லாத பாதகனைப் போகவிட லாகாது
என்று மவர்கள்சொல்லி எல்லவரு மோர்முகமாய்
ஆனந்த மார்பரெல்லாம் அண்ணருடன் கோபமிட்டார்
தக்க புகழ்பெரிய தருமரவ ரேதுசொல்வார்
கோபித்த கோபமெல்லாங் குளிர்ந்த தழையாச்சு
வெளுத்ததைப் பாலென்பார் வெள்ளத்தைத் தண்ணீரென்பார்
கபடறியார் சூதறியார் கள்ளமொன்றுந் தாமறியார்
பொய்சொல்லார் தருமரவர் புண்ணியனு ரேதுசொல்வார்
கோபித்துக் கொண்டா லாகாது கொற்றவரே
ஆங்காரக் கெர்வமது ஆருக்கு மாகாது
ஆணவ முண்டானு லழிந்துவிடுங் காலமப்பா
பொறுத்தவர் பூமியாள்வார் பொங்கினவர் காடுறைவார்
மனதுக்குறை வையாதே வந்தவற்குப் பசியாற்றும்
கனிகள் பறித்துமே கடுகியே வாருமென்றார்
எனக்கெதிர் பேசவேண்டாம் எழுந்து நடவுமென்றார்
அவ்வார்த்தைத் தாங்கேட்டு அண்ண னடிவணங்கி
அஞ்சிப் பயந்தெழுந்தார் அழகான தம்பியர்கள்
காட்டிற் பயந்தோடிக் கனிகள் தமைப்பறித்து
கொப்பென அண்ணனிடங் கொண்டுவந்து வைத்தார்கள்
வாங்கியே தருமரவர் மைத்துனு புசியுமென்றார்
மனதில் பயமுடனே வாங்கிப் புசித்தானும்
கனிகள் புசித்துமவன் கைபூசிக் கொண்டானும்
போய்வாரே னென்று பொட்டெனச் சரணமிட்டான்
தக்க புகழ்பெரிய தருமரவ ரேதுசொல்வார்
வெற்றி மதயானை வீமனைத் தானழைத்து
மைத்துனர் தம்முடனே மன்னர்களே நீங்களும்போய்
வழிகூட் டனுப்பிவைத்து வாருங்கள் தம்பியென்றார்

அப்படியே நல்லதென்று அழகான தம்பியர்கள்
வெற்றி மதயானை வீமனவன் தானெழுந்து
அண்ண னுரைப்படிக்கு அழைத்துவந்தான் சயிந்தவனை
சென்று ரிரு வருமாய்ச் சிலதூ மானபின்பு
போர்வீம னேதுசெய்தான் போற வழிதனிலே
ஐந்து குடிமிவைத்து அம்பாலே தலைசிரைத்தான்
மீசை சிரைத்தானே மின்போடி பண்ணினனே
தாடி சிரைத்தானே தலைபோடி பண்ணினனே
தலைபோடி பண்ணினனே தாமமுடி யான்தனக்கு
கரும்புள் ளி செம்புள்ளி சேர்த்தழகாய்ப் பொட்டுமிட்டான்
செம்புள் ளி கரும்புள்ளி சேர்த்தழகாய்ப் பொட்டுமிட்டான்
இப்படி யாகவே இவரிருக்கும் வேளையிலே
தக்க புகழ்பெரிய தரும ரவர்பார்த்து
அர்ச்சுனா தம்பியரே அண்ணனைக் காணோமே
மைத்துனரைக் கூட்டிப்போய் வழிவிட்டு வாருமென்றேன்
போய்நெடும் போதாச்சு புகழ்வீரன் வீமனைத்தான்
வீமனைத் தேடிநீ விரைவில்வந்து சேருமென்றார்
கடுங்காளை வீமனைத்தான் கண்டழைத்து வாருமென்றார்
அப்படியே நல்லதென்று அருச்சுனனுந் தானெழுந்தான்
கச்சை வரிந்துகட்டிக் கருங்கச்சை சுங்குவிட்டு
வில்லெடுத்துக் கைபிடித்து விஜயனும் போய்நடந்தான்
அண்ணனைத் தேடிவந்தான் அருச்சுன ராஜதுரை
வீமனைப் பார்த்தானே விஜய னருச்சுனனும்
கண்டானே சயிந்தவனைக் காளை மனமகிழ்ந்து
பார்த்தானே சயிந்தவனைப் பலகாலும் பூரித்து
வீமனைத் தான்பார்த்து விஜயனு மேதுசொல்வான்
என்ன மரியாதை செய்தீரென் னண்ணவே
மட்டையடி மொட்டையிட்டால் வாகனம் வேண்டாமோ
இருமிரு மண்ணவென்று ஏகி நடந்தானே
கானகத்தி லேநுழைந்து கழுதையொன்று தான்பிடித்து
மலைக்கழுதை கொண்டுவந்து மன்னவனை யேற்றினனே
இப்படி யாகவேதா னிவரிருக்கும் வேளையிலே

தக்க புகழுடைய தருமரவர்பார்த்து
நகுலரைத் தானழைத்து ராசர்களைத் தேடுமென்றார்
கானகத்திற் போனவர்கள் கடுகவந்து சேரவில்லை
கண்டழைத்து வாருமையா காளை யிருவர்களை
நாம முடியான் நகுல னதுகேட்டு
அருளருளு மையா அழைத்தோடி வாரேனென்று
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு.
ஆயுதங் கைப்பிடித்து அடவிதனிற் போய்ப்புகுந்து
பார்த்தண்ணரைத்தேடிப் பரிநகுல னோடிவந்தான்
கானகமெல் லாந்தேடிக் கண்டானே அண்ணன்மாரைக்
கண்டான் சயிந்தனுட கண்காட்சி யானதெல்லாம்
பார்த்தான் சயிந்தவனைப் பாவிக்கு ஏற்குமென்று
சந்தோஷப் பட்டானே சயிந்தவனைக் கண்டவுடன்
வீமா மதகரியே வில்லேந்து மன்னர்களே
மூவிரண்டு குடுமிவிட்டு மொட்டை யடித்தீரோ
என்னு ஹுபகாரம் ஏதுசெய்வேன் மைத்துனற்கு
சாணி யெடுத்துவந்து சரியான வுண்டைபண்ணி
தலைமேலே வுண்டைவைத்துத் தனிவிளக் கேற்றினனே
இப்படி யாகவே யிவரிருக்கும் வேளையிலே
அநேக நெடும்பொழுது ஆன பிறகாக
தருமரவரெழுந்து தம்பியைத் தாமழைத்து
மூவர்களும் போனரே முடிமன்ன ராஜாக்கள்
இன்னம் வரக்காணேன் என்னமோ நானறியேன்
தேடி யழைத்துநீ சீக்கிரத்தில் வாருமென்றார்
தாம முடியானும் சகாதேவன் தான்கேட்டு
அப்படியே நான்போ யழைத்துமே வாரேனென்று
கச்சை வரிந்துகட்டிக் கருங்கச்சை சுங்குவிட்டு
அம்புவில்லுந் தானெடுத்து ஆணழகன் போகலுற்றான்
அப்போ துரோபதையும் ஆரணங்கு தானெழுந்து
தர்மருக் கெதிரில்வந்து சாஷ்டாங்க தெண்டனிட்டு
நானுங்கூடப் போய்வாரேன் ராஜர்களைத் தேடவென்றாள்
தருமர துகேட்டுத் தளராம லேதுசொல்வார்

அப்படியே போய்வாரும் ஆரணங்கு துரோபதையே
சீக்கிரத்தில் வாருமென்று செலவுதந்தார் தர்மலிங்கம்
கூடத் தொடர்ந்தாளே கொம்பனையாள் துரோபதையும்
இருவரு மாகவல்லோ இசைந்து வழிநடந்து
அண்ணர்களைத் தேடியே ஆணழகன் வந்துவிட்டான்
கானகத்தி னுள்நுழைந்து கண்டானே அண்ணர்களை
மைத்துன ரைக்கண்டு வரிசையெல்லாந் தான்பார்த்து
உள் ளங் குளிர்ந்தானே உடம்புபூ ரித்தானே
சந்தோஷப் பட்டு சர்வாங்கம் பூரித்து
மரியாதை நானென்ன மைத்துனற்குச் செய்வேன்காண்
கழுதையின்மே லிருந்தவனைக் கடுகி யிறக்கிவிட்டான்
முன்னும் பின்னுக முகந்தெரிய ஏற்றினன்
எருக்கமாலை கொண்டுவந் திவன்கழுத்தி லேபோட்டான்
இந்த வரிசையெல்லாம் விந்தைகண் காட்சியென
மன்னர்கள் தம்மருகே வந்துநின்ருள் பாஞ்சாலி
அண்ணனைக் கண்டாளே ஆனந்த மாளுளே
தமயனைக் கண்டாளே சந்தோஷ மாளுளே
தாமமுடி வீமரேநீர் தலைபோடி பண்ணீரே
வாள்விஜயா அர்ச்சுனரே வாகனங்கள் தந்தீரே
காளை நகுலரேநீர் கரும்புள்ளி போட்டீரே
மூன்னூற் சகாதேவர் முன்பின்னுய் வைத்தீரே
எருக்கமாலை கொண்டுவந்து இவர்கழுத்திற் போட்டீரே
என்ன மரியாதை அண்ணனுக்கு நான்செய்வேன்
பாஞ்சாலன் பெற்றெடுத்த பைங்கிளியு மேதுசொல்வாள்
வானத் தருந்துதியாள் மாசுபடாப் பத்தினியாள்
ஐவருக்குந் தேவியாகி அழியாத பத்தினியாய்க்
கற்புடைய பத்தினியாய்க் காப்பது மெய்யானுல்
(இக்) கழுதையைத் தொட்டவர்கள் கடுக நடவாமல்
ஏறின சயிந்தவனை இறங்கவே வொட்டாமல்
அரவக்கொடி யோன்பார்க்க அம்பலம் போமளவும்
ஏறின கழுதை யிறங்காம லிருக்கவென்று
கட்டவிழ்க்க வந்ததொரு காவலர்க ளெல்லோரும்

ஓட்டிக்கொண்டு போகவென்று உத்தமியுஞ் சாபமிட்டாள்
(என்) வங்கிஷத்தார் தொட்டால் வனக்கழுதை விட்டிறங்கி
காட்டுக் கழுதையது கடுகெனவே தானிறங்க
மற்றவர்கள் தொட்டால் வலித்துக்கொண் டோடவென்று
இப்படிக்குச் சொல்லியல்லோ இட்டாள் பெருஞ்சாபம்
சாபங் கொடுத்தாளே தருமர்பெருந் தேவியவள்
இப்படியாய்ச் சொல்லி இருந்தாளே துரோபதையும்
அடித்துத் துரத்தினர் அங்கே சயிந்தவனை
துரியனுக்குச் சொல்லுமென்று துரத்தினர் சயிந்தவனை
வருகுதே அக்கழுதை வனமா வனந்தாண்டி
தான்விட்டு வந்ததொரு தன்னுடைய சேனையண்டை
வந்து கலந்தானே வனக்கழுதை தன்னுடனே
கண்டாரே சேனையர்கள் கண்கள்ரெண்டுங் கொள்ளாமல்
பார்த்தாரே சயிந்தவனைப் பார்வைரெண்டுங் கொள்ளாமல்
(இது) என்ன அதிசயங்க ளெவர்செய்த கோலமென்று
கட்டை யவிழ்க்கவென்று காவலர்க ளோடிவந்து
தொட்டவிழ்க்க வேதாம் ஓட்டிக்கொண்டு போனர்கள்
ஓட்டிக்கொண்ட சேனையுட னுத்தமனும் போய்நடந்தான்
அக்ரோணி சேனையுடன் ஆணழகன் போகலுற்றான்
காடு செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறு சுனைதாண்டி யதிக வனந்தாண்டி
அஸ்தினு புரத்தே அடுத்தது அக்கழுதை
கடையுங் கடைத்தெருவிற் கழுதை வருகையிலே
கழுதையைத் தொட்டவர்கள் கடுகியே கூடவாரூர்
பட்டணத்தி லெல்லவரும் பரிவாகப் பார்த்தார்கள்
என்ன அதிசயங்க ளென்பார்க ளெல்லவரும்
மாடத்தில் மண்டபத்தில் வந்தேறிப் பார்ப்பார்கள்
கோபுரத்தி லேறிநின்று குலுங்க நகைப்போரும்
சொல்லிச் சிரிப்போரும் சீச்சீச்சீ யென்போரும்
இவனுக்கு இக்கழுதை ஏதென்று சொல்வாரும்
சாமத் துரோகியிவன் சதிசெய்தா னென்பாரும்
இப்படி யாக இவர்களுஞ் சொல்லையிலே

மற்று மொருவன்வந்து வாய்திறந்தங் கேதுசொல்வான்
துரியனுட சொற்கேட்டுத் துரோபதையைக் கொண்டுவரப்
போனானே கானகத்திற் போர்மன்ன ராஜரண்டை
ஐவரில்லா வேளையிலே ஆரணங்கைக் கொண்டுசென்றான்
அப்போ துரோபதையும் அபய மபயமென்றாள்
அபயக் குரல்கேட்டு ஐவர்களு மோடிவந்தார்
வெற்றி மதயானை வீம னவன்பார்த்து
மயிலணையைக் கொண்டுபோக வந்தவொரு பாவிதன்னை
விடலாகா தென்றுசொல்லி வீமன் மனதிலெண்ணி
அடையாளம் பண்ணி அனுப்பினான் திரியனண்டை
என்று மவர்கள்சொல்லி யிருக்கின்ற வேளையிலே
அந்தத் தெருத்தாண்டி அப்பாலே போறானே
மாடத் தெருத்தாண்டி மன்னவர் வீதிவிட்டு
திரியோ திரனிருக்கும் சிம்மா சனத்தருகே
வந்தது அக்கழுதை மகாராஜன் முன்னாலே
அம்பலத்தார் கண்டார்கள் ஆச்சரியப் பட்டார்கள்
திரியோ திரன்கண்டு சிந்தை மனங்கலங்கி
உள்ளங் கலங்கியல்லோ ஓடிவந்தான் சயிந்தனண்டை
இறங்கென்று கைகொடுத்தா னிழுத்துக்கொண் டோடுகுது
ஐயோதெய்வ மேயிந்த அநியாயம் நானறியேன்
என்னை யிழுத்துக்கொண் டோடுகுது இக்கழுதை
கூவி யலறுகிறான் கொப்பெனவே திரியோதிரன்
அபயமிட்டுச் சுற்றுகிறா னம்பலத்தார் தங்கள்முன்னே
அங்கே யிருந்தவர்கள் அனைவோருந் தாம்பார்த்து
கலுக்கென்று தான்சிரித்தார் கட்டழக ரெல்லோரும்
சிரித்ததை தான்பார்த்துத் திரியனுட தம்பிமார்கள்
சிரிக்க வுடலெடுத்தோம் சீயென்னப் பேரெடுத்தோம்
என்று மவர்சொல்லி யிவனருகி லோடிவந்து
தம்பிமா ரெல்லோரும் தமயனுக்குக் கைகொடுத்தார்
அத்தண்ட பேர்களையும் அக்கழுதை வலித்தோடும்
அப்போது எல்லோரும் அலறுகிறார் கூச்சலிட்டு
ஐயையோ தெய்வமென்று அல்லவரும் புலம்புகையில்

அங்கிருந்த ராசாக்க ளானதொரு மந்திரிகள்
பார்த்து மவர்நடுங்கிப் பதுங்குவார் துரைகளெல்லாம்
இப்படி யாகவே இவர்கள்படும் பாடதனை
தூய குலத்துதித்த துரோணரவர் ஓடிவந்து
காசிவள நாடாளுங் கர்னரைக் கண்காட்டி
சர்ப்பக்கொடி யோனுடனே தம்பிமா ரானவரும்
சாயாம்பு மேனி சயிந்தவ ரானவரும்
மற்றுஞ்சில மன்னவரும் மகுடமுடி ராஜர்களும்
இன்னஞ்சில சேனைகளும் எல்லோரு மொன்றாகக்
காட்டுக் கழுதையுடன் கடிந்துமவ ரோடுகிறார்
(நாம்) கண்டுசும் மாயிருக்கக் காரியங்க ளல்லவென்றார்
பார்த்திருப் போமென்றால் பரிதாபந் தோணுதையா
இதுக்கொரு யோசனைகள் இயம்புங்காண் மன்னவரே
அப்போது கர்னருமே ஆணழகர் ஏதுசொல்வார்
துரோபதையைச் சொன்னதொரு தோஷ மிதுகாணும்
பத்தினியைப் பேசினதோர் பாவ மிதுகாணும்
என்றுசொல்லிக் கர்னருமே இவர்க ளருகில்வந்து
அப்போது கர்னருமே அனைவரையுந் தாம்பார்த்து
குலுங்க நகைத்துக் கொப்பெனவே ஓடிவந்து
பாரளந்த மாயன்திருப் பாதமதை மனதிலெண்ணி
பெருமாள் துணையென்று பிடித்தானே தன்கையால்
கடுக இழுத்தானே கர்ன மகாராஜன்
கழுதையைத் தட்டியே கடுக இறங்குமென்றான்
அத்தண்ட பேர்களுமே அல்லவருங் கையைவிட்டார்
அப்போ சயிந்தவனும் அங்கே யிறங்கிவிட்டான்
திரியோ திரன்முதலாய்ச் சேனையெல்லாம் வந்தார்கள்
அவரவர்க ளாசனத்தி லனைவோரும் வீற்றிருந்தார்
அம்பல வாசலிலே அழைத்துவந்தார் சயிந்தவனை
தென்ன முடிவேந்தன் திரியோ திரராசன்
மைத்துனரைத் தான்பார்த்து மகாராச னேதுசொல்வான்
கோதை துரோபதையைக் கொண்டுவரப் போனீரே
மட்டையடி மொட்டையிட்டு வாகனத்தின் மேலேற்றி

அனுப்பினா ரார்காணும் ஆணழகா சொல்லுமென்றான்
பேசப் பலனழிந்து பின்வேந்த னேதுசொல்வான்
போனதுவும் வந்ததுவும் புதுமை நடந்ததுவும்
அங்கே நடந்ததொரு ஆச்சரியந் தானுரைத்தான்
தேசத்தை யாளுகிற திரியோ திரன்பார்த்து
அவ்வார்த்தை தான்கேட்டு அறவே மனஞ்சலித்தான்
விரிசிந்து ராசனுமே மைத்துனற் கேதுசொல்வான்
வெற்றி மதயானை வீமனைக் கொல்லவென்று
பரமனை நோக்கியே பாரத் தபசுபண்ணி
வீமனைக் கொல்லவென்று வேணவரம் பெற்றுவாரேன்
என்று நடந்தானே இயலான சயிந்தவனும்
தெற்குத் தெருதாண்டி தேரோடும் வீதிவிட்டு
காடுஞ் செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறுஞ் சுனையுமங்கே அதிகவனந் தான்தாண்டி
மகாமுனிகள் தபசுபண்ணும் மாயமலை தான்தாண்டி
தானுந் தபசுபண்ணான் தாம முடியானும்
ஆதி சிவனையல்லோ அடிபணிந்து தானினைந்து
அருந்தபசு பண்ணினானே அங்கே சயிந்தவனும்
அப்போ பரமசிவன் அவனுக் கெதிரில்வந்து
என்ன வரம்வேணும் எந்தனைக் கேளுமென்றார்
அப்போ சயிந்தவனும் அனேக வரம்கேட்டான்
கேட்ட வரங்களெல்லாம் கிருபையாய்த் தாம்கொடுத்தார்
ஆதி சிவனருளால் அதிகவரம் பேறுபெற்றான்
வீமனைக் கொல்லவென்று வேண வரங்கள்பெற்றான்
கெதைகொன்றை மாலைகளுங் கேட்டுமிகப் பேறுபெற்றான்
வரங்களது பேறுபெற்று வாரானே சயிந்தவனும்
அஸ்தினா புரந்தனக்கு ஆணழகன் போகவென்று
மகாதபசு பண்ணதொரு மாமலையை விட்டிறங்கி
நடந்தானே சயிந்தவனும் நாலுதிக்குந் தாமதிர
காடுஞ் செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறுஞ் சுனைதாண்டி அதிக வனந்தாண்டி
வேங்கை யடர்ந்தவனம் வெண்களாப் பூத்தவனம்

கோங்கு பெருத்தவனம் கொன்றைகளாப் பூத்தவனம்
மூங்கி லடர்ந்தவனம் முல்லைமல்லி பூத்தவனம்
எங்கும் புலிகரடி இருக்கும் வனந்தாண்டி
மலைப்பாம்பு குடியிருக்கும் மல்லர் வனந்தாண்டி
இருளர் குடியிருக்கும் இருண்ட வனந்தாண்டி
கள்ளர் குடியிருக்கும் கனத்த வனந்தாண்டி
இருண்ட வனந்தாண்டி யிளந்தோப்புத் தான்தாண்டி
வனமா வனந்தாண்டி வந்துவிட்டா னத்திபுரம்
அஸ்தின புரமதனில் ஆண ழகன் போய்ச்சேர்ந்தான்
தென்ன முடிவேந்தன் திரியோ திரனிருக்கும்
சபையிற்சிம் மாதனத்திற் சயிந்தவனும் வந்தானே
மாநாகங் கொண்டவனும் மைத்துனரைத் தான்பார்த்து
அரவக் கொடியோனும் அத்தானைத் தான்பார்த்து
கடுகவே தானிறங்கிக் கைகொடுத்துத் தான்தழுவி
ஆரடா மல்லர்களே அருகிருக்குஞ் சேவகரே
சயிந்தவனார் வீற்றிருக்க சிங்கா சனம்போடும்
ஏவல்பணி செய்கிறவர் எல்லவருந் தாங்கேட்டு
சொல்லப்பெற்றோ மென்றுமவர் சுருக்கா யெழுந்திருந்து
கூறப்பெற்றோ மென்றுசொல்லி கும்பிட் டெழுந்திருந்து
சேவக ரெடுத்துவந்தார் சிம்மா தனமுமிட்டார்
அப்போ திரியோதிரன் அத்தானைத் தான்பார்த்து
வந்து நெடுநேரம் நின்றீரே மைத்துனரே
இட்டசிம் மாதனத்தில் ஏறியவன் வீற்றிரென்றான்
அப்போ சயிந்தவனும் ஆண லழகுமன்னன்
இட்டதொரு சிம்மாதனம் ஏறியவன் வீற்றிருந்தான்
அப்போ திரியோதிரன் ஆணழக னேதுசொல்வான்
கானகங்கள் போனீரே கர்த்தாவைக் காணவென்று
கர்த்தாவைக் கண்டீரோ கனத்தவரம் பெற்றீரோ
ஐவரையுங் கொல்லுதற்கு ஆனவரம் பெற்றீரோ
பஞ்சவரைக் கொல்லுதற்குப் பலத்தவரம் பெற்றீரோ
எந்தன் மனங்குளிர எனக்கறியச் சொல்லுமென்றான்
அப்போ சயிந்தவனும் ஆணழக னேதுசொல்வான்

போனதுவும் வந்ததுவும் புனிதரைக் கண்டதுவும்
ஐவரையுங் கொல்லவென்று ஆனவரம் பெற்றதுவும்
நாலிரண்டு வார்த்தைகளாய் நடத்தினன் சயிந்தவனும்
கேட்டு மனமகிழ்ந்தான் கீர்த்திபெற்றுரே மென்றுசொல்லி
வெற்றிபெற் றுரேமென்று வேந்தன் மகிழ்ந்திருந்தான்
இந்த விதமாக இவரிருக்கும் வேளையிலே
மூன்று வதுவருஷம் முடிந்தது மன்னவர்க்கு

மூன்றுவது முருக்கமகாரிஷிவனம் முற்றிற்று.

------ : : ------

## நான்காவது காளமகாருஷிவனம்.



நான்கா வதுவருஷம் பிறந்தது பஞ்சவர்க்கு
முருக்கமகா ருஷிவனத்தை முடிமன்னர் தாம்தாண்டி
கூடை தலைமேலே குடிவாழ்க்கை கானகத்தில்
கோலிவைத்த சும்மாடு கூடைதலை மேலேவைத்து
மன்னிவைத்த சும்மாடு வனவாசங் குடித்தனமாய்
அந்த வனந்தாண்டி அப்பாலே போகலுற்றார்
காடுஞ் செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறுஞ் சுனைதாண்டி அப்பாலே போகலுற்றார்
காளமகா ருஷிவனத்தில் கடுகிவந்தார் பஞ்சவர்கள்
அவ்வனத்திற் போய்ச்சேர்ந்தார் ஐவர்பஞ்ச பாண்டவர்கள்
பச்சைத் தழையொடித்துப் பர்னசாலை யுண்டுபண்ணுர்
ஓரடுக்குப் பர்னசாலை முடிமன்ன ருண்டுபண்ணுர்
மூன்றடுக்குப் பர்னசாலை முடிமன்ன ருண்டுபண்ணுர்
ஐந்தடுக்குப் பர்னசாலை ஆணழக ருண்டுபண்ணுர்
பர்னசாலை மேலேயல்லோ பஞ்சவர் குடித்தனமாய்
மாது துரோபதையும் மன்னர்பஞ்ச பாண்டவரும்
காயுங் கனியுந்தின்று காலங்க ழிக்கிறுர்கள்
அவ்வனத்திற் பஞ்சவர்கள் அவரிருக்கும் வேளையிலே
மாநாகங் கொண்டதொரு மகாராஜ னேதுசெய்வான்

அரவக் கொடியோனும் அங்கவ னேதுசொல்வான்
சபைகள் நிறைந்திருக்கச் சர்ப்பக்கொடி யோனுரைப்பான்
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் ஆரணியம் போனாரே
செத்தார் பிழைத்தாரோ சேதி தெரியவில்லை
மாண்டார் பிழைத்தாரோ வார்த்தை தெரியவில்லை
எந்த வனமதனி லிருக்கிறா ரென்றறியேன்
காளிபே ரண்டாநீ கடுகவே தானேகி
ஐவரையும் நீதேடி அவரிருக்குந் தாவறிந்து
தேடியே நீபார்த்துத் திரும்பிவந்து சேருமென்றான்
அவ்வார்த்தை தான்கேட்டு அருகிருந்த தூதுவர்கள்
சொல்லப்பெற் றோமென்று சுருக்கா யெழுந்தார்கள்
கூறப்பெற் றோமென்று கும்பிட் டவரெழுந்து
அஸ்தினா புரந்தாண்டி ஆரணியந் தேடிவாரார்
காடு மலைகளிலுங் கடுகவே தேடிவாரார்
தினகரன் வனந்தனிலே தேடினார் பஞ்சவரை
அங்கேயுங் காணமல் அப்பாலே தேடிவாரார்
அங்கெங்குங் காணவில்லை ஐவர்பஞ்ச பாண்டவரை
காளமகா ருஷிவனத்தே கடுகியே வந்தார்கள்
காளமகா ருஷிவனத்திற் காவலர்கள் பஞ்சவரை
பர்னசாலை மேலாகப் பஞ்சவரைக் கண்டார்கள்
இருக்கிறா ரென்றறிந்து ஏகி வழிநடந்தார்
காடுஞ் செடிதாண்டி கடுகியே வாரார்கள்
ஆறுஞ் சுனைதாண்டி அவசரமா வோடிவந்தார்
மகாராஜன் வீற்றிருக்கும் மண்டபத் தருகில்வந்தார்
திரியோ திரனிருக்கும் சிம்மா தனத்தருகில்
அரசன் எதிரில்வந்து அடிவணங்கித் தெண்டனிட்டார்
கண்டு திரியோதிரன் கட்டழக னேதுசொல்வான்
பார்த்த திரியோதிரன் பார்மன்ன னேதுசொல்வான்
போனீரே தூதுவரே புதுமையென்ன சொல்லுமென்றான்
ஐவரைத் தேடிநாங்கள் ஆரணியம் போனோமே
காள்மகா ருஷிவனத்திற் கண்டோமே பஞ்சவரை
பர்னசாலை மேலாகப் பஞ்சவரைக் கண்டோமே

என்றுசொல்லத் தான்கேட்டு எரிநாகங் கொண்டவனும்
கண்கள் சிவந்தானே *காந்தாளப் பட்டவனும்
மாமாவைத் தானழைத்து மாநாக னேதுசொல்வான்
இன்னமும் பஞ்சவர்க ளிருக்கிறார் கானகத்தில்
மாளாமற் பஞ்சவர்கள் வனமே திரிகிறார்கள்
தப்பிப் பிழைத்தாலே தாரணியை யாள்வாரே
பங்குள்ள பிரகாரம் பாதிநாடு ஆள்வாரே
எந்தவித மானாலும் இறக்கவகை பார்க்கவேணும்
ஐவரையுங் கொல்லுதற்கு ஆலோசனை சொல்லுமென்றான்
மாமாவே யெந்தனக்கு வார்த்தை யுரையுமென்றான்
என்றது தான்கேட்டு ஏதுசொல்வான் மருகனுக்கு
† சாமத்து ரோகியவன் சகுனி யெடுத்துரைப்பான்
கொல்லைக்குப் பல்லி குடிக்குச் சகுனியல்லோ
துரியனைத் தான்கெடுக்கச் சொல்லுகிறான் யோசனைகள்
அப்பா மருமகனே ஐவரையுங் கொல்லவென்றால்
காள மகாரிஷியைக் கருதித்தவம் பண்ணினாலே
அருந்தபசு பண்ணினாலே அந்தமுனி வந்திடுவார்
ஐவரைக் கொல்லவென்று அவரை மனுக்கேட்டால்
நல்லதென்று சொன்னாலே நாடெல்லா முன்னதப்பா
தபசிற் பெரியவர்காண் சாமிக்கொப் பானவர்காண்
வரத்திற் பெரியவர்காண் மகாதேவர்க் கொப்பாவார்
அவராலே யாகுமப்பா ஐவரையுங் கொல்லுதற்கு
உன்னாலே யானமட்டும் உத்தமனே பாருமென்றான்
என்றுசொல்லத் தான்கேட்டு எழுந்தான் திரியோதிரன்
உக்கிர முடனெழுந்து ஒருவனுமாய்ப் போறானே
காடு செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறுஞ் சுனையுமல்லோ அரிய வனந்தாண்டி
ஆரணியந் தன்னிலே அரவக் கொடியோனும்
வந்து மிருந்துமவன் மகாதபசு பண்ணுகிறான்

---

* காந்தாளம்=கடுங்கோபம்.

† சாமத்துரோகி=மிகுபாதகன்.

காள மகாமுனியைக் கருதி மனதிலெண்ணி
அருந்தபசு பண்ணினனே அரவக் கொடியோனும்
வேண தபசுபண்ணுன் வேந்தரைக் கொல்லவென்று
பாவி தபசுபண்ணுன் பஞ்சவரைக் கொல்லவென்று
இப்படியாய்த் தவமிருந்தான் எரிநாகங் கொண்டவனும்
அப்போ மகாமுனியும் அறிந்தார் தவநிலையை
சடையுஞ் சடைமுடியும் தம்பிரானைப் போலாகக்
இவருடைய சடையழகும் ஈஸ்வரரைப் போலாகக்
காலில் மிதியடியும் கையிற் கமண்டலமும்
திரியோ திரனருகே சேர வருகையிலே
கண்டுதிரி யோதிரனும் கடுக வெழுந்திருந்து
பார்த்துதிரி யோதிரனும் பற்றற்ருேர்க் கெதிரில்வந்து
மூத்து முடிவேந்தன் முனிக்கெதிரி லோடிவந்து
சுற்றி வலம்வந்து தொழுதிறங்கித் தெண்டனிட்டான்
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டான்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
கைகட்டி வாய்புதைத்துக் கட்டழகன் கோமானும்
வாய்மூடி நின்ருனே மன்னன்திரி யோதிரனும்
காள மகாமுனியுங் கண்டு மனங்குளிர்ந்தார்
சிந்தை மனங்குளிர்ந்து தேகம்பூ ரித்தாரே
சந்தோஷ மானரே சாமி பெரியவரும்
மெத்த மகிழ்ந்தவரும் வேந்தனைப் பார்த்துரைப்பார்
ஆர்காணும் ராசாவே அரசர்பெருங் கோமானே
ஏதுக்காய் வந்தாய்நீ இங்குதவம் பண்ணுகிருய்
என்னை நினைந்ததற்கு ஏது கருமமென்ருர்
மனதில் நினைத்ததெல்லாம் மன்னவனே சொல்லுமென்ருர்
வேண வரங்கொடுப்பேன் வேந்தனே சொல்லுமென்ருர்
அப்போ திரியோதிரன் ஆணழகன் தான்பார்த்து
சர்ப்பக் கொடியோனும் சந்தோஷ மானனே
அரவக் கொடியோனும் அங்கே மனமகிழ்ந்து
ஆண்டவரே நீர்கேளும் அடியேனேர் விண்ணப்பம்
என்சாமி கேளுமையா எந்தனுட விண்ணப்பம்

அஸ்தினு புரமாண்ட அரவக் கொடியோனும்
திக்கரசை யாண்டதொரு திரியோ திரனென்பார்
எந்தன் மனக்குறையால் வந்தே னுமைக்காண
கண்டேன் களிகூர்ந்தேன் கவலையைச் சொல்லுகிறேன்
பண்டும் பகையாளி பாதிநாள் தாயாதி
எண்ணும் பகையாளி யிருக்கிறார் சத்ராதி
எந்தன் பகையாளர் இயலான பஞ்சவர்கள்
பாண்டு மகாராஜன் பெற்றெடுத்த பஞ்சவர்கள்
இப்போது தங்கள்வனத் திருக்கிறார் பஞ்சவர்கள்
ஐவரையுங் கொல்ல அதிகமன தெந்தனுக்கு
ஐவரையுங் கொன்றாலே ஆளுவேன் ராச்சியத்தை
அவர்களைக் கொல்லுதற்கு அடியேனு லாகாது
உம்மாலே யாகுமென்று உம்மை நினைத்தழைத்தேன்
ஆசையா லென்தனக்கு அதிகவரந் தாருமென்றான்
பஞ்சவரைக் கொல்லுதற்குப் பலத்தவரந் தாருமையா
அனேகநா ளும்மைக்கோரி யரியதவம் பண்ணிநின்றேன்
(நீர்) வந்தபொழு தென்தன் மனங்குளிர்ந்தே னண்டவரே
இந்த வரமெனக்கு மீய்ந்திடுவீர் கர்த்தாவே
கொல்ல வரமெனக்குக் கொடுத்தருள வேணுமையா
(என்று) பாதம் பணிந்தானே பாம்புக் கொடியோனும்
அந்த மகாமுனியும் அவர்மனது தான்குளிர்ந்து
காள மகாமுனியுங் கடுகி மனமகிழ்ந்து
சந்தோஷப் பட்டாரே சரீரம்பூ ரித்தாரே
மெத்த மகிழ்ந்தாரே வேந்தரந்த மாமுனியும்
மனதுக் கிசைந்தபடி மன்னவனே செய்கிறேனென்
சித்தத்துக் கேற்றபடி செய்வேன்நீ அஞ்சாதே
ஐவரையுங் கொன்றுநான் அதம்பண்ணிப் போடுகிறேன்
பஞ்சவரைக் கொன்றுநான் பாருலகை யாளவைப்பேன்
ஐவர் தமக்காக ஆதிசிவன் வந்தாலும்
பஞ்ச வரைக்காக்கப் பாரளந்தார் வந்தாலும்
நாலு முகம்படைத்த நற்பிரமன் வந்தாலும்
வெற்றி மயிலேறும் வேலவர்தான் வந்தாலும்

தேவர்க் கதிபதியாம் தேவேந்திரன் வந்தாலும்
இவர்களைக் காப்போமென்று ஏமனவன் வந்தாலும்
எந்த விதத்தாலும் இறக்கவகை பண்ணுகிறேன்
என்று வரங்கொடுத்தார் எரிநாகங் கொண்டவற்கு
அப்போ திரியோதிரன் ஆனந்த மானனே
சந்தோஷப் பட்டானே சர்ப்பக் கொடியோனும்
மெத்த மகிழ்ந்தானே விஷநாகங் கொண்டவனும்
மனதுபூ ரித்தானே மாநாகன் போய்நடந்தான்
காள மகாமுனியுங் கடிகி வனத்தில்வந்தார்

## காளமகாருஷி ஐவரைக்கொல்ல நினைத்தது.

அப்போது மாமுனியும் ஆலோசனைகள்பண்ணி
வேதாளம் தான்பிறக்க வேள்வி தனைவளர்க்க
அக்கினிக் குண்டம்வெட்டி அனலை வளர்த்தினனே
பாதாளக் குழியைவெட்டி* பாவகனை மூட்டினனே
மந்திரத் தாலேயல்லோ வாவென்றார் வேதாளத்தை
ஆயன் பெருமாளும் அவ்வயணந் தாமறிந்தார்
ஏழுலக மாளுகின்ற எம்பெருமா ளென்னசொல்வார்
பாவி கெடுத்தானே பஞ்சவரைக் கொல்லவென்று
பங்கும் பகையாளி ஏற்பட்டான் பஞ்சவர்க்கு
எந்தவி தத்திலேயும் இறக்கவகை பண்ணுகிறான்
கொல்ல நினைத்தானே குருடன்மகன் சத்ராதி
ஐவர்பஞ்ச பாண்டவர்க்கு அனர்த்தம் வரலாச்சு
செல்வத் திரவியங்கள் சீரழிந்து போகிறதே
தோளிற் செபமாலை †தொண்டழிந்து போகிறதே
கையிற் செபமாலை கனங்குலைந்து போகிறதே
உள்ளங்கை நெல்லிப்பழம் உருக்குலைந்து போகிறதே
நம்பின பஞ்சவர்கள் ராஜாக்கள் மாளுகிறார்
நம்பின பேர்களைத்தான் நாமல்லோ காக்கவேணும்
கைமோசம் வந்ததென்று கரியமால் தாநினைத்து

---

* பாவகன் = அக்னி = நெருப்பு.

† தொண்டு = பழமை.

## எம்பெருமாள் பஞ்சவரைக் காப்பதற்கு எமபுரம் போனது.

அப்போது எம்பெருமா ளாய ரெழுந்திருந்து
வட்டமாங் கருடனேறி வருகிறார் மாயவனார்
காடுஞ் செடிதாண்டி கரியமலை தாந்தாண்டி
ஆறுஞ் சுனைதாண்டி அதிகவனந் தாந்தாண்டி
சில்லென்று பூத்ததொரு செடியும் வனந்தாண்டி
வேங்கை யடர்ந்தவனம் வெண்களாப் பூத்தவனம்
கோங்கு பெருத்தவனம் கொன்றைகளாப் பூத்தவனம்
இளமானைப் போலே யிசைந்துவருங் காவேரி
வடமலை ரங்கர் வனங்களெல்லாந் தாந்தாண்டி
எமபுரந் தேடியே எம்பெருமா ளோடிவந்தார்
எமனுக் கெதிராக எம்பெருமாள் வந்துநின்றார்
எமதர்ம ராஜனவன் எம்பெரு மாளைக்கண்டு
கரியமா லைப்பார்த்துக் கடுக வெழுந்திருந்து
மாயன் பெருமாளை வந்து நமஸ்கரித்தான்
எமபடா ளோடி எடுத்துவந்தார் சிம்மாதனம்
இட்டதோ ராசனத்தில் எம்பெருமாள் வீற்றிரென்றார்
அப்போது எம்பெருமாள் அரிராமர் தாமெழுந்து
சிம்மா தனமேறி ஸ்ரீ ராமர் வீற்றிருந்தார்
வேர்க்க விருவிருக்க வேந்தரவர் வீற்றிருந்தார்
அப்போது எமனவன் ஆயரைப் பார்த்துரைப்பான்
எங்குவந்தீர் மாயவரே எனக்கறியச் சொல்லுமென்றான்
ஏது வகையாக எம்பெருமா ளிங்குவந்தீர்
வந்த கருமமதை வாய்திறந்து சொல்லுமென்றான்
மாயன் பெருமாளும் வார்த்தைக ளேதுசொல்வார்
உன்னுடைய மைந்தனல்லோ உரிமையுள்ள தர்மனுமே
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் அநீதமாய் மாளுகிறார்
இறந்துவிட நாளாச்சு இ[illegible]லான பஞ்சவர்கள்
மாண்டுவிட நாளாச்சு மகராச மன்னவர்கள்
செத்துவிட நாளாச்சு சீரான பஞ்சவர்கள்

பாவி கெடுத்தானே படுபாவி திரியோதிரன்
காள மகாமுனியைக் க்ருதித் தபசுபண்ண
அந்த மகாமுனியும் வந்து எதிரில்நின்ருர்
கண்டு திரியோதிரன் கடுக சரணம்பண்ணி
கைகட்டி வாய்புதைத்துக் கட்டழகன் நின்ருனே
அப்போது மாமுனியும் அறவே மனமகிழ்ந்து
காள மகாமுனியுங் கண்டு மனமகிழ்ந்து
என்ன வரம்வேண்டும் என்தனைக் கேளுமென்ருன்
அப்போ திரியோதிரன் ஆணழக னேதுசொல்வான்
ஐவரையுங் கொல்லுதற்கு ஆனவரம் வேணுமென்ருன்
பஞ்சவரைக் கொல்லுதற்குப் பலத்தவரம் வேணுமென்ருன்
உம்முடைய கையாலே உத்தமரைக் கொல்லுமென்ருன்
அந்த முனிகேட்டு அப்படியே நல்லதென்று
வாக்கு வரங்கொடுத்து வந்தானே யந்தமுனி
ஆழக் குழிபறித்து அக்கினியை மூட்டிவைத்தான்
வேதாள முண்டுபண்ண மிக்கவனல் மூட்டிவைத்தான்
அக்கினிக் குழியதனில் ஆங்கார வேதாளம்
பிறக்கும் படியாகப் பெருத்தவேள்வி பண்ணுகிருன்
அதுபிறந்து தாமாஞல் ஐவர் பிழையார்கள்
தோளிற் பூமாலையது தொண்டழிந்து போகிறதே
கையிற் செபமாலை கனங்குலைந்து போகிறதே
உள்ளங்கை நெல்லிப்பழம் உருக்குலைந்து போகிறதே
நம்பின பஞ்சவர்கள் ராசாக்கள் மாளுகிருர்
ஆகையா லும்மைநான் அழைக்கவே வந்தேன்காண்
வேதாளம் பிறந்தாலே வேந்தரைக் கொன்றுவிடும்
மாண்டு மடிவார்கள் மகராஜர் பஞ்சவர்கள்
செத்து மடிவார்கள் சீரான பஞ்சவர்கள்
என்றுரைத்தார் மாயவனூர் ஏம னுடனுக
அவ்வார்த்தை தான்கேட்டு ஆயருக் கேதுரைப்பான்
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் அவர்காலம் உள்ளமட்டும்
உம்மையே நம்பியல்லோ உயிர்கொண் டுலாவுகிருர்
காக்கக் கடனுமக்குக் கரியமா லென்றுசொன்னுன்

அப்போது மாயவனார் அறவே மனமகிழ்ந்து
மாயவனார் தாங்கேட்டு மனது பெரிதுகந்து
கூட வருவீரோ கொப்பெனவே போகவென்றார்
ஆய ருரைகேட்டு அப்படியே வாரேனென்றான்

## எம்பெருமாளும் எமதர்மராஜனும் பஞ்சவரைக் காக்க வருதல்.

மாயவரும் ஏமனுமே வருகிறார் வனந்தனிலே
எமபுரத்தை விட்டுமல்லோ இருவருமாய் வாரார்கள்
காடு செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறுஞ் சுனைதாண்டி அதிகவனந் தான்தாண்டி
இருண்ட வனந்தாண்டி இருவருமாய் வாரார்கள்
காளமகா முனிவருட கானகத்தில் வந்தார்கள்
ஏமன் கடாமேலே எம்பெருமாள் கருடன்மேலே
அந்த வனத்திலே வந்தா ரிருவர்களும்
வந்து இறங்கினார் மகாமுனிவர் தம்வனத்தில்

## எம்பெருமாள் தடாகம் உண்டுபண்ணல்.

ஆயர் பெருமாளும் அங்கெனவே யேதுசெய்தார்
அந்தரப் பொய்கையொன்று ஆயரும் உண்டுபண்ணார்
மாயமாய்ப் பொய்கையொன்று மாயவரு முண்டுபண்ணார்
அகல *நிகளதூமம் ஆறுயோசனைகாதம்
பத்துயோ சனைதூரம் பாரளந்தா ருண்டுபண்ணார்
தாமரைப் பொய்கைதனை சாமியவ ருண்டுபண்ணார்
அலர்தா மரைப்பொய்கை அங்கெனவே யுண்டுபண்ணார்
அல்லியுடன் தாமரையும் ஆம்பலு முண்டாச்சு
அழகான பொய்கையிலே அதிசய மென்னவென்றால்
அல்லியுங் கொட்டியுமே அதில்நெருங்க வுண்டாச்சு
அந்தரத் தாமரைப்பூ அக்குளத்தி லுண்டாச்சு
நாணலுங் கோரையுமே நடுவேயதி லுண்டாச்சு
அக்குளத்துக் கரைமேலே அழகான பூமரங்கள்

---

* நிகளம்=நீளம்.

மல்லிகை முல்லையுமே மாதளையு முண்டாச்சு
நல்லதொரு பூமலரும் நற்றும்பை யுண்டாச்சு
கொன்றை குருக்கத்தி கோங்குமுல்லை யுண்டாச்சு
ஆற்றலரி மந்தாரை அழகான சண்பகங்கள்
ஆலஞ் செடிமுளைத்து அரசுமே உண்டாச்சு
வேம்பு மரசுமங்கே வேணது முண்டாச்சு
பாளை மணம்வீசும் பன்னீரும் பூபூக்கும்
வண்ணவண்ணப் பூமரங்கள் மாவிருட்ச முண்டாச்சு
கமுகு குலைசரியும் கஸ்தூரி மணம்வீசும்
வேரிற் பலாப்பழங்கள் வெடித்து விழுந்திருக்கும்
மாம்பழ மெங்கெங்கும் வனத்திற் பழுத்திருக்கும்
பார்த்த விடங்களெங்கும் பழங்கள் பரிமளிக்கும்
கண்ட இடங்களெல்லாம் கனிகள் மணம்வீசும்
இப்படியா யுண்டுபண்ணுர் எம்பெருமாள் மாயவரும்
காலாகா லங்களிலே கட்டின குளம்போலே
ஆயன் பெருமா ளதிசயமா யுண்டுபண்ணுர்

## எமனும் பெருமாளும் வேறுவடிவு கொண்டது.

எமதர்ம ராஜரவ ரென்ன வடிவெடுத்தார்
எமபுரத்தை யாளுகிற ஏமன் குயிலானுர்
எம்பெருமாள் மாயவனு ரென்ன வடிவானுர்
புள்ளிமான் குட்டியைப்போல் பொன்மான் வடிவெடுத்தார்
அந்தநல்ல பொன்மானி னதிசயத்தைச் சொல்லுகிறேன்
தங்கந் தனையுருக்கித் தரையிற் கவிழ்த்தாற்போல்
பொன்னை யுருக்கியல்லோ பூமியிலே விட்டாற்போல்
மேகத்தி லேயெழும்பும் மின்ன லதுபோலே
தூரத்தி லேயெழும்பும் சோதியைப் போலேயல்லோ
எட்டுநாள் சென்றகுட்டி யேந்துங் குழந்தையைப்போல்
மான்குட்டிப் போலாக மாயவனுர் வடிவெடுத்தார்
பஞ்சவர்கள் தாமிருக்கும் பர்னசாலை தேடிவாரார்
மூன்றடுக்குப் பர்னசாலை முன்னுலே யோடிவந்து
ஏழடுக்குப் பர்னசாலை எதிராக வந்துநின்ருர்



துரோபதை தருமரை மான்பிடித்துத் தரும்படி கேட்டல்.

நடந்து விளையாடி ராஜாத்தி முன்னேவந்து
துள்ளிக் குதித்துமங்கே துரோபதையாள் முன்னாலே

## தருமரைத் துரோபதை, மான் பிடித்துத் தரச்சொன்னது.

கண்டாளே பாஞ்சாலி கானகத்து மானதனை
மானழகைப் பார்த்தாளே மயிலணையாள் துரோபதையும்
கண்டு மனமகிழ்ந்தாள் கட்டழகி துரோபதையும்
பார்த்து மனங்குளிர்ந்தாள் பஞ்சவர்கள் தேவியவள்
மான்பிடிக்க வேணுமென்று மனதில் நினைத்தோமே
ஆர்பிடித்துத் தருவார்க ளழகான இம்மானை
தருமரைக் கேட்போமென்று தானெழுந்து ஓடிவந்தாள்
தரும ரருகேவந்து சாஷ்டாங்க தெண்டனிட்டாள்
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டாள்
வணங்கி நமஸ்கரித்தாள் மாது துரோபதையும்
ஏதுக்குப் பெண்ணேநீ என்னைவந்து தெண்டனிட்டாய்
பின்னையுந் தெண்டனிட்டாய் பிள்ளைகளைப் பெற்றிடுவாய்
பிள்ளைகளைப் பெற்றிடுவாய் பெருவாழ்வு வாழ்ந்திடுவாய்
தெண்டனிட்ட காரியத்தைத் தெரிய வுரையுமென்றார்
வந்து பணிந்ததொரு வயணத்தைச் சொல்லுமென்றார்
என்று மவர்கேட்க ஏதுசொல்வாள் துரோபதையும்
ஏதோ வொருமான்வந் தெதிரிலே நிற்கிறதே
தங்க முருக்கியே தரையிற் கவிழ்த்ததுபோல்
மேகத்து மின்னலைப்போல் தோணுகுது என்தனக்கு
தூரத்திற் சோதியைப்போல் தோணுகுது என்தனக்கு
உச்சித மாகவே உருகுது என்தனக்கு
அதிசயமாத் தோணுகுது அந்தமா னென்தனக்கு
மானெனக்கு வேணுமையா வனத்தில் விளையாட
விளையாட வென்தனக்கு வேணும் பிடித்துத்தாரும்
மான்பிடித்துத் தருவீரென்று மன்னவரே தெண்டனிட்டேன்
எந்த விதத்தாலும் எனக்காகப் பிடியுமென்றாள்

பிடியும் பிடியுமென்று பின்னொருகால் தெண்டனிட்டாள்
மான்பிடித்துத் தாருமென மற்றொருகால் தெண்டனிட்டாள்
அப்போது தருமலிங்கம் ஆணழகர் தாங்கேட்டு
தக்க புகழ்பெரிய தருமரவ ரேதுசொல்வார்
ஆர்வளர்த்த மானோஇது அறியே னிளமயிலே
எவர்வளர்த்த மானோஇது ஏது மறியேனே
இந்த வனந்தனிலே யிருக்கும் பெரியவர்கள்
தவத்திற் பெரியவர்சள் சன்னியாசி யானவர்கள்
வரத்திற் பெரியவர்கள் மகாருஷி யானவர்கள்
யோகத்திற் றாமிருக்கும் யோக்கிய முள்ளவர்கள்
ஆர்வளர்த்த மானோஇது அறியேனே ஆரணங்கே
எவர்வளர்த்த மானோஇது ஏது மறியேனே
மனிதர் வளர்த்ததினால் வந்தது நம்மருகே
அல்லாதே யாமானால் அருகில்வந்து நிற்காது
வளர்த்தமா னாகையினால் வந்துவிளை யாடுகுது
மானைப் பிடித்தாலே வகைமோசம் வந்துவிடும்
பெண்புத்தி கேட்டுமோசம் போனவர்கள் மெத்தவுண்டு
பெண்ணாலே கெட்டவர்கள் பூமியிலே மெத்தவுண்டு
ஆணாலே கெட்டவர்கள் ஆருமில்லை வையகத்தில்
ஸ்ரீராமர் பட்டதொரு சேதிபோ லாகுமிது
அரிராமர் பட்டதொரு அலைச்சல்போ லாகுமிது
ஆகையாற் பெண்மயிலே அம்மானைப் பிடியேனென்றார்
அதுகேட்டு துரோபதையா ளாரணங்கு மேதுசொல்வாள்
அந்தக் கதையெனக்கு ஆண்டவரே சொல்லுமென்றாள்
மாயவனார் பட்டதொரு வரலாற்றைச் சொல்லுமென்றாள்
எம்பெருமாள் பட்டதொரு இடுக்கங்கள் சொல்லுமையா

## தருமர் துரோபதைக்கு மான் பிடிக்கலாகாதென்று, ஸ்ரீராமர் கதையைச் சொன்னது.

அப்போ தருமலிங்கம் ஆணழகர் ஏதுசொல்வார்
ஆனாற்கேள் பெண்மயிலே அவர்கதையைச் சொல்லுகிறேன்
ராமரும் லக்ஷ்மணரும் நற்சீதை தன்னுடனே

கைகேசி சொற்படிக்குக் கானகத்தே போயிருந்தார்
தென்னிலங்கை ராவணனும் சீதை யழகுகண்டான்
சூர்ப்பனகை சொல்லாலே துள்ளிப் பதைபதைத்து
இலங்கையை விட்டுமவன் ஏகி நடந்தானே
சீதையரைச் சிறையெடுக்கத் தென்னிலங்கை விட்டுவந்தான்
கண்டானே மூவர்களைக் கானகத்தில் ராவணனும்
ஜானகியைக் கொண்டுபோகச் சமையமில்லை யென்றவனும்
உற்று நினைத்தானே ஒருகோடி புத்திகளை
இருந்து நினைத்தானே யெண்ணமுற்ற சிந்தையிலே
ஆலோசனைபுரிந்து அந்தப் படுபாவி
மாரீசனையழைத்து மானாகச் செய்துவிட்டு
போய்நில்லும் சீதையிடம் பொன்மானே என்றுரைக்க
பொன்மா னதுகேட்டுப் போகமாட்டே னென்றுசொல்லும்
மாட்டேனென்று சொன்னசொல்லை மாபாவி தான்கேட்டு
அவ்வளவி லம்மானை அடித்தான் பிரம்பாலே
அடிபட்டு ஓடுகுது அந்த வனந்தனிலே
மாள வனுப்பிவைத்தான் மாரீசப் பொன்மானை
சீதை யிருக்குமிடந் தேடியே ஓடிவந்து
மயிலணையாள் முன்னேவந்து மானும் விளையாடும்
கண்டாளே சீதையரும் கானகத்து மானதனை
ஸ்ரீராமர் முன்னேவந்து தேவியரு மேதுசொல்வாள்
மானழகைக் கண்டேனதைத் தான்பிடித்துத் தாருமென்றாள்
மான்பிடித்துத் தாருமென மலரடியைத் தெண்டனிட
ஸ்ரீராமர் தான்கேட்டுச் சிந்தை மனங்கலங்கி
மான்வந்த வயணமெல்லாம் மாயவனார் தாமறிந்து
மானல்ல பெண்ணேயிது மாயமா னென்றுசொன்னார்
அல்லவென்றாற் கேளாமல் அனேகந் துயரமுற்றாள்
துயரமுற்றா ளென்றுசொல்லி சுவாமி மனதிலெண்ணி
ராமரும் லக்ஷ்மணரை நலமாகத் தாமழைத்து
மான்பிடித்து நான்வருவேன் வாரமட்டுந் தம்பியரே
சீதை யருகாகத் திரமா யிருப்பாயென
இளைய பெருமாளும் இவ்வார்த்தை தான்கேட்டு

அப்படியே காத்திடுவேன் அண்ணுவே போமென்ருர்
அவ்வார்த்தை தான்கேட்டு அரிராமர் போகலுற்ருர்
அம்புவில்லுங் கைபிடித்து அவ்வனத்தி னூடாக
மானைத் துரத்தியே மாயவனுர் போனபின்பு
தென்னிலங்கை ராவணனும் உன்னலுடன் வேகமதாய்
பத்துத் தலையொளித்துப் பத்திரண்டு கைமறைத்து
நல்ல வொளிமறைத்து ராவணன்பேர் தான்மறைத்து
சங்கமனைப் போலே சண்டாளன் வாரானே
பண்டாரம் போலேயல்லோ படுபாவி வாரானே
வனமா வனந்தாண்டி வந்தானே பர்னசாலை
இருவ ரிருந்தஜாடை யிவனறிந்தா னப்பொழுது
மானை நினைத்தானே மாபாவி சண்டாளன்
இப்படி யாகஇங்கே இவரிருக்கும் வேளையிலே
மான்பிடிக்கப் போனதொரு மாயவனு ரேதுசெய்தார்
அந்தமான் தன்கையிலே அகப்படாத் தன்மையினல்
கையினல் வில்வளைத்துக் கணைகளைத் தாம்தொடுத்தார்
அம்பு தனைத்தொடுத்து அம்மானை எய்தாரே
ராட்சத மான்விழுந்து லக்ஷ்மணு வென்றலற
அந்த மொழிகேட்டு அழகான சீதையரும்
மான்கையி லுங்களண்ணன் மடிந்தா ரெனவுரைத்தாள்
இளைய பெருமாளும் எழுந்து நடந்தாரே
ராமரைத் தேடியே லக்ஷ்மணர் போனபின்பு
பிச்சையென்று கேட்கையிலே அச்சமில்லா தள்ளிவந்தாள்
கூசாமல் ராவணனுங் கொண்டுசென்ருன் தென்னிலங்கை
சீதைசிறை போனபின்பு திருமா லவர்பார்த்து
நல்லதென்று சொல்லியல்லோ நடந்தா ரிருவருமாய்
சவரியைக் கண்டுமெல்லோ சந்தோஷம் பண்ணுரே
அனுமாரைக் கண்டார்கள் அவர்க ளுறவாகி
அனுமா ருறவாலே அங்கதசுக் ரீபர்களும்
மெத்த உறவானுர் வேந்த ரிருவர்களும்
வாலியைக் கொன்றபின்பு வானர வீரருக்குள்
சுக்ரீப னுக்குப்பட்டஞ் சூட்டிக் கடலதனில்

வாராவதி கட்டியல்லோ வந்தார்கள் தென்னிலங்கை
ராவணன் கும்பகர்னன் ராட்சத இந்த்ரசித்தன்
மூல பலச்சேனை முடிந்தது ராமர்கையால்
சேனைகளைக் கொன்றலவோ சீதை சிறைமீட்டு
புட்ப ரதமேறி புண்ணியர்கள் வந்தாரே
அயோத்தியா புரியதனில் அரிராமர் வந்துவிட்டார்
சீதாச மேதராக சிம்மா தனமேறி
தம்பிமார் மூவர்களுந் தானுங் கொலுவிருந்தார்
நீதி தவருமல் நெறிப்படியே ஆண்டிருந்தார்
ஐம்பத்தாறு தேசமதை ஆண்டாரே ஒருகுடைக்கீழ்
அந்தக் கதையாகும் ஆரணங்கே நீர்கேளும்
சீதையம்மாள் பட்டதொரு சேதி யிதுவாகும்
மானைப் பிடிக்கவே மாட்டேனெனவுரைத்தார்

## மானைப் பிடித்துத் தரவில்லையென்று துரோபதை யம்மன் பிணங்கினது.

தக்க புகழுடைய தரும ரிதையுரைக்க
அவ்வார்த்தை தான்கேட்டு அன்னநடை துரோபதையும்
ஏதேது சொன்னாலும் இரங்கா மனதுடையாள்
வரும்விதி யறியாளே மாது கருங்குழலும்
எந்த விதத்தாலும் இந்தமான் வேணுமென்ருள்
மானெனக்கு வேணுமென்று மாது பிணங்கிநின்ருள்
அறவே மனஞ்சலித்து அங்கே துயரமிட்டாள்
தக்க புகழுடைய தரும ரவர்பார்த்து
சாயாம்பு மன்னரவர் தானுமங்கே யேதுரைப்பார்
வெற்றி மதயானை வீமரைத் தானழைத்து
வீமா மதகரியே வில்வேந்தே இப்போது
மான்குட்டி வேணுமென்று மாதுபி ணங்கினதால்
காட்டுமா னைப்பிடித்துக் கடுகெனவே வாருமையா
ஓடிப் பிடித்துநீ ஒருநொடியில் வாருமென்ருர்

## வீமன் மான் பிடிக்கப் போகிறது.

அண்ணருரைகேட்டு ஆங்கார வீமனவன்
இதுபோதுமென்றுசொல்லி எழுந்தானே வீமனவன்
சல்லடங் தான்போட்டுத் தட்டி வரிந்துகட்டி
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
ஆயுதங் கைப்பிடித்து ஆணழகன் போகலுற்றான்
மாயவனு ராகியபொன் மானைத் தொடர்ந்தானே
துள்ளிப் பதைபதைத்துச் சுழுக்காய் வருவாராம்
வீமரைக் கண்டுமெல்லோ மெள்ள நடப்பாராம்
அப்போ மதவீமன் ஆங்காரங் கொண்டவனும்
மானைப் பிடிப்பதற்கு மாயவனார் பின்தொடர்ந்தான்
எட்டிப் பிடிப்பதற்கு எதிரில் வருவானும்
பதுங்கி வருவானும் பார மதவீமன்
ஐம்பதிங் காதவழி அனேகதூரங் தானடந்தார்
கண்ணுக்குத் தெரியாமல் கடுகவே ஏகிவிட்டார்
தேடித் திரிந்தானே சீரான கானகத்தில்
எண்ணாது மெண்ணுகிறான் இயலான வீமனுமே
அண்ணால் தருமருக்கும் ஆரணங்கு துரோபதைக்கும்
என்னவென்று சொல்வேனு னிந்த விதிவசத்தை
எத்தனை தூரம்வந்தேன் இம்மானைக் காணேனே
போன விடமறியேன் போயிருக்குந் தாவறியேன்
தங்கு மிடமறியேன் சஞ்சரிக்குந் தாவறியேன்
மாயமான் போனதொரு வகையொன்றும் நானறியேன்
என்று மனங்கலங்கி யெண்ணுகிறான் கோடிசிந்தை
நின்று விசாரமிட்டு நெடுமூச் செறிந்தானே
விடுவிடு நேரமங்கே வெயிலான வேளையிலே
நல்ல உருமமது நாவு வறளுகுது
தண்ணீரு தாகவிடாய் தனிமையாய்க் கொள்ளுகுது
நாவு வறட்டுகுது நல்லசலங் காணுமல்
குடலைப் புரட்டுகுது குடிக்கசலங் கிட்டாமல்
என்னசெய்யப் போறேனென்று ஏங்கி நடந்தானே

## எம்பெருமாள் வீமராசனை விஷத்தண்ணீர் குடிப்பித்துக் கொல்லுகிறது.

இதுதான் சமயமென எண்ணித் திருமாலும்
மாறு யிருந்தவரும் மயிலா வடிவெடுத்தார்
மயிலா வடிவெடுத்து மரத்தின்மே லேறினரே
ஏமன் குயிலாகி யிருந்தானே மாயரண்டை
ஏமன் குயிலானர் எம்பெருமாள் மயிலானர்
மயிலுங் குயிலுமாக வனந்தனிலே கூவுகையில்
அந்தக் குரல்கேட்டான் அழகான வீமனுமே
முன்னே பெரியவர்கள் சொன்ன முறைப்படியே
குளிர்ந்த இடந்தனிலே குயிலு மயிலிருக்கும்
என்றுமவன் சொல்லியல்லோ ஏகி நடந்தானே
தேடியே வந்தானே சீரான பொய்கையண்டை
தாமரைப் பொய்கையான தடாகத்தைக் கண்டானே
தாக விடாய்தீர்ந்து தமயரண்டை போவோமென்று
தண்ணீர்த் தடாகத்திலே இறங்கினன் தார்வேந்தன்
அந்தரமாய் மாயவரும் அங்கொருவ ரேதுசொல்வார்
ஆரடா தம்பியரே அள்ளிசல முண்கிறவன்
தண்ணீர் குடியாதே தாகவிடாய் தீராதே
இந்தக்குள மென்னதடா இந்தநதி யென்னதடா
இந்தக் குளந்தனிலே இறங்கிசல முண்ணுதே
இவ்வார்த்தை தான்கேட்டு இயலான வீமனவன்
வெற்றி மதயானை வீமனவ னேதுசொல்வான்
அந்தரமாய்ப் பேசுறது ஆரென்றுந் தெரியவில்லை
அந்தர தேவதையோ ஆகாச துர்க்கைகளோ
மந்திர தேவதையோ வந்தென்னைக் கேட்கிறது
பேயோபி சாசுகளோ பிணந்தின்னும் பூச்சிகளோ
ஆரென்று நானறியேன் அறிய வுரையுங்கள்
வெற்றி மதயானை வீமனவன் கேட்கலுமே
அந்தச் சமயமதில் ஆயரவ ரேதுசொல்வார்
ஆரானு லுந்தனக்கேன் அப்புறத்தே போமென்றார்
அப்போது வீமனவ னவ்வார்த்தைக் கேதுசொல்வான்

தாகவிடாய் அதிகரித்துத் தண்ணீர் குடிக்கவந்தால்
தண்ணீர் குடியாதே யென்றுமே சாற்றுவாரோ
தடாக மிருக்கையிலே தண்ணீர்களை தீராமல்
குடியாமற் போவேனோ கொற்றவரே சொல்லுமென்றான்
தண்ணீர் குடிக்கவென்றால் தாரணியிற் பயிர்களுக்குள்
வாடாத பயிருமெது வருத்தமுள்ள பாரமெது
அதிசய மானவார்த்தை அறிந்தா லுரையுமென்றார்
அப்போது வீமனவன் அவ்வயண மறியாமல்
தெரியாமல் வீமனவன் தீர்த்தம்பு சித்துவிட்டான்
தாகக் களையாலே தண்ணீர்கு டித்துவிட்டான்
களையந்த வீமனுக்குக் கண்ணைச் சொருகுதே
தலையைச் சுழற்றுகுது தாமமுடி யான்தனக்கு
உடம்பு மறக்குதே உத்தண்ட வீமனுக்கு
மரத்தடியிற் பள்ளிகொண்டான் மாலை முடியுடையான்
மறந்து படுத்தானே மதகரி வீமனவன்
தன்னை மறந்துமல்லோ தார்வேந்தன் பள்ளிகொண்டான்
மாயன் பெருமாளும் வார்த்தைக ளேதுசொல்வார்
காலனை யெச்சரித்துக் கடுகிஉயிர் வாங்குமென்றார்
ஏமனைத் தானழைத்து யிவனுயிரை வாங்குமென்றார்
அப்போது ஏமனவன் அவசரமா யோடிவந்து
சூலத்தால் குத்தியபின் பாசத்தால் கட்டினனே
சூலத்தால் குத்தியபின் துடிக்கவுயிர் வாங்கினனே
பாசத்தால் கட்டியபின் பதைக்கவுயிர் வாங்கினனே
குளத்தங் கரையோரம் குளிர்ந்த நிழல்தனிலே
பொய்கைக் கரையோரம் போர்வீரன் மாண்டுவிட்டான்
மாண்டு படுத்தானே மதவீமன் குளக்கரையில்
செத்துப் படுத்தானே சீரான வீமனுமே
இந்த விதமாக இவனிருக்கும் வேளையிலே

## மான் பிடிக்கப்போன வீமனைக் காணேமென்று தருமராஜர் புலம்புகிறது.

தக்க புகழுடைய தரும ரவர்பார்த்து
சாயாம்பு மன்னவனார் தருமரவ ரேதுசொல்வார்

மான்பிடிக்கப் போனதொரு மன்னவனைக் காணேனே
எங்கேர மாச்சுதவன் இன்னம்வரக் காணேனே
மானைப்பி டிக்கையிலே வளர்த்தவர்கள் கண்டாரோ
ஆர்கண் டெதிர்த்தாரோ அமரது செய்கிறாரோ
எவர்கொன்று போட்டாரோ ஏது மறியேனே
மண்ணாக்கிக் கல்லாக்கி மரமாக்கி விட்டாரோ
செத்து மடிந்தானோ சிவன்பாதம் சேர்ந்தானோ
மாண்டு மடிந்தானோ வைகுந்தம் சேர்ந்தானோ
காணவும் போறேனோ கட்டழகன் தம்பியரை
பார்க்கவும் போறேனோ பார மதகரியை
காணாமல் தம்பியரைக் கலங்குதே தேகமெல்லாம்
பாராமல் தம்பியரைப் பதைக்குதே யென்மனது
காளை யருச்சுனரே கடுகியே போய்வாரும்
பார்த்துவா அர்ச்சுனரே பாரமத வீமனைநீ
தேடி யழைத்துக்கொண்டு சீக்கிரத்தில் வாருமென்றார்
காளையந்த வீமனைநீ கண்டழைத்து வாருமென்றார்
என்றுமவர் சொல்லிவிட்டு இருந்தா ரிருவருமாய்

## அருச்சுன மகாராஜன் தருமர் சொல்லைக்கேட்டு வீமனைத் தேடிப்போனது.

ஆணழகுமன்னன் அர்ச்சுன ராஜதுரை
தரும ருரைகேட்டுத் தானெழுந்து தார்விஜயன்
ஜல்லடங்க ளிட்டுமல்லோ தட்டி வரிந்துகட்டி
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
குந்தியிடுங் கால்களுக்குக் குரிஞ்சிப்பூ ஜல்லடமாம்
மண்டியிடுங் கால்களுக்கு மாதளம்பூ ஜல்லடமாம்
தூக்கிவைக்குங் கால்களுக்குத் துத்திப்பூ ஜல்லடமாம்
நீண்டிடுங் கால்களுக்கு நெரிஞ்சிப்பூ ஜல்லடமாம்
பில்லை முகதாடு பிகுவெடுத்த வொட்டியாணம்
கச்சை வரிந்துகட்டி கருங்கச்சை சுங்குவிட்டு
பாங்கு சொருகினனே பார்த்தன் வலப்புறத்தே
கத்தி சொருகினனே காளை வலப்புறத்தே

சிங்காணி வில்லெடுத்து சிறுநாணி தான்பூட்டி
அண்ண ரிருபாதம் அடிவணங்கித் தெண்டனிட்டு
போகவிடை தாருமென்முன் போர்விஜயக் கோமானும்
தக்க புகழுடைய தரும ரவர்பார்த்து
வாழ்த்தி யெடுத்தவரும் மார்போடே கொண்டணைத்து
காளை யருச்சுனரே கட்டழகா நீகேளும்
வனத்தினி லுட்புகுந்து மன்னவனை நீதேடி
கண்டழைத்து வீமரைநீ கடுகவே வாருமென்றார்
போய்வாரு மென்றுசொல்லி பொருந்த விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்தாரே விஜயப் பெருமாளும்
வாரானே அர்ச்சுனனும் வனமா வனந்தாண்டி
கானகத்தி லுட்புகுந்து காளையரைத் தேடுகிறான்
எங்கெங்குந் தேடினான் இனியவிட மாராய்ந்தான்
அந்த வனந்தனிலே அண்ணரைக் காணுமல்
மற்று மொருவனத்தில் மன்னவனைத் தேடிவாரான்
இன்ன மொருவனத்தில் இளவிஜயன் தேடுகிறான்
அண்ணனைத் தேடிக்கொண்டு அனேகதூரம் வாரானே
காட்டிலே தேடியல்லோ கடுகியே வாரானே
ஆ ணு லழகுமன்னன் அருச்சுன ராசனுக்கு
தண் ணீர்க் கவனங்கள் தாகவிடாய் கொள்ளுது
நாவு வறட்டுது நல்விஜயன் அருச்சுனற்கு
மெத்தக் களைத்தானே வேர்வைகள் சிந்திடவே
அப்போ தருச்சுனனும் ஆணழக னேதுசொல்வான்
இந்த வனந்தனிலே எங்கும் ஜலம்இல்லை
தண்ணீர் களையாலே தாகவிடா யானதினால்
தண்ணீர் தண்ணீரென்று தவித்துப் புலம்புகிறான்
இந்த விதமாக இவனிருக்கும் வேளையிலே

## மாயவனார் அருச்சுனராசனை விஷநீர் குடிப்பித்துக் கொல்லுகிறது.

எம்பெருமாள் மாயவரும் ஏதுசெய்தா ரந்நேரம்
மயிலுங் குயிலுமாக வனத்திலே கூவுகிறார்

அருச்சுனன் காதிற்கேட்க அவ்வனத்திற் கூவுகிறார்
அந்தக் குரலோசை அர்ச்சுனனுந் தான்கேட்டு
கூவுங் குரல்கேட்டான் கோபாலர் மைத்துனனும்
அவ்வோசை கேட்டவுடன் அருச்சுனனு மேதுசொல்வான்
முன்னே பெரியவர்கள் சொன்ன முறைப்படியே
குளிர்ந்த இடந்தனிலே குயிலு மயிலிருக்கும்
என்று மவன்சொல்லி ஏகி நடக்கலுற்றான்
அந்தஇடம் போகவென்று ஆராய்ந்து தேடிவந்தான்
குயிலிருக்கும் இடந்தனிலே கொற்றவனும் வந்தானே
மயிலிருக்கும் இடந்தனிலே மன்னவனும் வந்துநின்று
உற்றுற்றுப் பார்த்தானே ஒளிபிறந்த கண்ணாலே
பார்த்த இடங்களெல்லாம் பச்சென்று தானிருக்கும்
கண்ட இடங்களெல்லாம் கமகமென்று பூமணக்கும்
தாமரைப் பொய்கையுஞ் சாலையுஞ் சோலைகளும்
ஆல மரத்தின்கீழ் அண்ணர்பள்ளி கொண்டதுவும்
வெற்றி மதயானை வீமரைக் கண்டானே
கண்டு மனமகிழ்ந்தான் காளை யருச்சுனனும்
பார்த்து மனமகிழ்ந்தான் பார்த்தீப னருச்சுனனும்
உற்றுற்றுப் பார்த்தானே உள்ளங் குளிர்ந்தானே
நின்றா னரைநாழி நினைத்தானே கோடிபுத்தி
அண்ணர் தருமருமே அங்கே மனஞ்சலித்து
வீமனைக் காணாதே மெத்த மனஞ்சலித்து
தம்பியைக் காணமல் தவித்துப் புலம்புகையில்
அங்கே தருமரவர் ஆயாசப் பட்டிருக்க
இங்கே மதவீமன் இப்படித் தூங்குறானே
தண்ணீர் குடித்துமல்லோ தாகமுந் தீர்ந்தபின்பு
அண்ணரைத் தானெழுப்பி அழைத்துநாம் போவோமென்று
தாமரைப் பொய்கையிலே இறங்கினான் தார்வேந்தன்
அப்போது மாயவரும் அர்ச்சுனரைத் தாம்பார்த்து
ஆயர் பெருமாளும் அந்தரத்தி லேதுசொல்வார்
ஆரடா என்குளத்தில் அள்ளிசல முண்கிறவன்
எவனடா என்குளத்தில் எடுத்துசல முண்கிறவன்

இந்தக்குள மென்னதடா இந்தநதி யென்னதடா
சாலையுஞ் சோலைகளுந் தாமரைப் பொய்கைகளும்
இத்தனையு மென்னதடா இறங்காதே என்குளத்தில்
அள்ளிசல முண்ணவென்றால் அதிசயஞ் சொல்லுமென்றார்
தாகந் தணியவென்றால் சந்தோஷஞ் சொல்லுமென்றார்
அப்போ தருச்சுனனும் அவ்வார்த்தைக் கேதுரைப்பான்
என்ன அதிசயமோ எந்தனுக்குச் சொல்லுமென்றான்
எம்பெருமாள் மாயவரும் ஏதுசொல்வா ரர்ச்சுனற்கு
வாடாப் பயிருமெது வையகத்திற் பாரமெது
இவ்வார்த்தை நீசொன்னா லிறங்கிசல முண்ணுமென்றார்
ஆணழகுமன்னன் அர்ச்சுன ராசதுரை
அவ்வார்த்தை தான்கேட்டே அருச்சுனனு மேதுசொல்வான்
ஆர்காணும் பேசுறது அந்தரத்தி லேயிருந்து
எவர்காணும் பேசுறது எங்கையோ தெரியவில்லை
வேண்டி விடாயாகி வேர்வை மிகவொழுக
தண்ணீர் விடாயாகித் தாகத்துக் குண்ணவந்தால்
வேண்டா மெனமறித்துத் தீண்டா தெனவுரைத்தீர்
எதிரிட்டு வந்தாலே இருதுண்டாய்ப் போட்டிடுவேன்
கண்டித்துப் போட்டிடுவேன் கண்ணில் தெரியடாநீ
எதிரிலே நிற்கவேணும் என்சண்டை பார்க்கவேணும்
சரியாக நின்றலவோ சண்டைபண்ணிப் பார்க்கவேணும்
என்றது பேசியே இறங்கிச் சலங்குடித்தான்
தாக விடாய்தீரத் தண்ணீர் குடித்தானே
தண்ணீர் குடித்தவுடன் தலையைச் சுழற்றுகுது
அப்போது மயக்கமல்லோ அதிக மயக்கமாகும்
கஞ்சா மயக்கம் கனமயக்க மாகியது
அபினி மயக்கமல்லோ அவனைச் சுழற்றுகுது
தள்ளாடி வாரானே தாம முடியானும்
ஆணழகுமன்னன் அருச்சுன ராசனவன்
எண்ணாது மெண்ணுகிறான் இந்திரன் குமாரனுமே
நினையாது நினைக்கிறான் நீலவர்னர் மைத்துனனும்
ஆரோ தெரியாது அந்தரத்திற் பேசினார்கள்

எவரோ தெரியாது எந்தனுடன் சொன்னாரே
தண்ணீர்குடி யாதேயென்று சமர்த்துகள் பேசினாரே
தீர்த்தங்குடி யாதேயென்று வார்த்தைபல சொன்னாரே
அவ்வார்த்தை தள்ளினநா னள்ளியே தீர்த்தமுண்டேன்
சொன்னசொல் தனைமறுத்துச் சுருக்காகத் தீர்த்தமுண்டேன்
உண்ட பொழுதே உடம்பைப் புரட்டுதையோ
தலையைச் சுழற்றுதையோ தருமருக் காருரைப்பார்
அண்ணற்குந் தம்பியற்கும் ஆரணங்கு துரோபதைக்கும்
இந்த விசேஷமல்லோ எவர்கள்போய்ச் சொல்லுவார்கள்
செத்த விசேஷமல்லோ சேதிபோய்ச் சொல்வாரார்
மாண்ட விசேஷமது மறுவார்த்தை சொல்வாரார்
என்று மவன்சொல்லி ஏகி வழிநடந்தான்
தள்ளாடித் தத்தளித்து தானே நடந்துவந்து
அண்ண ருகாக அருச்சுனன் வந்துநின்றான்
வீம ருகாக விஜயனும் வந்துநின்றான்
கண்ணுறக்கம் போலவே கடுகிவந்து படுத்தானே
எம்பெருமாள் மாயவரும் இதுதான் சமயமென்று
காலனை யெச்சரித்தார் கரியமால் பொட்டெனவே
அருச்சுன னுயிரதனை அதிவிரைவாய் வாங்குமென்றார்
அப்போது ஏமனவன் அதிவேக மாகவந்து
சூலங்கொண்டு குத்தியே பாசங்கொண்டு கட்டினானே
பதைக்க உயிர்மாய்த்தான் பார்த்தீப னருச்சுனனை
இப்படி யாக இவன்மாண் டிருக்கையிலே
தக்க புகழுடைய தருமருட சேதியெல்லாம்

## வீமனைத்தேடப்போன அருச்சுனனும் வீமனும் இன்னம் வந்து சேரவில்லையென்று தருமர் புலம்புகிறது.

அருச்சுனன் போனபின்பு அழகான தருமரவர்
மனது கலங்கியே மன்னவரு மேதுசொல்வார்
கானகத்திற் போனவர்கள் கடுகவந்து சேரவில்லை
என்நேர மாச்சுது இன்னம் வரக்காணேன்
நாமத் தழகா நகுலாநீ வாருமென்றார்

தக்க புகழுடைய தரும ரழைக்கவேதான்
நாம முடியான் நகுலனு மோடிவந்து
அண்ண ரெதிரேவந்து அடிவணங்கித் தெண்டனிட்டு
கைகட்டி வாய்புதைத்துக் கட்டழக னேதுசொல்வான்
என்னை யழைத்தபணி யேதுபணி சொல்லுமென்றான்
அழைத்ததோர் காரியத்தை அண்ணுவே சொல்லுமென
அவ்வார்த்தை தான்கேட்டு ஆணழகர் தருமலிங்கம்
கண்ணீர் ததும்பிடவே கட்டழக ரேதுசொல்வார்
வீமனைத் தேடியே வில்விஜயன் போனனே
மான்பிடிக்கப் போனதொரு மதவீம னைக்காணேன்
தேடியே போனதொரு தேர்விஜய னைக்காணேன்
போன விடமறியேன் போய்ப்பதுங்குந் தாவறியேன்
தங்கு மிடமறியேன் சஞ்சரிக்குந் தாவறியேன்
ஆரோடே சண்டை அமரது செய்கிறரோ
எவரோடே சண்டை எதிர்த்துப்போர் செய்கிறரோ
மானை வளர்த்தவர்கள் வந்துவதை செய்தாரோ
கண்டு வதைத்தாரோ கண்டதுண்ட மாக்கினரோ
செத்ததுவும் இருப்பதுவும் சேதி தெரியவில்லை
மாண்டதுவும் பிழைத்ததுவும் வார்த்தை தெரியவில்லை
சந்தன மிருபுயத்தைச் சரியவெட்டிப் போட்டாரோ
குங்கும மிருபுயத்தைக் குலையவெட்டிப் போட்டாரோ
மலையே பருவதமே வாழ்மலையே குஞ்சரமே
காணவும் போறேனே கட்டழகர் தம்பியரை
பார்க்கவும் போறேனே பாவியென் கண்ணினலே
இன்ன மொருவேளை யினிக்காணப் போறேனே
இருவரையுந் தேடியே இட்டு வருவாயோ
போரீரோ தம்பியரே புத்தியுள்ள கண்மணியே
அண்ண ருரைகேட்டு ஆணழக னேதுசொல்வான்
அஞ்சிப் புலம்பாதே ஆயாச மாகாதே
ஆரோடே சண்டை அமரது செய்தாரோ
எவரோடே சண்டை எதிர்த்துப்போ ராடினரோ
சண்டை யதுகெலித்துச் சடுதியிற் கொண்டுவாறேன்

எங்கே யிருந்தாலும் இப்போதே ஆராய்ந்து
ஓடி யழைத்து ஒருநொடியில் வாறேனென்றான்
தேடி யழைத்துச் சீக்கிரத்தில் வாறேனென்றான்

## நகுலன் தருமராசர் சொற்படிக்கு வீமனையும் அருச்சுனனையும் தேடிப்போனது.

கடுக வெழுந்தானே கட்டழகன் சீர்நகுலன்
நீண்டிடுங் கால்களுக்கு நெருஞ்சிப்பூ ஜல்லடமாம்
மண்டியிடுங் கால்களுக்கு மாதளம்பூ ஜல்லடமாம்
தூக்கிவைக்குங் கால்களுக்கு துத்திப்பூ ஜல்லடமாம்
ஜல்லடங்க ளிட்டுமல்லோ தட்டி வரிந்துகட்டி
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
*வாங்கெடுத்துச் சொருகினனே மன்ன னிடப்புறத்தே
கத்தி சொருகினனே கானே வலப்புறத்தே
ஆயுதத்தைத் தானெடுத்து அண்ணருக்குத் தெண்டனிட்டு
போகவிடை தாருமெனப் போர்மன்னன் கைதொழுதான்
தக்க புகழுடைய தருமரவர் மனமகிழ்ந்து
வாழ்த்தி யெடுத்தவரும் மார்போடே கொண்டணைத்து
நாம முடியானே நகுலாயென் கண்மணியே
போன வனந்தேடிப் பொறுமையுடன் நீபார்த்து
சென்ற வனந்தேடிச் சீக்கிரமா யாராய்ந்து
கானே யிருவரையுங் கண்டழைத்து வாருமென்றார்
வீம னருச்சுனனை விரைவா யழைத்துவாரும்
போய்வாரு மென்னப் பொருந்த விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்தானே வேந்தன் நகுலனுமே
வாரானே சீர்நகுலன் வடக்கெழுந்த சூரியன்போல்
ஆயுதத்தைக் கைபிடித்து அண்ணர்களைத் தேடிவாரான்
தேடியே வாரானே சீரான கானகத்தில்
ஆரணிய மெங்குந்தேடி அண்ணர்களைக் கூவினனே
அங்கேயுங் காணமல் அப்பாலே போகலுற்றான்

* வாங்கு=பிச்சுவா.

மற்றோர் வனந்தனிலே மன்னர்களைத் தேடினனே
அங்கேயுங் காணவில்லை அழகான மன்னர்களை
நாம முடியான் நகுலன் மனங்கலங்கி
சிந்தை கலங்கியவன் திடுக்கிட்டு மெய்மறந்து
அழுது புலம்பினனே அண்ணர்களைக் காணுமல்
அப்போ நகுலனுக்கு அதிகதாக முண்டாச்சு
தண்ணீர் கவனங்கள் தாகவிடா யாகிறது
நாவு வறட்டுது நகுலமகா ராஜனுக்கு
அண்ணரைத் தேடியே அநேகதூரம் வந்தானே
அண்ணரைக் காணேமே அதிகதாக முண்டாச்சே
என்னசெய்யப் போறேனென்று ஏங்கி மனந்தளர்ந்து
என்று விசாரமிட்டே யிருக்கின்ற வேளையிலே

## எம்பெருமாள் நகுலராஜனை விஷநீர் குடிப்பித்துக் கொல்லுகிறது.

அப்போது மாயவரும் அங்கெனவே யேதுசொல்வார்
நாம முடியான் நகுலனைக் கொல்லவென்று
எம்பெருமாள் மாயவரும் ஏமனை யுச்சரித்தார்
ஏமனும் ராமனுடன் இருவரு மொன்ருகி
மயிலுங் குயிலுமங்கே வனத்திலே கூவுகுது
நாம முடியான் நகுல னவன்பார்த்து
அந்தக் குரல்கேட்டு ஆலோசனை பண்ணுகிருன்
முன்னே பெரியவர்கள் சொன்ன முறைப்படியே
குளிர்ந்த விடந்தனிலே குயிலு மயிலிருக்கும்
என்று மனங்குளிர்ந்து ஏகி நடந்தானே
அண்ண ரிருவர்களு மங்கே படுத்திருந்தார்
கண்டு மகிழ்ந்தானே கட்டழகன் சீர்நகுலன்
ஆனந்த மானனே அண்ணர்களைக் கண்டவுடன்
நாம முடியான் நகுலனு மேதுசொல்வான்
அண்ணர் தருமராயர் ஆயாசப் பட்டிருக்க
ஆரணங்கு துரோபதையு மங்கே புலம்பிநிற்க

என்ன மனதுகொண்டு இங்கே படுத்தார்கள்
தண்ணீர் குடித்துநாம் தாகவிடாய் தீர்ந்தபின்பு
அண்ணர் தமையெழுப்பி அழைத்துநாம் போவோமென்று
குளத்தி லிறங்கினனே கொப்பெனவே நகுலனவன்
மாயர் பெருமாளும் மலைராமர் தாம்பார்த்து
அந்தர மாகநின்று ஆயரவ ரேதுசொல்வார்
ஆரடா தம்பியரே அள்ளிசல முண்கிறவன்
சாலையுஞ் சோலையும் தாமரைப் பொய்கைகளும்
இத்தனையு மென்னதடா இறங்கிசல முண்ணுதே
தண்ணீர் குடியாதே தாமரைப் பொய்கையிலே
குளத்தைவிட் டிப்புறம்வா கொற்றவா வென்றுசொன்னர்
இவ்வார்த்தை தான்கேட்டு ஏதுசொல்வான் நகுலனவன்
ஆரோ தெரியாது அந்தரமாய்ப் பேசுகிறீர்
எவரோ தெரியாது எங்கேயோ பேசுகிறீர்
வார்த்தைகள் கேட்கிறது வயணந் தெரியவில்லை
சொன்னசொல் கேட்கிறது சொரூபந் தெரியவில்லை
அந்தர தேவதையோ சந்திர சூரியரோ
ஆகாய துர்க்கைகளோ ஐயன் பிடாரிகளோ
ஆரோ தெரியவில்லை அருகில்வந்து பேசுமென்ருன்
அவ்வார்த்தை தான்கேட்டு ஆயர் பெருமாளும்
எங்கள் குளத்திலேநீ இறங்கிசல முண்ணவென்ருல்
வையகத்தி லதிசயமும் வருத்தமான பாரங்களும்
வாடாப் பயிரதன்றன் வயண முரைத்தாயானல்
இறங்கி சலமுண்ணும் இல்லையென்ருற் போய்நடவும்
சொன்னலே நீர்குடியும் சொல்லாமற் போனலே
தண்ணீர் குடியாதே தாம முடியானே
குளத்திலடி வையாதே கொற்றப்போர் மன்னவனே
என்றதோர் சொற்கேட்டு ஏதுசொல்வான் சீர்நகுலன்
நீர்கேட்கும் வார்த்தைக்கு நான்கேட்குந் தன்மையென்ன
நீதியல்ல நீர்தூர நின்றுகொண்டு பேசுறது
என்னெதிரில் வந்தாலே இருதுண்டாய்ப் போட்டிடுவேன்
என்று சிலவார்த்தை நின்றுமவன் பேசினனே

அவ்வார்த்தை தான்கேட்டு ஆயர் பெருமாளும்
மறுவார்த்தை சொல்லாமல் மாயவருந் தாமிருந்தார்
அப்போ நகுலனுமே ஆனந்த மாகவேதான்
குளத்தி லிறங்கியே கொப்பனவே நகுலனவன்
தாகந் தெளியவே தண்ணீருந் தான்குடித்தான்
தாகந் தெளிந்தானே தருமர்தம்பி யானவனும்
தண்ணீர் குடித்தவுடன் தாறுமா றுய்விழுந்து
தலையைச் சுழற்றுறது தார்வேந்த ராஜனுக்கு
உடம்பு மறக்கிறதே உத்தண்ட வீரனுக்கு
எண்ணுது மெண்ணுகிறான் இளைய நகுலனுமே
ஆரோ தெரியாது அந்தரமாய்ச் சொன்னார்கள்
அவ்வார்த்தை கேளாமல் அள்ளியே தீர்த்தமுண்டேன்
சொன்னசொற் கேளாமல் சுருக்காகத் தீர்த்தமுண்டேன்
கண்ணுந் தெரியவில்லை காரணமுந் தோன்றவில்லை
நிலமும் தெரியவில்லை நினைவை மறக்கிறதே
அறியாதே நான்புசித்தே னென்றல்லோ ஆணழகன்
அண்ணர்க்குந் தம்பியர்க்கு மாரணங்கு துரோபதைக்கும்
அந்த வனந்தேடி ஆர்தான்போய்ச் சொல்வார்கள்
இந்த விஷயமதை எவர்போ யுரைப்பார்கள்
தரும ரிதையறிந்தால் சற்றும் பொறுக்காரே
அண்ணுவுந் தம்பியரும் அழுது புலம்புவார்கள்
இங்கே யுயிர்வாங்கி யிவர்க ளிருக்கையிலே
அங்கே நகுலனுமே அண்ணரண்டை மாண்டானே
மாண்டானே சீர்நகுலன் வசநாபி நீரையுண்டு
செத்தான் நகுலனுமே சீரான கானகத்தில்
இப்படி யாகவே இவரிருக்கும் வேளையிலே

## வீமனையும் விஜயனையும் அழைக்கப்போன நகுலனையுங் காணேமென்று தருமர் புலம்புகிறது.

அப்போது மன்னவரு மாணழக ரேதுசொல்வார்
சகாதேவ னைப்பார்த்துத் தருமரவ ரேதுசொல்வார்
அப்பா சகாதேவா அதிசயத்தை நீர்கேளும்

மான்பிடிக்கப் போனுனே மதவீம ராசனவன்
வீமனைக் காணவென்று வில்விஜய ராஜாவும்
தேடியே போனுனே தேர்விஜய னர்ச்சுனனும்
நல்விஜய ரைத்தேட நகுலனும் போய்நடந்தான்
மூவரும் போனுரே முடிவேந்த ரானவர்கள்
ஒருவரையுங் காணேனே உத்தரவு தானறிய
தேடியே போனவர்கள் திரும்பிவந்து சேரவில்லை
தம்பி சகாதேவா தாம முடியானே
தேடியே போருயோ சேதிவந்து சொல்லாயோ
செத்தார் பிழைத்தாரோ சேதி தெரியவில்லை
மாண்டார் பிழைத்தாரோ மறுவார்த்தை நானறிபேன்
மானைப் பிடிக்கையிலே மான்வளர்த்தார் கண்டாரோ
மானை வளர்த்தவர்கள் வந்துவதை பண்ணுரோ
சத்த ருஷிகளோ சந்நியாசி யானவரோ
சத்த ருஷியவர்கள் சபித்துமே போட்டாரோ
கொன்று பழிவாங்கிக் கொலைசெய்து போட்டாரோ
காணவும் போறேனே கட்டழகர் தம்பியரை
பார்க்கவும் போறேனே பாவியென் கண்ணுலே
இன்ன மொருகால் இங்கேவந்து சேர்வாரோ
இளைய சகாதேவா இட்டுக்கொண்டு வாராயோ
காளை சகாதேவா கண்டழைத்து வாராயோ
பாரமுடி மன்னர்களைப் பார்த்துமே நீயழைத்து
வருவாயோ தம்பியரே வார்த்தைகள் சொல்லுமென்றுர்
அப்போது சகாதேவன் அண்ணரைத் தெண்டனிட்டு
தாம முடியான் சகாதேவ னேதுசொல்வான்
அஞ்சாதீ ரண்ணுவே அழைத்தோடி வாரேன்நான்
காளையந்த மூவரையும் கண்டழைத்து வாரேனென்றுன்
பார்த்தழைத்து வாரேனென்றுன் பாரமுடி மன்னர்களை
என்று எழுந்தானே இளைய சகாதேவன்

## சகாதேவன் தருமர் சொல்லைக்கேட்டு தமையன்மார் மூவரையுந் தேடிக்கொண்டு போனது.

சல்லடங்க ளிட்டுமெல்லோ தட்டி வரிந்துகட்டி
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
மண்டியிடுங் கால்களுக்கு மாதளம்பூச் சல்லடமாம்
நீண்டிடுங் கால்களுக்கு நெரிஞ்சிப்பூச் சல்லடமாம்
தூக்கிவைக்குங் கால்களுக்குத் துத்திப்பூச் சல்லடமாம்
குந்தியிடுங் கால்களுக்குக் குறிஞ்சிப்பூச் சல்லடமாம்
சந்திரகாந்தித் தட்டிகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
ஈட்டி சமுதாடு எடுத்தான் பெரியகத்தி
கத்தி சொருகியல்லோ கடுக வெழுந்தானே
அண்ணரைத் தெண்டனிட்டு ஆணழக னேதுசொல்வான்
போகவிடை தாருமென்முன் போர்விஜயன் றம்பியவன்
தக்க புகழ்பெரிய தரும ரவர்பார்த்து
வாழ்த்தி யெடுத்தவரும் மார்போடே கொண்டணைத்து
அப்பா சகாதேவா அறிவுள்ள கண்மணியே
அண்ணமார் போனதொரு அடவி தனிற்சென்று
காளையந்த மூவர்களைக் கண்டழைத்து நீர்வாரும்
அண்ணர்களை நீர்கண்டு அழைத்தோடி வாருமென்முர்
போய்வாரு மென்றுசொல்லிப் பொருந்த விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்தானே வேந்தன் சகாதேவன்
அண்ணரைத் தேடியே அதிவிரைவாய்ப் போய்நடந்தான்
தமயன்மாரைத் தேடியே தார்வேந்தன் போகலுற்முன்
எட்டி நடந்தானே எழிலான சூரியன்போல்
தேடி வருகிருனே சீரான கானகத்தில்
எங்கெங்குந் தேடியே இனியவிட மாராய்ந்து
கடுக வருகையிலே காது மடைத்திடுது
நாவு வறட்டுறது நல்லசலங் கிட்டாமல்
மெத்தக் களையாச்சு வேந்தன்சகா தேவனுக்கு
அப்போ சகாதேவன் ஆணழக னேதுசொல்வான்
அண்ணர்க ளைத்தேடி அனேகதூரம் வந்தோமே

தண்ணீர் களையாகித் தாக மெடுக்குதையோ
எங்கெங்கே பார்த்தாலும் இனியசலங் கிட்டவில்லை
அண்ணரையுங் காணோமே ஆரணியந் தன்னிலேதான்
என்று மவன்சொல்லி யிருக்கின்ற வேளையிலே

## எம்பெருமாள் சகாதேவனை விஷத்தண்ணீர் குடிப்பித்துக் கொல்லுகிறது.

அப்போது எம்பெருமாள் ஆயரவ ரேதுசொல்வார்
வந்தசகா தேவனையும் வல்லுயிரை வாங்கவென்று
ஏமனும் பெருமாளும் ஏறினார் மலைமேலே
மயிலும் குயிலும் வனத்திலே கூவுகுது
இந்தக் குரல்கேட்டு இளைய சகாதேவன்
முன்னே பெரியவர்கள் சொன்ன முறைப்படியே
குளிர்ந்த விடந்தனிலே குயிலு மயிலிருக்கும்
என்று நடந்தானே இளைய சகாதேவன்
தாமரைப் பொய்கைகளும் தண்ணீர்த் தடாகமுடன்
பூவளமுஞ் சோலைகளும் புதுமைகளைத் தான்பார்த்து
சந்தோஷப் பட்டவனும் சரீரங்கள் பூரித்து
நாம்செய்த புண்ணியத்தால் நல்லசலங் கிடைத்ததென
அங்கே நடந்து அவசரமாய் வாரபோது
மன்னரந்த மூவர்களும் மரத்தடியிற் படுத்திருந்தார்
அண்ணர்கள் மூவருமா யங்கே படுத்திருந்தார்
அண்ணர் தமைக்கண்டு அதிக மனமகிழ்ந்தான்
தமையர் தமைக்கண்டு சந்தோஷ மானனே
அப்போது ஒருவார்த்தை ஆணழக னேதுசொல்வான்
அண்ணர் தருமரங்கே அழுது புலம்பியேதான்
தம்பியரைக் காணமல் தயங்கி யவரிருக்க
ஆரணங்கு துரோபதையா ளங்கே புலம்பிநிற்க
என்ன நினைவுகொண்டு இங்கே படுத்தீர்கள்
பச்சை மரத்தின்கீழ்ப் படுத்த விதங்களென்ன
இந்த மரத்தடியில் இவர்படுத்த காரியமேன்
குளிர்ந்த நிழலென்று கோமான்மார் படுத்தீரோ

மலர்ந்த மரமென்று மன்னர் படுத்தீரோ
தாகத்துக் குண்டபின்பு தமையர் தமையெழுப்பி
அண்ணர் களையெழுப்பி அழைத்துநாம் போவோமென்று
தாமரைப் பொய்கையண்டை தார்வேந்தன் வந்துநின்று
அந்தக் குளத்திலே அள்ளிசல முண்ணப்போனான்
அந்த சமயத்திலே ஆய ரவர்பார்த்து
அந்தரமாய் நின்றலவோ ஆயரவ ரேதுசொல்வார்
ஆரடா தம்பிநீ அக்குளத்தி லிறங்கினவன்
எவனோடா தம்பிநீ என்குளத்தில் வந்தவனும்
தண்ணீர் குடியாதே தாகவிடாய் தீராதே
இந்தநீ ரென்னதடா இந்தக்குள மென்னதடா
சாலேயும் சோலேயுந் தாமரைப் பொய்கைகளும்
இத்தனையு மென்னதடா இறங்கிசல முண்ணாதே
இறங்கினா லுன்தனக்கு இடறுகள் வந்துவிடும்
என்ற வுரைகேட்டு ஏதுசொல்வான் சகாதேவன்
அந்தரத்தில் நின்றுகொண்டு ஆர்காணும் பேசுறவன்
தூரத்தி லிருந்துகொண்டு சொல்லுகிறவ னார்காணும்
அந்தர தேவதையோ சந்திர சூரியரோ
ஆகாச துர்க்கைகளோ ஐயன் பிடாரிகளோ
பேயோ பிசாசுகளோ பிணந்தின்னும் ராக்ஷசியோ
ஆரோ தெரியாது அதட்டியே கேட்கிறவர்
எவரோ தெரியாது என்தனைக் கேட்கிறவர்
மற்று மொருகால்தான் வாய்திறந்து பேசுங்கள்
இன்ன மொருகால்தான் எதிரில்வந்து சொல்லுங்கள்
என்ற சொற்கேட்டு எம்பெருமா னேதுசொல்வார்
தண்ணீர் குடிக்கவென்றால் தரணியின் புதுமைசொல்லும்
வாடாப் பயிருமெது வருத்தமான பாரமெது
அந்த வதிசயங்க ளறிந்தா லுரையுமென்றார்
அறிந்துநீ சொன்னாலே அள்ளியே தீர்த்தமுண்ணும்
சொல்லுவா யாமானால் சுறுக்காகத் தீர்த்தமுண்ணும்
இல்லாமல் போனாலே யிப்பாலே வந்துவிடும்
தாம முடியான் சகாதேவ ராசனவன்

என்ற வுரைகேட்டு ஏதுசொல்வான் சகாதேவன்
ஆரோ தெரியாது அந்தரத்தில் மிரட்டுகிறீர்
எவரோ தெரியாது என்னை மிரட்டுகிறீர்
அருகாக வந்தாலே அடித்தெறிந்து போட்டிடுவேன்
எ திரிலே வந்தாலே யிருதுண்டாய்ப் போட்டிடுவேன்
சரியா யிருக்கவேணும் சண்டைபண்ணிப் பார்க்கவேணும்
மறைவா யிருந்துகொண்டு வாதாட நீதியுண்டோ
என்று மவனுரைக்க எம்பெருமாள் தான்கேட்டு
ஒன்றுமே சொல்லாமல் உலகளந்தார் வீற்றிருந்தார்
மறுவார்த்தை பேசாமல் மாயவருந் தானிருந்தார்
அப்போ சகாதேவன் ஆனந்த மாகவேதான்
குளத்தி லிறங்கினனே கொப்பெனவே தீர்த்தமுண்டான்
அள்ளியே தீர்த்தமுண்டான் ஆவல் தெளிந்திடவே
தண்ணீர் குடித்தானே தாம முடியானும்
அள்ளிசல முண்டபின்பு ஆனந்த மார்பனுக்கு
தண்ணீர் குடித்தவுடன் தலையைச் சுழற்றுறது
உடம்பு மறக்கிறது உள்ளங் குலைகிறது
நாவு குளறுகுது நாமமுடி யானுக்கு
தன்னை மறக்கிறது தார்வேந்த ராஜனுக்கு
ஆரோ தெரியாது அந்தரத்திற் சொன்னார்கள்
எவரோ தெரியாது என்தனக்குச் சொன்னார்கள்
தண்ணீர்குடி யாதேயென்று சத்தம் பிறந்ததங்கே
அவர்சொல்லைக் கேளாம லள்ளிநான் தீர்த்தமுண்டேன்
சொன்னசொற் கேளாமல் சுறுக்காகத் தீர்த்தமுண்டேன்
தெரியாமல் நீர்குடித்தேன் சிந்தை கலங்கிறது
அறியாமல் நீர்குடித்தேன் அங்கம் புரட்டுறது
என்று நடந்தானே இளைய சகாதேவன்
அண்ணன்மார் தம்மருகே ஆணழகன் வந்துநின்று
அப்போ சகாதேவன் ஆலோ சனைகள்பண்ணி
தம்பிகளைக் காணுமென்று தருமரிங்கே வந்தாக்கால்
வசநாபித் தண்ணீருண்டு மாண்டிடுவார் தப்பாது
என்று மனதிலெண்ணி யெழுதுகின்றான் மரத்தடியில்

அண்ணுவே மரத்தடியில் அதிசய மானவார்த்தை
இந்தக் குளத்திலே எவர்தாக முண்டாலும்
வசநாபித் தண்ணீரிது குடித்தால் மடிந்திடுவார்
அண்ணுவே இக்குளத்தி லள்ளிநீர் குடியாதே
நாங்க ளிதைக்குடித்து நாலுபே ரும்மடிந்தோம்
செத்து மடிந்துவிட்டோம் சிவலோகம் சேர்ந்துவிட்டோம்
மாண்டு மடிந்துவிட்டோம் வைகுந்தம் சேர்ந்துவிட்டோம்
என்று மவன்சொல்லி யெழுதினுன் மண்மேலே
தலையைச் சுழற்றுகையில் தானும் படுத்துக்கொண்டான்
அந்தச் சமய மறிந்தாரே யெம்பெருமாள்
மாயன் பெருமாளும் வார்த்தைக ளேதுசொல்வார்
காலனை யெச்சரித்துக் கடுகிஉயிர் வாங்குமென்முர்
ஏமனை யெச்சரித்து இவனுயிரை வாங்குமென்முர்
எம்பெருமாள் சொற்கேட்டு ஏமனவ னேடிவந்து
சூலத்தால் குத்தியே பாசத்தால் கட்டினுனே
பாசத்தால் கட்டியே பதைக்க வுயிர்பிடித்தான்
சூலத்தால் குத்தி துடிக்க வுயிர்பிடித்தான்
மாண்டு மடிந்தானே மன்னன் சகாதேவன்
செத்து மடிந்தானே சீரான கானகத்தில்
இப்படி யாக இவரிருக்கும் வேளையிலே

## ஆரணியத்தில் எம்பெருமாளுடைய சூதினுலே வீமன் அர்ச்சுனன் நகுலன் சகாதேவன் இந்நான்குபேரும் மாண்டபின்பு காளமகாருஷி யாகத்திலுண் டாகிய வேதாளம் ஐந்துபேரையுங் கொல்ல வருகிறது.

அந்தச் சமயத்தில் ஆங்கார மகாதேவன்
காள மகாருஷியுங் கருதித் தபசுபண்ணி
அக்கினிக் குழியிலே ஆங்கார வேதாளம்
உண்டாகி வந்துதங்கே உலகந் திடுக்கிடவே
கறுத்த நிறத்துடனே கைதனிலே வாளுடனே
பெருத்த முகத்துடனே பெருந்தொப்பை தன்னுடனே

செவந்த மயிரழகும் சீவடிந்த வாயழகும்
கண்களைப் பார்த்தாலே கருங்குன்று போலிருக்கும்
கைகளோ காதவழி கால்கள் வெகுதூரம்
அகண்ட புஜங்கள் ஐந்நூற்றுக் காதவழி
பல்லழகைப் பார்த்தாலே பனைமரம் போலிருக்கும்
மூக்கழகைப் பார்த்தாலே முதலைகளைப் போலிருக்கும்
இப்படி யாகவே இருக்குமந்த வேதாளம்
பொல்லாத வேதாளம் பிறந்தது அக்கினியில்
காளமகா ருஷியருகே கடுகவந்து தெண்டனிட்டு
என்னை யழைத்ததுதா னேது வகையாக
ஆரைநான் கொல்கிறது அடுத்துபோர் செய்கிறது
எவரைப்போய்க் கொல்கிறது என்தனக்குச் சொல்லுமையா
கைகள் பதைக்கிறது காள மகாமுனியே
வயிறு பசிக்கிறது மாமுனியே சொல்லுமையா
அப்போது மாமுனியும் அதுசொல்லத் தான்கேட்டு
காள மகாமுனியும் கடுக வெடுத்துரைப்பார்
அக்கினியில் வந்துதித்த ஆங்கார வேதாளமே
நான்சொல்ல நீகேளு ராஜாக்கள் ஐவருண்டு
இந்த வனத்தினிலே இருக்கிறார் பஞ்சவர்கள்
வீரப் புலிபோலே வேந்தர்களைவருண்டு
பாரப் புலிபோலே பஞ்சவர்களைவருண்டு
ஐவரையுங் கொன்றுதின் றரைநொடியில் வாருமென்றார்
வேதாளந் தான்கேட்டு வெகுவாய் மனங்குளிர்ந்து
அவ்வளவு போதுமென்று ஆக்ரமித்துப் பற்கடித்து
ஆக்ரமித்துப் பற்கடித்து அதட்டி வருகுதங்கே
எங்கெங்கே யென்றுசொல்லி எழும்பியே கொக்கரித்து
கொக்கரித்து வேதாளம் கும்மாள மாய்வருது
அந்த வனங்களெல்லாம் ஆராய்ந்து வருகையிலே
செந்தாமரைப் பொய்கையண்டை செத்திருக்கக் கண்டதுவே
மாமரச் சோலையின்கீழ் மாண்டிருக்கக் கண்டதுவே
இறந்தவ ரல்லாம லின்ன மொருவரில்லை
செத்தவ ரல்லாமல் மற்று மொருவரில்லை

எங்கே மடிந்தாரோ எவ்விடத்திற் செத்தாரோ
செத்த பிணத்திடத்திற் றேடிப்போ வென்ருரே
மாண்ட பிணந்தின்ன மாமுனி போகச்சொன்ஞர்
ஈத்தனேநா ளேக்குமுன்னே செத்த பிணமிதுவோ
செத்தப் பிணத்தையோநான் சென்று புசிக்கிறது
நாறும் பிணமெடுத்து நானே புசிக்கிறது
மாண்ட பிணத்தையோ வயிருர வுண்கிறது
என்றுமே சொல்லி எழுந்தது வேதாளம்
அங்கே திரும்பி அகோரமான கோபத்துடன்
மகாவேகந் தன்னுடனே வருகுது வேதாளம்
காள மா ருஷியருகே கடுகவந்து உக்கிரமுடன்
எடுத்து மகாமுனியை இரண்டாய்க் கிழித்ததுவே
வாரி யெடுத்துமல்லோ வயிற்றைக் கிழித்தது வே
நெஞ்சைப் பிளந்தது நெருப்பூத் தணலெழும்ப
மாமுனியைக் கொன்றபின்பு மனது மிகக்குளிர்ந்து
சந்தோஷ மாகியல்லோ வேதாளந் தானடக்க
அந்த வனத்தைவிட்டு அப்பாலே போனபின்பு
மனது குளிர்ந்தது மற்றேர் வனந்தனிலே
போயது பிழைத்திருக்கும் பொல்லாத வேதாளம்
இந்தப் படியாக இருக்கின்ற வேளேயிலே

## தருமராசர் தம்பிமார் நாலுபேரையுங் காணேமென்று துரோபதையுடன் சொல்லிப் புலம்புகிறது.

வேதாளம் போனபின்பு வேல்வேந்தர் தருமரவர்
சாயாம்பு மன்னவஞர் தருமரவ ரேதுசொல்வார்
பாஞ்சாலன் பெண்ணே பைங்கிளியே துரோபதையே
நெருப்பிற் பிறந்தவளே நீலவண்ணன் தங்கையரே
அனலிற் பிறந்தவளே அபிஷேக பத்தினியே
ஐவரையும் மாலேயிட்ட ஆதி பாஞ்சுடரே
தோரா வடிவழகி துரோபதையே நீர்கேளும்
மான்பிடிக்கப் போனதொரு மதவீம னேக்காணேம்
வீமனேத் தேடிப்போன விஜயன் வரக்காணேம்

இவர்களைத் தேடிப்போன நகுலன் வரக்காணோம்
மூவரையும் தேடிப்போன சகாதேவனைக்காணோம்
நால்வரையுங் காணோமே நாயகமே யென்னசெய்வோம்
செத்தார் பிழைத்தாரோ சேதி தெரியவில்லை
மாண்டார் பிழைத்தாரோ வார்த்தை தெரியவில்லை
ஆரோடே சண்டையிட்டு அமரது செய்கிறாரோ
எவரோடே சண்டையிட்டு எப்படிப்போர் செய்கிறாரோ
மானை வளர்த்தவர்கள் வந்துவதை பண்ணினாரோ
எந்தத் தபோதனர்கள் எவர்கள்கொன்று போட்டாரோ
தபசிற் பெரியவர்கள் சபித்தாரோ நானறியேன்
வரத்திற் பெரியவர்கள் வதைசெய்து போட்டாரோ
போன விடமறியேன் போர்செய்த தாவறியேன்
தங்கு மிடமறியேன் சஞ்சரிக்குந் தாவறியேன்
தேடியே போவோம்வா தேவியே யென்றழைத்தார்
ஆரணங்கு துரோபதையா ளப்படியே நல்லதென்றாள்

## தருமரும் துரோபதையும், வீமன் அருச்சுனன் நகுலன் சகாதேவன் இவர்கள் நாலுபேரையும் தேடிக்கொண்டு போனது.

துரோபதையும் தருமருமே துள்ளி யெழுந்திருந்து
தேடப்புறப் பட்டார்கள் சீரான கானகத்தில்
கூவிப் புலம்பியே கொப்பெனவே வாரார்கள்
அழுது புலம்பியே அந்தவனந் தேடிவாரார்
இருண்ட வனங்களெல்லாம் எங்கெங்குந் தேடினாரே
தம்பியரைக் காணாமல் தயங்கினார் தருமரங்கே
பாராமல் தம்பியரைப் பதைத்துப் புலம்பினார்கள்
தக்க புகழுடைய தருமரங் கேதுசொல்வார்
தோரா வடிவழகி துரோபதை பாஞ்சாலி
இந்த வனமதனில் எங்கெங்குந் தேடினோமே
காளையந்த நால்வரையும் காட்டிலே காணவில்லை
இந்த வனந்தாண்டி இனியவனம் போவோமென்று
அந்த வனத்தைவிட்டு அப்பாலே போகலுற்றார்

தேடியே வாரார்கள் சீரான வனந்தனிலே
தருமருக்குந் துரோபதைக்குந் தாக மெடுக்கிறது
நாவு வறட்டுறது நாம முடியார்க்கு
ஆரணங்கு துரோபதைக்கு அதிகதாக முண்டாச்சு
தண்ணீர் கவனமுடன் தாகவிடா யுண்டாச்சு
தக்க புகழுடைய தருமரவ ரேதுசொல்வார்
என்னசெய்வோம் பெண்ணேநாம் எங்குநீர் கிட்டாது
மன்னவரைக் காணேனே மாதரசே யென்னசெய்வேன்
தம்பிகளைக் காணுமே தாகவிடாய் கொள்கிறது
என்னசெய்வே னென்றுசொல்லி இளைத்துப் புலம்புகையில்
அந்தச் சமயமதில் அரிராம ரேதுசெய்தார்
மயிலுங் குயிலுமிங்கே மரத்தின்மே லேறிக்கொண்டு
வனத்திற் குயில்களுடன் மயில்களுங் கூவுகுது
அந்தக் குரல்கேட்டார் ஆணழகர் தருமலிங்கம்
கூவுங் குரல்கேட்டுக் கொப்பெனவே ஏதுசொல்வார்
முன்னே பெரியவர்கள் சொன்ன முறைப்படியே
குளிர்ந்த விடந்தனிலே குயிலு மயிலிருக்கும்
என்று நடந்தாரே இளந்தோப்பு தன்னருகே
தாமரைப் பொய்கையண்டை தம்பிமார் தாமிருந்தார்
பள்ளிகொண் டிருக்கிறதைப் பார்த்தாரே தருமலிங்கம்
தக்க புகழுடைய தருமரவ ரேதுசொல்வார்
தோரா வடிவழகி துரோபதையே கண்டாயோ
தம்பிமார் பள்ளிகொண்ட தயிரியத்தைப் பார்த்தாயோ
மானும் பிடியாமல் வந்துசேதி சொல்லாமல்
குளிர்ந்த நிழலருகே கூசாமற் பள்ளிகொண்டார்
தண்ணீர் குடித்துநாம் தாகவிடாய் தீர்ந்தபின்பு
தம்பிமாரைத் தானெழுப்பித் தையலரே போவோமென்றார்
என்று மவருரைத்து இளந்தோப்பிற் போய்ப்புகுந்து
தாமரைப் பொய்கையிலே இறங்கினார் தருமரவர்
அப்போது மாயவரும் அரிராமர் தாம்பார்த்து
அந்தரமாய் நின்றுகொண்டு ஆயரங் கேதுசொல்வார்
ஆரடா தம்பிநீ அக்குளத்தி லிறங்கினவன்

எவனடா தம்பிநீ இக்குளத்தி லிறங்கினவன்
இந்தக்குள மென்னதடா இந்தநதி யென்னதடா
சாலையுஞ் சோலைகளுந் தாமரைப் பொய்கைகளும்
இத்தனையு மென்னதடா இறங்கிசல முண்ணுதே
என்றசத்தங் கேட்டவுடன் ஏதுசொல்வார் தருமரவர்
ஆரோ தெரியாது அந்தரமாய்ப் பேசுறது
எவரோ தெரியாது எவ்விடமோ பேசுறது
அந்தர தேவதையோ சந்திர சூரியரோ
ஆகாச துர்க்கைகளோ ஐயன்பி டாரிகளோ
வானுலக தேவர்களோ வந்தென்னைக் கேட்கிறது
பேயோ பிசாசுகளோ பிணந்தின்னும் ராட்சதரோ
ஆரோ தெரியாது அந்தரமாய்ப் பேசுகிறீர்
எவரென்று நானறியேன் எங்கேயோ பேசுகிறீர்
வார்த்தைகள் கேட்குமொரு வயணந் தெரியவில்லை
உத்தரவு கேட்கிறது உருவந் தெரியவில்லை
பேச்சுகள் கேட்கிறது பேருந் தெரியவில்லை
தாக விடாயாகத் தண்ணீர் குடிக்கவந்தேன்
நாவு வறட்டுகுது நடுங்குது தேகமெங்கும்
உள்நாக்கு வரட்டுகுது உத்தரவு தாருமையா
உத்தரவு தந்தாலே உண்ணுகிறேன் தீர்த்தமிங்கே
வார்த்தை யுரைத்தாலே வாரிசல முண்ணுகிறேன்

## எம்பெருமாள், தருமர் தம்பிமார் நாலுபேரையும் அதிசயங் கேட்டதற்கு யாருஞ் சொல்ல வில்லை; தருமர் சொல்லுகிறது.

என்றுரைக்கத் தருமலிங்கம் ஏதுசொல்வார் மாயவனூர்
இப்பூமி யதன்மேலே என்ன அதிசயங்கள்
அதிசயத்தைச் சொன்னீரானு லள்ளியே நீருமுண்ணும்
இல்லாமற் போனாலே இப்பாலே வந்துவிடும்
சொல்லாமற் போனீரானல் சுறுக்காய் நடவுமென்றார்
என்றசொல் தாம்கேட்டு ஏதுசொல்வார் தருமலிங்கம்
மனிதர் பிறக்கிறதும் மனித ரிறக்கிறதும்

இதுவே அதிசயங்கள் இனியொன்று மில்லையென்றார்
அவ்வயணங் கேட்டபின்பு அரிராம ரென்னசொல்வார்
இதுவே அதிசயங்காண் இனியொன்று மில்லையோதான்
இன்ன மொருவார்த்தை உண்மை யுரையுமென்றார்
வையகத்து மாந்தருக்கு வருத்தங்க ளானதுகாண்
ஏதுவருத்த மென்றுகேட்டார் இனிப்பிறந்த பேர்களுக்கு
அப்போ தருமரவர் ஆய ருரைகேட்டு
சாயாம்பு மன்னவனார் தருமரங் கேதுசொல்வார்
பத்துமா தம்சுமந்து பாலகனை யுண்டாக்கி
முந்நூறு நாள்சுமந்து முருகுழலாள் தன்னருகே
பெற்றெடுத்த தாயார்க்குப் பெரிய சுமையொழிய
மற்றுஞ் சுமையுமில்லை வையகத்து மாந்தருக்கு
இவ்வயணங் கேட்டபின்பு ஏதுசொல்வார் மாயவனார்
இன்ன மொருவார்த்தை இயம்புவேன் சொல்லுமென்றார்
வையகந் தன்னிலே வாடாப் பயிருசொல்லும்
என்றைக்கும் வாடாத இனியபயிர் சொல்லுமென்றார்
ஆய ரிவையுரைக்க அவ்வார்த்தை தாம்கேட்டு
சாயாம்பு மன்னவனார் தருமரங் கேதுசொல்வார்
வாடா திருக்கிறது வளரு மறுகம்புல்
அந்தச்சொல் தாமுரைத்தார் அங்கெனவே மாயவர்க்கு
இவ்வயணங் கேட்டவுடன் எம்பெருமா ளென்னசொல்வார்
சந்தோஷ மாச்சுது தாகந் தெளியுமென்றார்
உத்தரவு தந்தாரே உலகளந்தா ரெம்பெருமாள்
தக்க புகழுடைய தரும ரவர்கேட்டு
உண்ணுமென்று சொன்னதொரு உத்தரவு தாம்கேட்டு
சந்தோஷப் பட்டதனால் சரீரங்கள் பூரித்து
தாகந் தெளிவதற்குத் தண்ணீர் குடித்தார்கள்
அள்ளிப் *பொசித்தார்கள் ஆவல் தெளிந்திட்டே
தருமருந் துரோபதையுந் தாகத்துக் குண்டார்கள்
தாகந் தெளிந்தபின்பு தம்பிமா ரண்டைவந்தார்

---

* பொசித்தார்கள்=புசித்தார்கள்=உண்டார்கள்.

## தருமர் வந்து தம்பிமார்களை எழுப்பி, நாலுபேரும் இறந்துவிட்டாரென்றறிந்து புலம்புகிறது.

நாலுபே ரண்டைவந்து நடுவே யிருந்துகொண்டு
சகாதேவன் படுத்திருந்த தலைமாட்டி லெழுதியதோர்
வாசகத்தைப் படித்தாரே மன்னர் தருமலிங்கம்
என்னவென் றெழுதியங்கே யிருந்ததென்றால் வாசகத்தில்
நால்வரு மாகவேதாம் நச்சுப்பொய்கைத் தீர்த்தமுண்டு
விஷநீரை யுண்டலவோ வேந்தர் மடிந்துவிட்டோம்
மாண்டு மடிந்துவிட்டோம் நீங்கள்வந்தா லண்ணுவே
தாகத்துக் குண்ணுதே தப்பிப் பிழையுமென்று
இவ்வயண மாகவேதான் எழுதி யிருக்கிறது
பார்த்துப் படித்தவுடன் பயந்தாரே தருமராயர்
செத்து மடிந்தார்கள் சீரான தம்பியர்கள்
மாண்டுமடிந் தார்களென்று மன்னர் புலம்புகிறார்
என்னசொல்லிப் புலம்புகிறார் இருண்ட வனந்தனிலே
மலையே பருவதமே மாண்டு மடிந்தீரோ
செம்மலையே பருவதமே செத்து மடிந்தீரோ
நீல மலையே நிலத்தோடே சாய்ந்தீரோ
கல்லான தூண்களுக்குக் கலக்கமில்லை யென்றிருந்தேன்
கல்லான தூண்களையுங் கறையா னெரித்ததுவோ
இரும்பான தூண்களுக்கு என்னகுறை யென்றிருந்தேன்
இரும்பான தூண்களுமே இற்று விழுந்தனவோ
வச்சிரத் தூண்களுக்கு மயக்கமில்லை யென்றிருந்தேன்
வச்சிர தூணுகளும் மண்ணோ டுளுத்தனவே
செம்பருந்து வந்தென்னைச் சிறகா லடித்ததுவே
குஞ்சைப் பறிகொடுத்த கோழிபோ லானேனே
ரெக்கை பறிகொடுத்த டேகைபோ லானேனே
கையறுந்த ஆனையைப்போல் கலங்கினேன் தம்பியரே
ஓடுகிற மான்தனக்கு ஒருகா லொடிந்தாற்போல்
உள்ளங் குலைந்தொருநான் உருகுகிறேன் தம்பியரே
என்னைத் தவிக்கவிட்டு எங்கேபோய் மறைந்தீர்கள்
ஐயையோ தெய்வமே அலையவிட்டுப் பார்த்தீர்கள்

### தருமராயர் வீமனைப்பார்த்துப் புலம்புகிறது.

தக்க புகழுடைய தரும ரெழுந்திருந்து
வீம னருகில்வந்து வேந்தர் புலம்புகிறார்
வெற்றி மதயானை வீமா மதகரியே
கட்டிக் கரும்பேயென் கண்மணியே யெங்கொளித்தாய்
நூலார் சடுந்திரளார் நூற்றொரு மன்னரையும்
கொல்லுகிறே னென்றுநீ கொடிய சபதமிட்டாய்
அவ்வார்த்தை தான்மறந்து அப்பாநீ யெங்கொளித்தாய்
வச்சிர முடியேநீ மண்ணோடே சாய்ந்தாயோ
தங்க முடியேநீ தரையிற் கவிழ்ந்தாயோ
தாயை மறந்தாயோ தமயனை நீமறந்து
எங்கே யொளித்தாயோ எந்நாடு போனாயோ
என்னை யலையவிட்டு எங்கேநீ போயொளித்தாய்
என்று புலம்பியவர் இளைத்துமண்ணில் மூர்ச்சையானார்
களைத்து விழுந்தாரே கட்டழகர் தருமலிங்கம்

### தருமராயர் களைதெளிந்து எழுந்திருந்து அர்ச்சுன னைப்பார்த்துப் புலம்புகிறது.

அன்றொரு நாழிகையும் சென்ற பிறகாக
தோரா வடிவழகி துரோபதையா ளோடிவந்து
களைத்த தருமருக்கு கடுகமூர்ச்சை தெளியவென்று
காட்டில் தழையொடித்துக் கடுகெனவே யோடிவந்து
பச்சைத் தழையொடித்துப் பசுங்கிளியாள் வீசலுற்றாள்
வீசக் களைதெளிந்து வேந்த ரெழுந்திருந்து
என்னென்ன சொல்லியவர் எடுத்துப் புலம்புகிறார்
ஆணு லழகுமன்னா அருச்சுனா என்பிறப்பே
என்னைத் தனியேவிட்டு எங்கேநீ போயொளித்தாய்
மீசை முறுக்கழகா விழியிற் கறுப்பழகா
நாவிலே நட்சத்திரம் நயனவிழிப் பார்வைகளும்
தோளில் துளசிமாலை அமிர்தகலசம் தொப்புளிலே
பல்லிலே பரசவீணை பாதத்தில் தாமரைப்பூ
முதுகிலே மச்சரேகை முழங்காலில் முத்துமணி

இடதுகால் விருதுதொம்மை வலதுகால் வீரதண்டை
தலவிருது குலவிருது சத்ராதி பேர்விருது
எதிர்த்தவன் தன்விருதும் எதிராளி முகவிருதும்
இத்தனை விருதுகளை எடுத்துநீ பூட்டிக்கொண்டு
கட்டி யெதிர்த்தாலே கலங்குமே சேனையெல்லாம்
சத்ராதி களைச்செயிக்கும் தனஞ்சயரே அர்ச்சுனரே
எதிரி களைச்செயிக்கும் என்பிறப்பே அர்ச்சுனரே
என்னைப் பிரிந்துநீ இறந்து மடிந்தாயோ
அழகை யெழுதினவர் ஆயுளை யெழுதாரோ
வடிவ மெழுதினவர் வயதை யெழுதாரோ
பெற்றாளே குந்தியம்மாள் பிரபலங்கள் காணவென்று
பெற்றாள் வயிற்றிலேநீ பெருநெருப்பை யிட்டாயோ
என்னைத் தவிக்கவிட்டு இறந்துவிட ஞாயமுண்டோ
என்றுசொல்லித் தருமரவ ரேங்கி மனந்தளர்ந்தார்
அழுது புலம்பியவர் அப்போதே மூர்ச்சையானார்
களைத்து விழுந்தாரே கட்டழகர் தருமலிங்கர்

## தருமராஜர் மூர்ச்சை தெளிந்தெழுந்திருந்து நகுலனைப்பார்த்துப் புலம்புகிறது.

களைத்த தருமரைத்தான் கண்டந்த துரோபதையாள்
துள்ளி யெழுந்திருந்து துரிதமுட னோடிவந்து
காட்டில் தழையொடித்துக் கடுகெனவே யோடிவந்தாள்
தரும ரருகாகத் தையலரும் வந்துநின்று
பச்சைத் தழையொடித்துப் பைங்கிளியாள் வீசுகிறாள்
காட்டுத் தழையொடித்துக் கடுகெனவே வீசினாளே
மற்று மொருநாழி யுற்ற பிறகாக
வீசக் களைதெளிந்து வேந்த ரெழுந்திருந்து
மூர்ச்சை யதுதெளிந்து முன்னின்று புலம்புகிறார்
அப்பா நகுலாஎன் னறிவுள்ள கண்மணியே
மலையே பருவதமே வாழ்மலையே குஞ்சரமே
நீமடியுங் காரியங்கள் நிண்ணயத்தை நானறியேன்
மாண்டிடுவீ ரென்றொருநான் மனதில் நினைத்ததில்லை

செத்து விடுவீரென்று சற்று மறியேனே
என்னைநீ கையைவிட்டு இறந்துவிட ஞாயமுண்டோ
(நீங்கள்) போவ தறியாமல் பூரித்து நானிருந்தேன்
சாவ தறியாமல் சந்தோஷ மாயிருந்தேன்
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
எவரைச் சதமென்பேன் இனியாரைத் தஞ்சமென்பேன்
பார்த்த முகங்களெல்லாம் வேற்றுமுகங் காணுதையா
கண்ட முகங்களெல்லாம் கடுத்தமுக மாகுதப்பா
கூடப் பிறந்தீரே கூட்டுப்பா லுண்டீரே
ஒக்கப் பிறந்தீரே ஒருதனப்பா லுண்டீரே
காட்டுக்குள் கையைவிட்டுக் கைலாசம் போனீரோ
தங்கத் தரிக்கவில்லை தரையிற்கால் பாவவில்லை
நிற்கத் தரிக்கவில்லை நிலத்திற்கால் பாவவில்லை
உங்களை நான்பிரிந்து ஒருநாழி தங்குவேனோ
கூட மடிவேன்காண் கொற்றவரே உங்களுடன்
ஒக்க மடிவேனே உங்களுடன் இப்போது
அலண்டு புரண்டழுதா ரடித்துக்கொண்டார் தலைமேலே
முட்டிக்கொண்டார் பூமியிலே மோதிக்கொண்டா ரப்போது
மார்கொண்ட கண்ணீரை வழித்தெறிந்தார் மண்மேலே
துடித்துப் பதைத்தலறித் துள்ளிப் புரண்டழுதார்
களைத்து விழுந்தாரே கட்டழகர் தர்மலிங்கம்
மூர்ச்சையாய் விழுந்தாரே முடிமன்ன ராஜாவும்

## தருமராஜர் மூர்ச்சைதெளிந்து சகாதேவனைப் பார்த்துப் புலம்புகிறது.

தோரா வடிவழகி துரோபதையுந் தான்பார்த்து
களைத்த தருமருக்குக் களைகள் தெளியவென்று
காட்டில் தழையொடித்துக் கட்டழகி வீசலுற்றாள்
பச்சைத் தழையொடித்துப் பைங்கிளியாள் வீசலுற்றாள்
வீசக் களைதெளிந்து வேந்த ரெழுந்திருந்தார்
மூர்ச்சை தெளிந்தெழுந்து மோதிப் புலம்புகிறார்
சாஸ்திரக் கொடிவேந்தா சகாதேவ ராஜாவே

முன்வருங் காரியத்தை முதலறிந்து சொல்லுவாயே
இனிநடக்குங் காரியத்தை எந்தனுக்கு நீயுரைப்பாய்
அப்படிக் கொத்ததொரு அறிவுள்ள கண்மணியே
உன்னைப் பறிகொடுத்து உலகத்தில் வாழ்வேனோ
பன்னிரண்டு வருஷங்களும் பாரவனந் தீர்ந்தபின்பு
அக்கியாத வருஷமொன்று மதுவுங் கழிந்தபின்பு
பார வனந்தீர்ந்து பட்டணமே போய்ச்சேர்ந்தால்
குந்தியம்மா ளோடிவந்து குழந்தைக ளெங்கேயென்றால்
மைந்தர்க ளெங்கேயென்று மாதாவுங் கேட்டாலே
என்னவென்று சொல்லுவேனோ னேதென் றெடுத்துரைப்பேன்
கட்டிக் கரும்பேயென் கண்மணியே யெங்கொளித்தாய்
முடிக்குமுடி யானாலும் முத்துமுடி யாகுமோதான்

## தருமர் நாலுபேர் தம்பிமாரையும் நினைந்து புலம்ப அப்போது துரோபதை தன் புருஷர்களைப் பார்த்துப் புலம்புகிறது.

தோரா வடிவழகி துரோபதையு மேதுசொல்வாள்
மாலையிட்ட மன்னவர்கள் மாண்டுவிட நீதியுண்டோ
தாலிகட்டும் ராஜாக்கள் தரையில் விழலாச்சே
மங்கிலிய முண்டு மணமுண்டு என்றிருந்தேன்
உலகத்துப் பெண்டுகள் ஒருவனுக்குக் கைகொடுப்பார்
நான்-ஐவருக்குங் கைகொடுத்து அம்பலத்துக் காளானேன்
செல்வத் தலையிலே செப்பே டெழுதினதும்
அல்லற் படுந்துயரம் அமைத்தாரே பிரமதேவர்
ஆரைக் கழுத்தி அரைக்கழுத்தி யானேனே
கோரைக் கழுத்தி குறைக்கழுத்தி யானேனே
தங்கக் கழுத்தி தலைவிரிக்க நாளாச்சே
மல்லிகைச் சாலையிலே மயிர்விரிக்க நாளாச்சே
குங்குமச் சாலையிலே குழல்விரிக்க நாளாச்சே
ஐயையோ தெய்வமே அனியாயஞ் செய்தீர்களோ
பார்த்து மிருந்துமென்னைப் பரதவிக்க விட்டீர்களோ

கண்டு மிருந்துமென்னைக் கனங்குலைய வைத்தீர்களோ
தோள்சார்ந்த ராஜாக்கள் சோர்ந்துவிடக் காரியமேன்
மார்சார்ந்த ராஜாக்கள் மடிந்துவிடக் காரியமேன்
காட்டில் மடிந்தலவோ கையைவிட்டு நின்றீர்களோ
அடவியிலே தான்மடிந்து அலையவிட்டுப் போனீர்களோ
சூரியரைச் சாக்ஷிவைத்துத் தெருவில்கை விட்டீர்களோ
சந்திரரைச் சாக்ஷிவைத்துச் சாகத் துணிந்தீர்களோ
சந்தியிலே கையைவிட்டுச் சமர்த்தாய்ப் படுத்தீர்களோ
மஞ்ச ளிழந்தும் மணமிழந்தும் பூவிழந்தும்
தாலிச் சரடிழந்துந் தாரணியில் நிற்பேனோ
மஞ்சள் சரடிழந்தும் மண்மே லிருப்பேனோ
கூட மடிவேன்காண் கொற்றவரே உங்களுடன்
ஒக்க மடிவேன்காண் உத்தமரே உங்களுடன்
நானு மடிவேன்காண் ராஜர்களே உங்களுடன்
அலண்டு புரண்டழுது அப்பிக்கொண்டாள் மார்மேலே
எங்கேயோ வானம் இடிக்கிற தென்றிருந்தேன்
தப்பாமல் வானமல்லோ தலையி லிடித்ததுவே
என்று புலம்பியே இளங்கொடியாள் தானழுதாள்
கோவென்ற சத்தம் குமரி புலம்புகிறாள்
தக்க புகழுடைய தருமரவ ரேதுசொல்வார்
சாயாம்பு மன்னவனார் தருமரவ ரேதுசொல்வார்
தோரா வடிவழகி துரோபதையே நீகேளாய்
வசநாபித் தண்ணீருண்டு மாண்டாரே தம்பியர்கள்
நாமும் புசித்தோமே நல்ல விஷசலத்தை
இறவாமல் நாமு மிருப்பதென்ன காரணங்கள்
மாண்டுவிட்ட தம்பியர்கள் மன்னவர்கள் தம்முடனே
நாமும் மடிந்தாலே நல்லதென் றெண்ணுகிறேன்
கூட மடிந்தாலே குணமென்று எண்ணுகிறேன்
ஒக்க மடிந்தாலே ஒருமிக்கத் தீர்ந்துவிடும்
கதியைத் தொலைக்கலாம் காவேரி நீந்திடலாம்
விதியைத் தொலைக்கவல்லோ வேறு வகையறியோம்
என்னசெய்வோ மென்றுசொல்லி ஏங்கிப் புலம்புகிறார்

## தருமர் மனதறிய எம்பெருமாள் ஓட்டனுகவும் ஏமன் ஓட்டச்சியாகவும்வந்து பிணத்தைபிழுக்கிறது.

ஏமனும் பெருமாளும் இருவரு மாகவேதாம்
தருமர் நினைவறிய சாமி வடிவெடுத்தார்
எம்பெருமாள் மேகவண்ண ரென்ன வடிவானுர்
இருவரு மாகவே இவர்களண்டை ஓடிவந்து
தருமரைத் தாம்பார்த்துச் சாமி யவருரைப்பார்
ஆரையா யிங்கே அழுது புரள்கிறது
இந்தக் குளத்திலே எவர்தாக முண்டாலும்
வசநாபித் தண்ணீரில் மாண்டு மடிந்தாலும்
எங்களை யல்லாமல் எவரும் எடுக்கார்கள்
எடுத்துப் புதைக்கிறது எங்களுத் தாரமையா
நாங்க ளெடுக்கும்படி ராஜாவின் கட்டளைகாண்
என்றுமே எம்பெருமாள் இழுக்கின்ருர் வீமனையும்
இளவிஜய னர்ச்சுனனை இழுக்கின்ருள் ஓட்டச்சியும்

## எம்பெருமாளும் ஏமனும் சவத்தை யெடுத்துக்கொண்டு போக தருமராசர் பரிதாபப்பட்டு தம் சவத்தை வாங்குகிறது.

சவத்தை யவரிழுக்கத் தரும ரவர்பார்த்து
கண்டாரே தருமரவர் கடுகி வயிறெரிந்து
பார்த்து மனங்கலங்கிப் பதைத்துப் புலம்பியவர்
ஓட்டர்க ளருகில்வந்து உத்தமரு மேதுசொல்வார்
ஆரையா ஓட்டர்களே ஐயாவே நீர்கேளும்
அண்ணன்தம்பி நாங்களிங்கே அருகாக வந்திருக்க
தமைய னெனநானும் தனதாக வந்திருக்க
பூமி தனைவெட்டிப் புதைக்கும் வயணமென்ன
எங்கள் பிணத்தைநீங்கள் இழுக்காதீர் விட்டுவிடும்
தரையி லிழுக்காதீர் தர்மமாய்ப் போகுதையா
பூமியி லிழுக்காதீர் புண்ணியமாய்ப் போகுதையா
கோடி சரணமையா கும்பிடுவேன் விட்டுவிடும்

ஆயிரஞ் சரணங்காண் அடிபணிந்தேன் விட்டுவிடும்
மூவா யிரஞ்சரணம் முடிசாய்த்தேன் விட்டுவிடும்
என்று வருந்தினுரே இயலான தருமலிங்கம்
ஏமனும் மாயவரும் இருவருந் தாம்பார்த்து
பெருமாள் மனமிரங்கிப் பிரிய முடனுக
வீமனைத் தாழவிட்டார் வேந்தர் பெருமாளும்
தக்க புகழுடைய தருமரவ ரோடிவந்து
வீமனை எடுத்துவந்து மெத்தெனவே தாம்வளர்த்தி
வீம ரருகாக வேந்தரும் வீற்றிருந்தார்
தோரா வடிவழகி துரோபதையா ளோடிவந்து
ஓட்டச்சி பாதத்திலே உத்தமியாள் தான்விழுந்து
தாயேநீ ஓட்டச்சியுன் தருமமாய்ப் போகுதம்மா
(என்னை) மாலையிட்ட மன்மதண்டி வலியாதே பூமியிலே
(இந்த) வையகத்தை யாண்டவரை வலியாதே தாயாரே
பூமியை யாண்டவர்கள் புரட்டாதே மாதாவே
அங்கம் பொறுக்கவில்லை ஆய்ச்சிநீ வலியாதே
ஆயிரந் தெண்டமம்மா அடிபணிந்தே னுன்தனக்கு
மூவா யிரஞ்சரணம் முடிவணங்கித் தெண்டனிட்டேன்
கோடி சரணமம்மா கும்பிட்டேன் விட்டுவிடும்
என்று வருந்தினுளே இளங்கொடியாள் துரோபதையும்
ஏமனும் பெருமாளும் இருவருந் தாம்கேட்டு
பரிதாபம் தாளாமல் பார்த்தனை விட்டார்கள்
தோரா வடிவழகி துரோபதையு மோடிவந்து
இளங்கொடியா ளர்ச்சுனரை எடுத்து வளர்த்திடவே
ஓட்டனும் ஓட்டச்சியும் உத்தார மென்னசொல்வார்
எடுத்துப் புதையுமென்று ஏகி நடந்தார்கள்
தோரா வடிவழகி துரோபதையு மேதுசொல்வாள்
இன்றெல்லா மிங்கிருந்து ஏங்கி யழுதாலும்
நம்மாலே யாகிறது ராஜாவே யொன்றுமில்லை
மாயன் பெருமாளை மனதில் நினைத்தழுதால்
வருந்தி யழைத்தாலே வருவார்கா ணெம்பெருமாள்
மாயன்வந்த பிற்பாடு வயணந் தெரியுமென்முள்

## தருமராஜர் தன் தம்பிமார் பிழைப்பதற்காக எம் பெருமாளை நினைத்துப் புலம்புகிறது.

சாயாம்பு மன்னவரும் தருமரவ ரென்னசொல்வார்
அடியளந்த மாயவரே ஆதிமூலம் வாருமென்றார்
எல்லை யளந்தசாமி எம்பெருமாள் மேகவண்ணா
கல்லான அகலிகையை நல்லபெண் ணாக்கிவைத்தாய்
மூலமென் னுங் குஞ்சரத்தைக் காத்த முகில்வண்ணா
ஆலிலைமேற் பள்ளிகொண்ட அரிராமா வாருமையா
மச்ச வடிவுகொண்ட அச்சுதரே யிச்சகத்தில்
கூர்ம வடிவுகொண்டு பாதாளம் போய்வந்தீர்
சிங்கமா யிரணியனைப் பங்கஞ்செய்து மார்பிளந்தீர்
இராமர் வடிவுகொண்டு இராவணனைச் சங்கரித்தீர்
அரக்குமா மாளிகையில் ஐவரையுங் காத்தீரே
அம்பலத்தில் துரோபதைக்கு அட்சயத் துகில்கொடுத்தீர்
மண்டலங்கள் தாமறிய மாளாத் துகில்கொடுத்தீர்
பகையாளி வாசலிலே பக்ஷம்வைத்துக் காத்தீரே
எதிராளி முன்னாலே எங்களைக் காத்தீரே
உம்மகிமை யாரறிவார் உம்பர்பிரான் தானறிவார்
நீரே துணையல்லால் வேறு துணையுமில்லை
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
பார்த்த முகங்களெல்லாம் வேற்றுமுகங் காணுகுது
கண்ட முகங்களெல்லாம் கடுத்தமுக மாகுதையா
ஏழை யழுதகண்ணீர் கூரியவாள் தைக்கிலையோ
என்று புலம்புகிறார் இயலான தருமரவர்
தரும ருடனாகத் தவிக்கிறாள் துரோபதையும்
கூடப் புலம்புகிறாள் கொம்பனையாள் துரோபதையும்
இப்படி யாக இருக்கின்ற வேளையிலே

## தருமருந் துரோபதையும் வருந்துகிறதை ஏமனும் பெருமாளுங்கேட்டு சந்தோஷப்பட்டு இவர்களிடத்துக்கு இருவரும் வருகிறது.

ஏமனும் மாயவரும் இருவருந் தாம்கேட்டு
சந்தோஷப் பட்டாரே சாமி பெருமாளும்
ஏமன் கடாமேலே எம்பெருமாள் கருடன்மேலே
இருவரு மாகவே எழுந்தருளி வந்தார்கள்
தரும ரிடத்திலே இருவரும் வந்துநின்றூர்
தருமருந் துரோபதையும் சாமியைக் கண்டவுடன்
சரண மடைந்தாரே சாமி பெருமாளை
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டார்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டார்
இருவரையுந் தெண்டனிட்டார் இட்டார்சிம் மாதனங்கள்
சிம்மா தனம்போட்டு ஸ்ரீ ராமர் வீற்றிருந்தார்
இருமிரு மென்றுசொல்லி யிருவரையுந் தெண்டனிட்டார்
ஏமனும் மாயவரும் இருந்தார்சிங் காதனத்தில்
வண்ணச்சிங் காதனத்தில் வந்திருந்தா ரிருவருமாய்
அடியளந்த மாயவரும் ஆண்டவரு மென்னசொல்வார்
மாயன் பெருமாளும் வார்த்தைக ளேதுசொல்வார்
என்ன வகையாக எனையழைத்தீர் தருமலிங்கம்
அழுது புலம்புவதேன் ஆயாச மாகவேதான்
என்ன புதுமையதை எனக்கறியச் சொல்லுமென்றூர்
அப்போது தருமலிங்கம் ஆயருக் கேதுசொல்வார்
சாயாம்பு மன்னவனூர் தரும ரெடுத்துரைப்பார்
மான்பிடிக்க வந்தவர்கள் மாயவரே தம்பியர்கள்
தாமரைப் பொய்கையிலே தண்ணீர் குடித்தார்கள்
விஷநீரைத் தாம்குடித்து வேந்தர் மடிந்தார்கள்
செத்து மடிந்தார்கள் சிவலோகஞ் சேர்ந்தார்கள்
மாண்டு மடிந்தார்கள் வைகுந்தஞ் சேர்ந்தார்கள்
தம்பியரைத் தேடிக்கொண்டு தையலரும் நானும்வந்தோம்
அழுது புலம்பிவந்து அன்னவரைக் கண்டோமே

திட்டி யெழுப்பினேன் செத்து மடிந்திருந்தார்
பார்த்து வயிறெரிந்து பதைத்துப் புலம்பினோம்
கண்டு வயிறெரிந்து கார்வண்ணு புலம்புகையில்
எவனே தெரியாது இராக்ஷதன்போல் ஒட்டனவன்
ஆரோ தெரியாது ஆங்கார முள்ளஒட்டன்
ஒட்டன் மனேவியாள் ஒட்டச்சி கூடவந்தாள்
இந்த வனத்திலே எவரெவர் மாண்டாலும்
எடுத்துப் புதைக்கிறது இங்கவர்க் குத்தரவாம்
வீம னருச்சுனரை வெகுதூரம் கொண்டுபோனர்
தம்பிமா ரிருவரையுந் தாணிழுத்துப் போனர்கள்
கண்டு மனம்பதைத்துக் கதறிப் புலம்பினோம்
பார்த்துமனந் தாளாமல் பற்றி வயிறெரிந்தோம்
பாதத்தின் மேல்விழுந்து பத்துலக்ஷம் தெண்டனிட்டோம்
விட்டுவிடச் சொல்லியே வெகுகோடி தெண்டனிட்டோம்
எங்கள் பரிதாபம் பார்த்து மனமிரங்கி
எடுத்துப் புதையுமென்று இந்தவழி தாம்நடந்தார்
(அவர்கள்) போன பிற்பாடு ஆண்டவனே யுனேநினேத்தேன்
தம்பியரை விட்டுத் தரிக்கமனம் கூடவில்லே
என்செய்வே னென்றுதா மேங்கிப் புலம்புகிருர்
தருமர் புலம்புவதை சாமி யவர்பார்த்து
மாயன் பெருமாளும் வார்த்தையங் கேதுசொல்வார்
தருமர் முகம்பார்த்து சாமியு மேதுசொல்வார்
என்னசெய்வோம் தருமலிங்கம் எழுத்துப்படி இவ்வளவு
அன்றெழுதுங் கர்த்தனவன் அழித்தெழுதப் போறதில்லே
கதியைத் தொலேக்கலாங் காவேரி நீந்திடலாம்
விதியைத் தொலேப்பதற்கு வெல்ல வகையறியோம்
பிரம னெழுத்திற்குப் பிசகுகள் வாராதே
மாண்டார் பிழைத்தாலே வையகங்கள் கொள்ளுமோ
செத்தார் பிழைத்தாலே செகமெல்லாங் கொள்ளுமோ
அழுது புலம்பியே ஆயாசப் பட்டாலும்
ஆண்டாண்டு தோறுநாம் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரென்று மனதில் நினேயாதே

செத்தார் வருவரென்று சித்தத்தி லெண்ணுதே
தம்பியரை நீரெடுத்துத் தகனங்கள் செய்யுமென்ருர்
இவ்வயண மாகவே எம்பெருமாள் சொல்லவுமே
தருமர் மனமறிய சாமி யுரைக்கவுமே

### எம்பெருமாள் சேத்தவரைத் தகனஞ்சேய்யுமேன்று தருமர் மனமறியச் சோன்னர்; அதுகேட்டுத் தருமரும் துரோபதையும் புலம்பி சுவா மியை மடிப்பிச்சை கேட்டல்.

எம்பெருமாள் மாயவரும் இப்படித் தாமுரைக்க
சாமி யுரைகேட்டுத் தருமர் மிகத்தளர்ந்து
சிந்தை கலங்கியவர் திடுக்கிட்டு மெய்மறந்து
மெத்த மனதுநொந்து வேந்தர் புலம்புகிருர்
அடித்த மயில்போலே அழுது புலம்புகிருர்
பச்சைப் புழுவெடுத்துப் பருநெருப்பிற் போட்டாற்போல்
துடித்த புழுப்போலே துள்ளிப் புலம்புகிருர்
உன்னேயே நம்பிநான் உயிர்கொண் டுலாவுகிறேன்
நம்பி யிருந்தவென்னே நட்டாற்றில் விட்டுவிட்டாய்
இப்படிநீர் கைவிட்டால் எப்படிக்கு நான்பிழைப்பேன்
ஆற்றங் கரையிலுள்ள ஆலமரம் போலானேம்
குளத்தங் கரையிலுள்ள கோடாலிக் காம்பானேம்
நட்டாற்றி லேமுளேத்த நாணலுங் கோரையானேம்
உள்ளங்கை நெல்லிக்கனி உருக்குலேந்து போனேமே
தோளில் செபமாலே தொண்டறுந்து போனேமே
கையில் செபமாலே கனங்குலேந்து போனேமே
இனியிந்த பூமியிலே இருக்கவுநா னுகாது
என்னேயுங் கொன்றுவிட்டு எம்பெருமாள் தகனஞ்செய்யும்
நால்வ ருடனுக நம்மைத் தகனஞ்செய்யும்
என்று புலம்பினர் இயலான தருமலிங்கம்
துகில்வளர்ந்த பத்தினியும் துரோபதை யேதுசொல்வாள்
தமய னருகில்வந்து தையலரு மேதுசொல்வாள்
அண்ண ருகேவந்து அழுது புலம்புகிருள்

மங்கிலியப் பிச்சையது மாயவரே தாரீரோ
முன்தானைப் பிச்சையது முகுந்தரே தாரீரோ
என்றுமடி யேந்தினாள் இளங்கொடியாள் துரோபதையும்

## தருமரும் துரோபதையும் புலம்புவதை எம்பெருமாள் பார்த்து மனமிரங்கி, அங்கிருந்தபடியே வேறே யொரு ஜோகியாகவந்து நால்வரையும் எழுப்புகிறது.

தருமருந் துரோபதையும் தாமழுவதைப் பார்த்து
கரியமால் மனமகிழ்ந்து கடுக நினைவுகொண்டு
இவர்களுக்கு முன்னாலே இருந்தாரே மாயவரும்
எம்பெருமாள் மாயவரும் என்ன வடிவெடுத்தார்
வேறே யுருவமாக விஷ்ணு வடிவெடுத்தார்
மலையாள ஜோகியைப்போல் வாறாரே மாயவரும்
கைதனிலே மருந்துப்பையுங் காவி யுடுப்புகளும்
தோளிலே சோளியுடன் தொங்குகிற தாடிகளும்
கையில் செபமாலை கமண்டலந் தன்னுடனே
தொண்ணூறும் பத்துஞ்சென்ற துவண்ட கிழவனைப்போல்
நானூறும் பத்துஞ்சென்ற நரைத்த கிழவனைப்போல்
தோலும் நரம்புகளுந் தொங்குது கிழவனுக்கு
முள்ளு தடுத்தாலே முப்பதிடம் விழுந்திடுவான்
தள்ளாடித் தத்தளித்துத் தடிக்கோலை யூன்றிகொண்டு
பஞ்சா க்ஷரமோதி பாதை வழியாக
சிவசிவா வென்றுசொல்லிச் சீக்கிரமாய் வாறாரே
அரகரா வென்றுசொல்லி அவசரமாய் வாறாரே
அத்தி புரந்தனக்குச் சுத்திபோறே னிவ்வழியாய்
ஆரோ இரண்டுபேர்கள் அழுது புலம்பினார்கள்
ஏதுக் கழுதார்கள் என்றறிய ஓடிவந்தேன்
அழுத வயணமென்ன ஐயாவே சொல்லுமென்றார்
புலம்பி யழுவதென்ன புதுமைகளைச் சொல்லுமென்றார்
அப்போது தருமலிங்கம் ஆணழக ரேதுசொல்வார்
அழுதகண்ணுஞ் சிந்தையுமா யப்போ தெடுத்துரைப்பார்

மான்பிடிக்க வந்தவர்கள் வனத்திலே தம்பியர்கள்
வசநாபி நீருண்டு மாண்டாரே தம்பியர்கள்
விஷநீரைத் தாம்புசித்து வேந்தர் மடிந்தார்கள்
செத்து மடிந்தார்கள் சிவலோகஞ் சேர்ந்தார்கள்
மாண்டு மடிந்தார்கள் வைகுந்தஞ் சேர்ந்தார்கள்
ஒப்பிட்ட வாளதனை உறையுருவி விட்டாற்போல்
தப்பிப் பிழையாமல் சதிசெய்து மாண்டுவிட்டார்
என்றுசொல்லித் தருமலிங்கம் ஏங்கிப் புலம்புகிறார்
மாய வடிவெடுத்த மலைஜோகி யேதுசொல்வார்
இறந்ததொரு நால்வருமே என்னவேணு முன்தனக்கு
மாண்டதொரு மன்னவர்கள் மன்னவருக் கென்னவேணும்
உண்மையாய்ச் சொல்லுமென்றே உத்தமரைக் கேட்கலுமே
தக்க புகழுடைய தரும ரெடுத்துரைப்பார்
இறந்தவர் நாலுபேரும் என்தனக்குத் தம்பியர்கள்
மயிலனையாள் துரோபதைக்கு மாலையிட்ட மன்னவர்கள்
எங்களைத் தனியாக்கி இறந்து மடிந்தார்கள்
என்றே அவருரைத்து ஏங்கிப் புலம்புகிறார்
மாய வடிவெடுத்த மலைஜோகி யென்னசொல்வார்
இறந்தவர் நால்வரிலே எவர்வேணு முன்தனக்கு
செத்தவரி லொருவரைநான் சீக்கிரமா யெழுப்பிடுவேன்
எவர்வேணு முன்தனக்கு இப்போதே சொல்லுமென்றார்
ஆமானால் சொல்லிவிடும் அல்லவென்றால் நான்போறேன்
தக்க புகழுடைய தரும ரிதுகேட்டு
மலைச்சோகி சொன்னதற்கு மன்ன ரெடுத்துரைப்பார்
ஐயாவே நீர்கேளும் அடியே னொருவார்த்தை
என்தாயார் குந்தியம்மாள் ஈன்றெடுத்த மூவர்களில்
இருவ ரிறந்தார்கள் இருக்கிறே னொருவன்
மறுதாயார் மைந்தர்களில் நகுலனை யெழுப்புமென்றார்
தக்க புகழுடைய தரும ருரைத்தலுமே
மாயமாய் வந்ததொரு மலைஜோகி தான்கேட்டு
தருமர் நினைவறிந்து சந்தோஷப் பட்டாரே
சந்தோஷப் பட்டதனால் சரீரம் மிகவளர்ந்து

தேகங் குளிர்ந்ததனுல் திருத்தோளும் பூட்டுவிட்டு
உண்ணுமல் மிகவளர்ந்து உடம்பெல்லாம் பூட்டுவிட்டு
கரியமால் உளமகிழ்ந்து காலனை யெச்சரித்து
நால்வ ருயிரையுமே நமனுரே விட்டிடென்ருர்

### விஷநீர் குடித்து இறந்துபோன நால்வரும் பெருமாளால் எழுந்திருத்தல்.

எம்பெருமாள் தானுரைக்க யேம னவர்கேட்டு
அப்படியே நல்லதென்று அந்த யெமனுரும்
பிடித்த வுயிரைவிட்டுப் போத வெழுந்திரென்ருர்
தூங்கி விழித்தாற்போற் பாங்கா யெழுந்தார்கள்
துள்ளியெழுந்தாரே துரைகளந்த நால்வருமே
மாயன் பெருமாளை வணங்கியே தெண்டனிட்டார்
வந்து பணிந்தவரைக் கண்டு மனமகிழ்ந்து
வாழ்த்தி யெடுத்தவரும் மாரோடே கொண்டணைத்து
சந்தோஷ மாகியவர் தாமிருந்தார் பெருமாளும்
தக்க புகழுடைய தரும ரடிபணிந்து
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டார்
தக்க புகழுடைய தரும ரெடுத்தணைத்து
வாழ்வீர் வளர்ந்திடுவீர் வாழ்ந்திருப்பீ ரென்னுடனே
நிற்பீர் நிலைதரிப்பீர் நீடூழி வாழ்ந்திடுவீர்
கல்பதித்த தூணதுபோல் கலங்காமல் வாழ்ந்திடுவீர்
என்னைப் பொருவீர்கள் எதிர்த்தார் முடியரிவீர்
மைந்தர்களைப் பெற்றெடுத்து மகிழ்ச்சியாய் வாழ்ந்திடுவீர்
போருக்குப் போயிடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டங் கட்டிடுவீர்
மூங்கில்போ லெந்நாளும் முசியாமல் வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்க ளென்றுசொல்லி மனங்குளிர வாழ்த்தினரே
இருமிரு மென்றுசொன்னுர் இனிதாகத் தம்பியரை
அண்ண ருரையாலே அனைவோரும் வீற்றிருந்தார்
மாய ருரையாலே மகிழ்ச்சியாய் வீற்றிருந்தார்
தம்பியரைக் கண்டலவோ சந்தோஷப் பட்டாரே

தோலா வடிவழகி துரோபதையுந் தான்பார்த்து
புருஷர் களைப்பார்த்து பூரித்தா ளுத்தமியும்
கணவரைக் கண்டலவோ கட்டழகி மனங்குளிர்ந்து
இப்படி யாகவேதாம் இவரிருக்கும் வேளையிலே

## எம்பெருமாள் துரியோதனன் சூதும், காளமகாரிஷி செய்த யாகமும், வேதாளம் வரவும் தான் இவர்களைக் காப்பாற்றினதும், பஞ்சவர்களுக்குச் சொல்லுதல்.

மாயன் பெருமாளும் வார்த்தையங் கேதுசொல்வார்
திரியோ திரன்செய்த சேதியெல்லாம் சொல்லலுற்றூர்
காள மகாரிஷியைக் கடுகி வருந்தியவன்
கொல்ல அனுப்பினனே கொப்பெனவே உங்களைத்தான்
காள மகாரிஷியுங் கடுகி வனந்தனிலே
அக்கினிக் குழியருகே அனந்த தபசுபண்ணி
வேதாள முண்டுபண்ணி வேந்த ருமைக்கொல்ல
நாமிருந்த படியாலே நமனை யழைத்துவந்தோம்
தாமரைப் பொய்கையொன்று தண்ணீரு முண்டுபண்ணி
மானுக வந்தலவோ வரவழைத்தே னுங்களைத்தான்
அந்தரமாய் நான்பேசி அனைவரையுங் கொன்றுவிட்டு
ஓட்டனைப் போலவந்து உங்களை வலித்திழுத்தேன்
அநீதமாய்ப் போகாமல் அனைவரையுங் காக்கவந்தேன்
என்ன பலன்கண்டேன் இராசாவே உங்களாலே
மாய னுரைகேட்டு வளம்பெரிய தருமராயர்
பாதத்திலேவிழுந்து பணிந்து முறையு மிட்டார்
உம்மையன்றி வேறுதெய்வம் ஒருவரெனக் கில்லையையா
உம்மைச் சதமென்று உயிர்கொண் டுலாவிவந்தேன்
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
எவரைச் சதமென்பேன் இனியாரைத் தஞ்சமென்பேன்
நீரே துணையல்லால் வேறு துணையுமில்லை
அடியாரைக் காக்கிறது ஆண்டவனே யுன்பெருமை
காக்கிறே னென்றுசொல்லிக் கங்கணங் கட்டினீரே

இரக்ஷிக்க வேண்டுமென்று எம்பெருமா ளாய்ப்பிறந்தீர்
இன்னமென்ன வினைவருமோ யானறியே னாண்டவனே
ஏதேது செய்வானோ இராசன் திரியோதிரன்
அத்தனைக்கும் வந்திருந்து அடியாரைக் காருமென்றார்
என்றல்லோ ஐவருமாய் இரங்கி யடிபணிந்தார்
மெத்த மனமகிழ்ந்தார் மேகவண்ண ரெம்பெருமாள்
சித்த மகிழ்ந்துமவர் தேகமெல்லாந் தாம்குளிர்ந்தார்
நல்லது பஞ்சவரே ராஜர்களே நீர்கேளும்
இந்த வனத்தைவிட்டு இன்ன மொருவனத்தில்
மற்று மொருவனத்தில் வாசங்கள் பண்ணுமென்றார்
என்னவினை வந்தாலும் என்னை நினையுமென்றார்
போய்வாரு மென்றுசொல்லிப் பெருமாள் பயணமிட்டார்
ஏமன் கடாவின்மேல் எம்பெருமாள் கருடன்மேல்
வாகனத்தின் மேலேறி வழிபிடித்துப் போறார்கள்
எமபுரந் தாம்தேடி யேமனும் போய்நடந்தார்
நாலாம்வருஷமது முடிந்தது பஞ்சவர்க்கு

நான்காவது காளமகாரிஷி வனம்

முற்றிற்று.

---

## ஐந்தாவது சயிந்தவ மகாரிஷி வனம்.

---

ஐந்தாம் வருஷம் பிறந்தது பஞ்சவர்க்கு
கூடை தலைமேலே குடிவாழ்க்கை கானகத்தில்
துத்திப் புளிக்கரணை தும்பையுடன் தூதுவளை
தின்று திரிகிறார்கள் தேசாந் தரிபோலே
சயிந்தவ ரிஷிவனத்தில் தானடந்தார் பஞ்சவர்கள்
ஓரடுக்குப் பர்ணசாலை உண்டுபண்ணு ரைவர்களும்
மூன்றடுக்குப் பர்ணசாலை முடிமன்ன ருண்டுபண்ணார்
ஐந்தடுக்குப் பர்ணசாலை ஆணழக ருண்டுபண்ணார்

ஆறடுக்குப் பர்ணசாலை ஐவர்களு முண்டுபண்ணூர்
ஏழடுக்குப் பர்ணசாலை எழிலாக வுண்டுபண்ணூர்
பர்ணசாலை மேலாகப் பஞ்சவர்கள் குடியிருந்தார்
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் அவ்வனத்திற் ருனிருந்தார்
அந்த வனத்திலே அநேகநாள் வாசம்பண்ணூர்
அநேகநாள் சென்றபின்பு ஆரணங்கு துரோபதையும்
அந்தவனஞ் சாரிவர ஆரணங்கு துரோபதையும்
அந்த வனத்திலே அதிசயம் பார்க்கையிலே
உச்சிதங்கள் பார்த்தே உலாவி வருகையிலே
ஆகாயந் தன்னளவாய் அங்கே யொருமரந்தான்
வளர்ந்து தழைத்து மரத்தில் பழுத்திருக்கும்
ஒண்டிப் பழந்தான் உயர்ந்தகிளை மேலிருக்கும்
சூரிய காந்தியைப்போல் தோணுது துரோபதைக்கு
மெத்தாசைப் பட்டாளே மெல்லி யிளங்கொடியாள்
கண்டாசைப் பட்டாளாங் காண்டீபன் தேவியரும்
இந்தக் கனியை எவர்பறித்துத் தான்கொடுப்பார்
தரும ருடன்சொன்னுல் தலைவரிதைக் கேளாரே
மதவீம ருக்குரைத்தால் வயிருர வுண்டிடுவார்
நகுலர் சகாதேவர் நம்மால்முடி யாதென்பார்
அர்ச்சுனர்க்குத் தானுரைத்தால் அவராலே யாகுமிது
மற்றெருருவர் தம்மாலே மாளாது கனிபறிக்க
அருச்சுனரை மெள்ள அழைத்துவரு வோமென்று
மெல்ல நடந்தாளே வேல்பொருதுங் கண்ணாளும்
கொஞ்சி நடந்தாளே கொம்பே ரிடையாளும்
அருச்சுன ராசரண்டை அன்பாக வந்துநின்று
அருச்சுனரைக் கண்காட்டி அழைத்தாளே இப்புறத்தில்
ஜாடை யறிந்தலவோ தார்வேந்த ஞேடிவந்தான்
தரும ரறியாமல் தையலரு மேதுசொல்வாள்
ஒருமனுவு எந்தனுக்கு உத்தாரந் தாருமென்ருள்
அந்த வுரைகேட்டு அருச்சுனரு மேதுசொல்வார்
மனதில் நினைத்ததெல்லாம் மயிலனையே கேளுமென்ருர்
சிந்தையி னெண்ணமெல்லாம் சீராகச் சொல்லுமென்ருர்

கேட்ட மனுவுக்குக் கிளிமொழியே தாரேனென்றான்
உரைத்தபடி யுந்தனுக்குத் தருவேன்கா ணுத்தமியே
அந்த மொழிகேட்டு ஆரணங்கு துரோபதையாள்
கொஞ்சின வார்த்தையுடன் கோபாலன் தங்கையரும்
முத்து நகையாளும் முருகுழலா ளேதுசொல்வாள்
காணாது கண்டேனையா கண்டாசைப் பட்டேனையா
பாராது பார்த்தேனையா பார்த்தாசைப் பட்டேனையா
தங்கத்தைக் காய்ச்சியே தரையிற் கவிழ்த்தாற்போல்
பொன்னை யுருக்கியல்லோ பூமியிலே விட்டதுபோல்
சூரியனைப் போலழகாய்த் தோணுது மாங்கனிகாண்
சந்திரனைப் போலழகாய்த் தானிருக்கும் மாங்கனிதான்
அந்தக்கனி யுண்பதற்கு ஆசையாய்த் தோணுகுது
மாங்கனியை யுண்பதற்கு மனதுமெத்தத் தோணுகுது
அந்தக் கனிபறித்து அருச்சுனரே தாருமென்றாள்
மாங்கனி தனைப்பறித்து மன்னவரே நீர்தாரும்
என்று வணங்கினாளே இளங்கொடியாள் பாஞ்சாலி
வணங்கி யெழுந்திருந்து மன்னனுக்கு ஏதுசொல்வாள்
தனஞ்சயரே கனிபறித்துத் தாராமற் போனக்கால்
தண்ணீர் குடியேன்காண் தாகவிடாய் தீரேன்காண்
ஆறுமாத மானாலும் அன்னம் புசியேனென்று
சொல்லிப் பிணங்கினாள் துரோபதை பாஞ்சாலி
ஆணழகுமன்னன் அருச்சுன னேதுசொல்வான்
கனிக்காக நீபிணங்க லாகுமோ கட்டழகி
இதற்காய்ப் பிணங்குவாரோ இக்ஷணமே தாறேனென்றான்
அந்தரமா யிருந்தாலும் அறுத்துநான் தாறேனென்றான்
எந்த மரத்திலே யிருக்குது பெண்ணரசே
பழங்க ளிருக்கின்ற பாரவன மெங்கேயென்றான்
என்று மவன்கேட்க இளங்கொடியா ளப்போது

## அருச்சுனன் துரோபதைக்கு மாங்கனி பறித்துக் கொடுக்க வருதல்.

வாருமையா வென்றுசொல்லி வணங்கி யெழுந்திருந்து
அழைத்து வருகிறுளே அர்ச்சுன ராசாவை
கூட்டி வருகின்றுள் கொப்பெனவே அர்ச்சுனனை
கடந்தார் சிலதூரம் கனியிருக்கும் அவ்வனத்தே
வந்தா ரிருவருமாய் மங்கை துரோபதையும்
இதுதான் மரமென்று இளங்கொடியாள் காட்டலுற்றுள்
ஆணு லழகுமன்னன் அருச்சுன ராஜதுரை
மரத்தி லிருக்குமந்த மாங்கனியைத் தான்பார்த்து
ஆயிரம்யோ சனைதூரம் அந்தரமா யிருக்கிறது
இந்தக் கனிபறிக்க எவரால் முடியுமென்று
இத்தனைத் தூரத்தி லிருக்கின்ற மாங்கனியை
எப்படிக்கு நாம்பறித்து ஈந்திடலாம் துரோபதைக்கு
என்று நினைத்து எழில்விஜய னப்பொழுது
வில்வளைத்து நாரிபூட்டி வில்லைக்கு ணத்தொனித்தான்
அம்பறுத் தூணியிலே அலகம்பு தாளெடுத்து
அர்த்தசந்திர பாணமதை அருச்சுனனு முச்சரித்தான்
மந்திரத் தூபமிட்டு வாங்கிவிட்டான் கனிமேலே
மார்புரள வாங்கியல்லோ தோள்புரள விட்டானே
வருகுது அஸ்திரந்தான் மாங்கனியைத் தள்ளுறது
மரத்திற் பழத்தையல்லோ பாண மறுக்கையிலே
அந்தக் கனிவிழுமாம் அண்டரண்டந் தானதிர
அண்டங்க ளதிர்ந்துவிழ அவனிபா தாளம்விழ
பூமி யதிர்ந்துவிழப் பூலோகந் தத்தளிக்க
எல்லை யதிர்ந்துவிழ எமலோகந் தத்தளிக்க
கெர்ப்பங் கலங்குது கெந்தருவ லோகமெல்லாம்
ஓங்கும் பெருங்கால்தான் ஒருபக்கம் நீர்வாங்கும்
நக்ஷத்தி ரங்களெல்லாம் நாலுதிக்கும் தாமுதிர
பூமியுடன் சேடன் புஜத்தோடே புஜமதிர

ஆதிசேடன் தன்னுடனும் அதிர்ந்துமே நஞ்சுகக்க
ஆகாசம் நின்றதிர அங்கேபோய் விழுந்தவுடன்
அருச்சுனனுந் துரோபதையு மக்கனியைப் பார்த்தார்கள்
பார மலைபோலே பருவதம்போல் தோணுகுது
இருவரா லாகாது இந்தக் கனியெடுக்க
இந்தக் கனியைநா மெடுத்து முடியாது
ஆணு லழகனவன் அர்ச்சுனனு மேதுசொல்வான்
தோரா வடிவழகி துரோபதை நாயகியே
வெற்றி மதயானை வீமனை யழையுமென்றான்
அப்படியே நல்லதென்றாள் ஆனந்த வாழ்மாரி

## துரோபதை வீமனை யழைக்க வீமன் வருதல்.

தோரா வடிவழகி துரோபதை நாயகியும்
அன்ன மதுபோல ஆரணங்கு வந்துமல்லோ
வெற்றி மதயானை வீம ரருகில்வந்து
அருச்சுன ராசரும்மை அழைத்தோடி வாருமென்றார்
சீக்கிரம் வாருமென்று தேன்மொழியுந் தெண்டனிட
வெற்றி மதயானை வீமனுந் தான்கேட்டு
அப்படியே நல்லதென்று ஆனந்த வாழ்மார்பன்
இருந்த இடத்தைவிட்டு எழுந்து நடந்தானே
இருவரு மாகவே ஏகி நடந்துவந்து
கனியிருக்கும் அவ்வனத்தைக் கடுகியே கண்டார்கள்
தரும ரறியாமல் அழைத்துவந்தாள் தையலரும்
வெற்றி மதயானை வீமனவ னேதுசெய்தான்
அசக்கியே பார்த்தானே அசையவில்லை அக்கனிதான்
வெற்றி மதயானை வீமனவ னேதுசொல்வான்
நகுல சகாதேவ ராசாவை அழையுமென்றான்
ஆரணங்கு துரோபதையும் அப்படியே நல்லதென்று

## துரோபதை நகுல சகாதேவர்களை அழைக்க அவர்கள் வருதல்.

கொஞ்சியே வந்தாளே கொம்பே ரிடையாளும்
நகுல சகாதேவ ராசாக் களைப்பார்த்து

அருச்சுனரும் வீமருந்தாம் அழைக்கிறு ரும்மையென்றுள்
வாருங்க ளென்றுசொல்லி வருந்தியே தெண்டனிட்டாள்
நகுல சகாதேவ ராசாக்கள் தாம்கேட்டு
அப்படியே நல்லதென்று ஆனந்த மாயெழுந்தார்
மூவர்களு மொன்றுகி முடுகிவந்தார் கானகத்தே
மாங்கனி தானிருக்கும் வனத்தில்வந்து சேர்ந்தார்கள்
நகுல சகாதேவ ராஜர்களும் வந்தாரென்று
எல்லவரு மொன்றுகி எடுப்போம் கனியையென்று
ஐந்துபே ருங்கூடி அக்கனியைத் தாமெடுத்தார்
என்ன பலங்கொண்டு இழுத்து வலித்தாலும்
எந்தவிதத் திலேயும் எடுபடலே அக்கனிதான்
சிந்தை கலங்கினுர்கள் திடுக்கிட்டு மெய்மறந்தார்
மெத்தப் பயமாச்சே வேந்தர்கள் நால்வருக்கும்
தோரா வடிவழகி துரோபதையைத் தாம்பார்த்து
அழகான தருமருக்கு அறிக்கையிடும் பெண்ணேயென்றுர்
தோரா வடிவழகி துரோபதையுந் தான்கேட்டு
ஆகட்டு மென்றுசொல்லி அப்படியே நல்லதென்று

## மாங்கனியினுல் ஐந்துபேருந் திகிலடைந்து, துரோபதை தருமரை அழைக்க வருதல்.

துள்ளி யெழுந்தாளே துரோபதை நாயகியும்
ஓடி நடந்தலவோ ஒருநொடியில் வந்தாளே
தரும ரெதிரில்வந்து சாஷ்டாங்க தெண்டனிட்டு
வாள்விஜய ரர்ச்சுனரும் மாங்கனியைத் தாமறுத்தார்
எடுத்தா லெடுபடலே யென்றுவரச் சொன்னுர்காண்
வாருமையா வென்றவளும் வருந்தியே தெண்டனிட்டாள்
தக்க புகழுடைய தரும ரதுகேட்டு
இதுஎன்ன அதிசயங்க ளென்றே யெழுந்திருந்தார்
தருமருந் துரோபதையும் இருவரும் வந்தார்கள்
மாமரத் தருகேவந்தார் மகாராஜர் தருமலிங்கம்
உற்றுற்றுப் பார்த்தவரும் யோசனை பண்ணுகிறுர்

தம்பிமார் நால்வரையும் தரும ரவாழைத்து
சாயாம்பு மன்னவனுர் தருமரங் கேதுசொல்வார்
ஆருண் ணு மாங்கனியோ அறியேனே தம்பியரே
எவருண் ணு மாங்கனியோ யேது மறியேனே
எங்தெந்தத் தேவர்கள்தாம் எடுத்துப் புசிக்கிறதோ
சத்த ருஷியவர்கள் சங்நியாசி யுண்கிறதோ
மேலுலக கெந்தருவர் சாலவந்து உண்கிறதோ
கைமோசம் வந்ததென்று கடுகியே தருமாயர்

## மாங்கனியினுல் மோசம் வந்ததென்று தருமர் எம்பெருமாளை நினைத்துத் தோத்திரம் பண்ணுதல்.

தக்க புகழுடைய தரும ரவர்பயந்து
சிந்தை கலங்கியவர் திடுக்கிட்டு மெய்மறந்து
உள்ளங் குலைந்துமல்லோ உடம்பு விடவிடத்து
மன்னர் மனஞ்சலித்து மனதிலே எண் ணுகிருர்
ஆரை நினைக்கிருர் அளவற்ற சிந்தையிலே
எவரை நினைக்கின்ருர் * எண்ணமற்ற சிந்தையிலே
மாயன் பெருமாளே மனதில் நினைத்தாரே
அண்ட முலகளந்த ஆதிமூல இங்கேவா
ஏழுலகம் ஆண்டசுவாமி எம்பெருமா ளிங்கேவா
மண்ணளந்து கணக்குச்சொன்ன மாயவரே யிங்குவா
தாடகையைக் கொன்றவொரு தயாளகுணு யிங்கேவா
அகலிகையின் சாபந்தீர்த்த ஆண்டவரே வாருமையா
எல்லை யளந்தவரே யெம்பெருமா ளிங்கேவா
ஏழை வருந்துகிறேன் எழுந்தருளி வாருமையா
இப்படி யாக யிவர்வருந்தும் வேளையிலே

---

* எண்ணம் + அற்ற + சிந்தை = மாயன் பெருமாளை எண் ணுகின்ற எண்ணம் அன்றி வேறு எண்ணம் அற்ற சிந்தை.

## தருமர் இங்கே வருந்துவதை எம்பெருமாள் அறிந்து தருமரண்டை வருதல்.

பஞ்சவர்கள் வருந்துவதைப் பாரளந்தார் தாமறிந்து
இவருக்கு மங்கேதான் அநர்த்தம் வருகுதென்று
சயிந்தவ ரிஷியாலே சாபம் வருகுதென்று
ஆய ரவரறிந்து அங்கெனவே தாமெழுந்து
இவரையுங் காக்கவென்று அப்பொழுதே வாராராம்
வட்டமாங் கருடனேறி மாயவனூர் வாராரே
வனமா வனந்தாண்டி வாராரே தருமரண்டை
காடு செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறு சுனைதாண்டி அதிகவனந் தான்தாண்டி
சில்லென்ற காடுகளும் செடியும் வனந்தாண்டி
சயிந்தவ ரிஷிவனத்தைத் தாம்கண்டார் மாயவரும்
பஞ்சவர்கள் தாமிருக்கும் பார வனத்தில்வந்தார்
மாயவரைக் காணுகையில் வளம்பெரிய தருமரவர்
ஐந்துபேரு மாகவே ஆயரைத் தெண்டனிட்டார்
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டார்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டார்
தெண்டனிட்ட மன்னவர்கள் திரும்பி யெழுந்திருந்து
சிங்கா தனங்களிட்டார் ஸ்ரீராமர் வீற்றிருக்க
இட்டதோ ராசனத்தில் எம்பெருமாள் வீற்றிருந்தார்
பஞ்சவரைத் தாம்பார்த்துப் பாரளந்தா ரேதுசொல்வார்
ஏது வகையாக என்னை யழைத்தீர்கள்
அழைத்ததொரு காரியத்தை அடைவுடனே சொல்லுமென்றார்
உங்கள்-மனதி லிருக்கின்ற மருமத்தைச் சொல்லுமென்றார்

## தருமர் மாங்கனியின் வரலாறு சொல்லுதல்.

மாயன் பெருமாளும் வார்த்தைகள் சொல்லுமென்றார்
சாயாம்பு மன்னவனூர் தருமரவ ரேதுசொல்வார்
ஆகாத தம்பிமா ரரச ருடன்பிறந்தேன்

பொல்லாத தம்பியரோ டல்லற் படப்பிறந்தேன்
என்தன் விதிவசத்தை என்னவென்று சொல்லுவேனுன்
ஆருண்ணு மாங்கனியோ அறியேனே மாயவரே
எவருண்ணு மாங்கனியோ ஏது மறியேனே
ஆகாத தம்பியர்கள் அறுத்துவிட்டா ரென்னசெய்வேன்
எம்பெருமாள் தமையழைத்தா லெல்லாந் தெரியுமென்று
உம்மை நினைத்தோமே உலகளந்த மாயவரே
வந்தீரே மாயவரே வயணங்கள் சொல்லுமென்றார்

## எம்பெருமாள் மாங்கனியின் வரலாறுகேட்ட பஞ்சவர்களைப் பயங்காட்டி மனஞ் சோதித்தல்.

தரும ருரைகேட்டு சாமியவ ரேதுசொல்வார்
மாயன் பெருமாளும் வார்த்தையங் கேதுசொல்வார்
கைமோசம் வந்ததுவே கட்டழகா யென்னசெய்வோம்
தபசிற் பெரியவர்காண் சயிந்தவ ரிஷியாரும்
வாத்திற் பெரியவர்காண் மகாதேவர்க் கொப்பிடலாம்
யோகத்திற் பெரியவர்காண் உற்றசந் யாசியர்காண்
ஒருநூறு வருஷமட்டும் யோகத்தி லேயிருப்பார்
அவ்வருஷம் சென்றபின்பு அறுத்திடுவார் மாங்கனியை
அறுத்துப் புசித்திடுவார் அந்த மகாமுனியும்
அந்த மகாரிஷியும் இந்த வனந்தனக்கு
வருகிற நாளாச்சே மாங்கனி யறுத்தீரே
வந்து மவர்பார்த்து மாங்கனி யெங்கேயென்று
கோபித்துக் கண்சிவந்து கொல்ல நினைப்பாரே
கொல்ல நினைப்பாரே குடிகேடு வந்துவிடும்
கல்லாக மண்ணுகக் கடுகச் சபிப்பாரே
முள்ளாக மண்ணுக முன்னே சபிப்பாரே
இந்நாள் பிழைத்திருந்து இறந்துவிட நாளாச்சே
சேனைநாள் பிழைத்திருந்து செத்துவிட நாளாச்சே
திரியன்செய் வஞ்சனைக்குச் சீவன்தப்பிப் பிழைத்தீரே

மாபாவி செய்ததற்கு மாளாம லிருந்தீர்கள்
இந்த வனத்தினிலே இறந்துவிடக் காலமோதான்
சயிந்தவ ரிஷியாலே சாவுவர நாளாச்சே
இதற்கோ வென்னையழைத்தீர் என்றூரே மாயவனுர்

## எம்பெருமாள் கனியின் வரலாறுகூறித் தம்மாலே ஒன்றும் ஆகாதென்று சொல்லத் தருமர் புலம்புதல்.

இப்படி யாகவேதான் செப்பத் திருமாலும்
இவ்வார்த்தை கேட்டாரே எழிலான தருமலிங்கம்
முகில்வண்ணர் முன்னுலே முறையிடத் தொடங்கியவர்
ஆகாத தம்பியர்கள் அசட ருடன்பிறந்தேன்
பொல்லாத துஷ்டருடன் பிறந்ததொரு தன்மையினுல்
என்-அங்கங் குலேகிறதே ஆண்டவரே யென்னசெய்வேன்
என்னே யறியாம லிக்கனியைத் தாமறுத்தார்
அறிந்தேனே யாமாகுல் அறுக்கவொட்டே னிக்கனியை
பார்த்தேனே யாமாகுல் பறிக்கவொட்டேன் மாங்கனியை
அறியார்கள் செய்தபிழை ஆண்டவரே மனம்பொறுத்து
தெரியாதார் செய்தகுற்றம் தேவரீர் மனம்பொறுத்து
உம்-உள்ளங்கை நெல்லிப்பழம் உருக்குலேந்து போகாமல்
உம்-பெட்டியின் பூஷணங்கள் பெருமை குலேயாமல்
உம்-தோளில் துளசிமாலே தொண்டழிந்து போகாமல்
உம்-கையில் செபமாலே கனங்குலேந்து போகாமல்
காக்கக் கடனுமக்குக் கரியமா லெம்பெருமாள்
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
எவரைச் சதமென்பேன் இனியாரைத் தஞ்சமென்பேன்
என்று தருமரங்கே நின்று புலம்பக்கேட்டு
மாயன் பெருமாளும் மறுவார்த்தை யேதுசொல்வார்
என்னே வெறுக்காதீர் என்மேல் சலியாதீர்
உத்தமரே வுங்களாலே மெத்தப் பொழுதாச்சு
ஏகச் செலவருளும் என்றூர் பெருமாளும்



உற்றது சொன்னல் அற்றது பொருந்தும் என்று கிருஷ்ணன் உரைத்தல்.

தக்கபுக ழுடைய தருமாவ ரேதுசொல்வார்
பரிதாபம் நாங்கள்படப் பார்த்துமே போவதற்கு
மனமும் வருகிறதோ மாயவரே வுந்தமக்கு
என்ற வுரைகேட்டு ஏதுசொல்வார் மாயவரும்
புகழ்வேந்தர் வார்த்தையினால் பொருந்தவேணு மிக்கனிதான்
[1] ஐவருட வார்த்தையினால் அம்மரத்தி லொட்டவேணும்
அல்லாதே யாமானால் ஆராலு முடியாது
என்ற வுரைகேட்டு ஏதுசொல்வார் தருமாயர்
அடியேனு லாவதெது ஆண்டவரே சொல்லுமையா

### எம்பெருமாள் ஐவருடைய எண்ணமும் துரோபதை எண்ணமும் அறிந்ததனால் மாங்கனி மரத்தில் பொருந்துதல். தருமர் மனோபாவம்சொல்ல மாங்கனி இருநூறு யோசனைதூரம் எழும்பி நிற்றல்.

தரும ருரைகேட்டு சாமி மனமகிழ்ந்து
மாயன் பெருமாளும் வார்த்தையவ ரேதுசொல்வார்
ஐவர் மனதறிய ஆண்டவ ரேதுசொல்வார்
தக்க புகழ்பெரிய தருமரே நீர்கேளும்
உம்-மனதிலே தானிருக்கும் மர்மத்தைச் சொன்னீரானால்
வஞ்சனைக ளெண்ணாதே மனக்கவலை வையாதே
உண்டான படியாக உரைத்தீரே யாமாகில்
அன்று விழுந்தகனி அம்மரத்தி லொட்டுமென்றார்
மண்மேல் விழுந்தகனி மரத்தின்மே லேறுமென்றார்
அல்லாதே யாமானால் அக்கனி பொருந்தாது
இல்லாதே யாமானால் இறந்து மடிவீர்கள்
சொல்லாதே போனாலே சுறுக்காய் மடிந்திடுவீர்
என்று-பெருமா ளவர்சொல்லப் பேர்பெரிய தருமலிங்கம்
மாய ருரைகேட்டு மகாராச ரேதுசொல்வார்

---

1. ஐவருட = ஐவருடைய.

மனதி லிருக்கின்ற மர்மத்தை யேதுசொல்வார்
தன்மனதி லுள்ளபடி தார்வேந்த ரேதுசொல்வார்
பெரியதந்தை பெற்றெடுத்த பிள்ளை திரி யோதிரன்
தம்பிமார் தம்முடனே தானுஞ் சுகமானால்
ராச்சியம் நலமாகி நாமும் சுகமானால்
நாடெங்கும் வாழ்ந்திருந்தால் கேடொன்று மில்லையென்று
பெரியோ ருரைப்படிக்குப் பூமி சுமக்காதோ
என்று நினைவொழிய இனியொன்று நானறியேன்
இப்படிக்குத் தாமுரைத்து இருந்தாரே தருமலிங்கம்
அப்போது மாங்கனியும் அந்தரத்தி லெழும்புறது
அறுந்து விழுந்தகனி ஆகாச மேலெழும்பி
இருநூறு யோசனைகள் எழும்பியே நின்றதங்கே

## மாயனுக்கு வீமன் மனோபாவஞ் சொல்ல மாங்கனி நானூறு யோசனை தூரமெழும்பி நிற்றல்.

எம்பெருமாள் மாயவரும் ஏதுசொல்வா ரப்போது
மதவீ மனையழைத்து மாயவனு ரேதுசொல்வார்
உன்மனதி லுள்ளபடி யுரையென்றார் மாயவரும்
வெற்றி மதயானை வீமனவ னேதுசொல்வான்
திரியோ திராசன் சேனை பரிகலங்கள்
குருடன் மகனாரங் குடிகெடுத்த ராசர்களை
நூலார் கடுந்திரளார் நூற்றொரு ராசர்களை
கௌரவர் சேனைகளைக் கண்டதுண்ட மாக்கியல்லோ
ஆனை குதிரைகளை அழகுள்ள சேனைகளை
சாமத் துரோகியாம் சகுனி யவனையுமே
கொன்று அதமாக்கிக் கொம்பனையாள் துரோபதையை
கொந்தார் குழலியவள் கூந்தல் முடிக்கவைப்பேன்
துகிலை யுரிந்தவொரு [1] துற்சாத னுதிரமெல்லாம்
வாரிக் குடித்தாலே வயிறெரிவு தீருமையா

---

[1] துற்சாதன் = துற்சாதனன்.

அள்ளிக் குடித்தாலே அங்கந் தரிக்குமையா
பார்பெரிய அண்ணனுக்குப் பட்டந் தரித்தாலே
அப்போது என்மனது ஆயாசந் தீருமையா
என்று-வெற்றி மதயானை வீம னுரைத்தானே
உரைத்த பொழுதே எழும்புது மாங்கனிதான்
சாற்றும்நா னூறுயோ சனைதூரம் நின்றிடுமாம்

## மாயனுக்கு அருச்சுனன் மனோபாவஞ் சொல்ல மாங்கனி அறுநூறு யோசனைதூரம் எழும்பி நிற்றல்.

அப்போது எம்பெருமாள் அங்ஙனே ஏதுசெய்தார்
அருச்சு னனைப்பார்த்து மனதில் நினைத்ததெல்லாம்
வாள்விஜயா [1] உன்தனுட மனதில் நினைத்ததெல்லாம்
ஒன்று மொளியாமல் உரையென்றார் மாயவனார்
என்று மவருரைக்க எழில்விஜய னர்ச்சுனனும்
மாய னுரைகேட்டு வாள்விஜய னேதுசொல்வான்
கர்ணன் சகுனியுடன் காங்கேய ரானவரை
கொல்லுகிறே னென்றுசொல்லி கொடிய சபதமிட்டேன்
சங்கமரைக் கொல்லுகையில் சமர்பூமி க்ஷேத்திரத்தில்
அதிரதர் சமரதர்கள் அளவற்ற ராணுவங்கள்
அனைவரையுங் கொன்றபின்பு அண்ணனுக்குப் பட்டங்கட்டி
அண்ணனுக்குப் பட்டங்கட்டி அடிபணிந்து நிற்கவென்று
எண்ணி யிருக்கின்றேன் இனியொன்று மில்லையென்றான்
அறுநூறு யோசனையில் நின்றது அக்கனிதான்

## மாயனுக்கு நகுலன் மனோபாவஞ் சொல்ல மாங்கனி எண்ணூறு யோசனைதூரம் எழும்பி நிற்றல்.

அப்போது எம்பெருமாள் அங்ஙனே ஏதுசெய்தார்
நகுலனைத் தாமழைத்து நாரணரு மேதுசொல்வார்
நாம முடியானே நகுலனே யென்றழைத்து

[1] உன்தனுட=உன்தனுடைய.

மனதில் நினைத்ததொரு மர்மத்தைச் சொல்லென்றார்
மாய ருரைகேட்டு மன்னவனு மப்பொழுது
நாம முடியுடைய நகுலனு மேதுசொல்வான்
திரியோ திரன்படைகள் சேனைகளைக் கொன்றழித்து
ஆனைசேனை பரிவாரம் அடங்கலுங் கொன்றழித்து
மாரளவு ரத்தவெள்ளம் வழியவிட்டு மண்மேலே
அதமாக்கிச் சேனைகளை அண்ணனுக்குப் பட்டங்கட்டி
என்-கண்ணாலே பார்ப்பதற்குக் கருத்தில் நினைத்தனையா
என்றே எடுத்துரைத்து இருந்தான் நகுலனுமே
அந்த வுரைகேட்டு அழகான மாங்கனியும்
எண்ணூறு யோசனையில் எழும்பியே தானிற்க

## பெருமாளுக்கு சகாதேவன் மனோபாவஞ் சொல்ல மாங்கனி தொள்ளாயிரம் யோசனை தூரமெழும்பி நிற்றல்.

எம்பெருமாள் மாயவரு மேதுசெய்தா ரப்பொழுது
சகாதேவ ராசாவை சாமியார் கேட்கலுற்றார்
இளைய சகாதேவா எண்ணமெல்லாஞ் சொல்லென்றார்
திரியோ திரன்படையைச் [1] சேனை பரிதளத்தை
உன்பாதம் சிரசில்வைத்து உக்கிரமாய்ச் சண்டைசெய்து
அண்ணனுக்குப் பட்டங்கட்டி அவனிதனை யாளவென்று
எண்ணி யிருக்கின்றேன் இதுவே நினைவொழிய
மற்றொன்று மில்லையென்று மாயர்பாதம் பணிந்தான்
இவ்வாறு தானுரைத்து இருந்தான் சகாதேவன்
அப்போது மாங்கனி அநேகதூ ரமெழும்பி
தொளாயிரம் யோசனையாம் தூரத்தில் நின்றதுவே

## எம்பெருமாளுக்கு துரோபதை மனோபாவஞ் சொல்லல்.

ஆதிநா ராயணரும் அங்ஙனே ஏதுசெய்தார்
மாயன் பெருமாளும் வார்த்தைக ளேதுசொல்வார்

---

1 சேனை + பரி + தளம் = படை = இரத கஜ துரக பதாதி.

பாஞ்சாலன் பெற்றபெண்ணே பத்தினி துரோபதையே
நெருப்பிற் பிறந்தவளே நீலப் பசுங்கிளியே
ஐவருக்குந் தேவியரே அழியாத பத்தினியே
மனதில் நினைந்ததெல்லா மங்கையே சொல்லென்றார்
நெஞ்சில் நினைந்ததெல்லாம் நேராகச் சொல்லென்றார்
அப்போ துரோபதையும் ஆரணங்கு மேதுசொல்வாள்
[1] தூரத்தி லம்புலியாள் தூசிபடாப் பத்தினியாள்
வானத்தி லம்புலியாள் மாசுபடாப் பத்தினியாள்
என்னவென்று சொல்லலுற்றாள் ஏலப் பசுங்கிளியாள்
திரியோதிரன் பாளயத்தைச் செருக்களங்கள் சென்றழித்து
ஐவர்க ளிட்டுவந்த அருஞ்சபதஞ் சென்றபின்பு
வெற்றி மதயானை [2]வீமருட கையாலே
பாம்புக் கொடிவேந்தன் பட்ட பிறகாக
தென்ன முடிவேந்தன் திரியோதிரன் பட்டபின்பு
நாகக் கொடியோனும் நாச மடைந்தாலே,
அவன்-மல்லாக்கா விழுந்தவுடன் மார்பிலே நானிருந்து
மார்பைப் பலகையாக்கி மார்பெலும்பைச் சீப்பாக்கி
மார்பில்வரு முதிரமெல்லாம் வாரித் தலைதடவி
நல்லெண்ணெ யைப்போல நலங்கிட்டுக் கூந்தலுக்கு
சீப்புசிக்கங் கோலெடுத்துச் சீவி மயிராற்றி
அவன் - குடலைப் பிடுங்கியல்லோ கொண்டைக் கயிறுகட்டி
ஈரலைப் பிச்செடுத்து இறுக்கித்தலை மயிர்முடிப்பேன்
என்-விரித்த தலைமுடிக்க மெத்தநாள் சென்றிடுமோ
அவிழ்த்த தலைமுடிக்க அநேகநாள் சென்றிடுமோ
கூந்தல் முடிப்பேனோ குறைகளெல்லாந் தீர்வேனோ
சாமி தயவாலே தலையை முடிப்பேனோ
என்று நினைத்திருந்தேன் இனியொன்று நானறியேன்
இந்த விதஞ்சொல்லி இருந்தாளே பாஞ்சாலி

---

1 தூரத்தில்+அம்புலி=தூரத்தில் சந்திரன்.

2 வீமருட=வீமருடைய.

## துரோபதை மனேபாவஞ் சொன்னது சரியல்லாமல் தொள்ளாயிரம் யோசனைதூரம் போன மாங்கனி பூமியில் விழப் பெருமாள் துரோபதையைக் காரணம் கேட்கத் துரோபதை சொல்லல்.

துரோபதை சொல்லலுமே தூர விருந்தகனி
அந்தரத்தில் நின்றகனி அவனிமேல் விழுந்ததுவே
ஆகாசம் போனகனி அற்று விழுந்ததுவே
கண்டார் கரியமாலுங் கடுகெனவே யேதுசொல்வார்
மனதில் கபடுவைத்து வஞ்சனைகள் சொன்னதினல்
அந்தரத்தில் எழுந்தகனி அவனியிலே விழுந்ததென்ருர்
ஏதே தொளித்தாயோ என்தனக்குச் சொல்லுமென்ருர்
ஒன்று மொளியாமல் உத்தமியே சொல்லுமென்ருர்

## துரோபதை மறுபடியும் பெருமாளுக்கு உண்மையைச் சொல்ல மாங்கனி மரத்தில் பொருந்துதல்.

அப்போ துரோபதையும் ஆரணங்கு ஏதுசொல்வாள்
அண்ணவே நீர்கேளும் அடியே னொருவார்த்தை
இன்ன மொருபாவம் இனியொன்றும் நானறியேன்
மற்று மொருபாவம் வஞ்சனைக ளொன்றறியேன்
ஏதொரு வஞ்சனைகள் இடறுகள் நானறியேன்
அண்ண கரியமாலே அடியே னொருவருட
வயிற்றிற் பிறந்ததில்லை வன்கொடுமை செய்ததில்லை
குடலிற் பிறந்ததில்லை குலக்கொடுமை செய்ததில்லை
ஓடுகிற தண்ணீரில் உள்ளேமணற் சேறுமுண்டு
அடிக்கிற காற்றதனில் அலைதுரும்பு தானுமுண்டு
[1] காலவிஷ முண்டவற்குக் கண்டங் கறுப்புமுண்டு
நீரிற் சுழலுமுண்டு நிலமதனிற் பூச்சியுண்டு
[2] தண்ணீர்க் கலையுமுண்டு சந்திரற்கு மாசுமுண்டு

---

[1] காலவிஷமுண்டவன் = சிவன்.
[2] தண்ணீர்க்கலை = தண்ணீர்க்கு + அலை.

சந்திரற்கு மாசுமுண்டு சற்றே கறுப்புமுண்டு
குண்டுமணிக் காணுலும் கொஞ்சங் கறுப்புமுண்டு
எனக்கு-மயிரே கறுப்பொழிய மற்ற கறுப்புமில்லே
பொட்டே கறுப்பொழிய பின்னோர் கறுப்புமில்லே
அக்கினியிற் பெண்பிறந்தேன் ஐவரையு மாலேயிட
நெருப்பிலே பெண்பிறந்தேன் அருச்சுனனை மாலேயிட
என்-கூடப் பிறந்ததொரு கோதண்ட மானவில்லு
பத்தறையில் நான்வளர்ந்தேன் பார்த்தரே வேணுமென்று
அடுக்கறையில் நான்வளர்ந்தே னர்ச்சுனரே வேணுமென்று
வளர்ந்து வயதுவந்து மாலேயிடும் நாளானேன்
போத வளர்ந்தேனே பெற்றூர் மனங்களிக்க
இப்படி யாக இருக்கின்ற வேளேயிலே
எழிலான அருச்சுனர்க்கு என்னேக்கொடுக்க வென்று
என்தகப்பன் பாஞ்சாலன் எண்ணி யிருக்கையிலே
அரக்குமா மாளிகையில் ஐவர்மடிந் தாரென்று
மாண்டார்க ளென்றுசொல்லி மண்டலத்திற் போச்சு
செத்தார்க ளென்றுசொல்லி ஜெகமெல்லாம் போச்சு
அப்போது என்தகப்பன் ஆயாசப்பட்டுருகி
அருச்சுனர்க் கென்றபெண்ணே ஆர்க்குக் கொடுத்திடுவோம்
வில்லே வளேப்பார்கள் மேதினியி லில்லேயென்று
ஏலப் பசுங்கிளியை எப்படிக் காப்போமென்று
எண்ணுது மெண்ணியே இருந்து விசாரமிட்டார்
இப்படி யாக இருக்கின்ற காலத்திலே
வந்தாரே அந்தவேளே மகாவியாச பகவானும்
என்தகப்பன் பாஞ்சாலன் எழுந்திருந்து ஓடிவந்து
கண்ட வுடனேயல்லோ கடுக வெழுந்திருந்து
துரித முடனவரைத் தோத்திரங்கள் தான்செய்து
வந்த வியாசரை வணங்கியே தெண்டனிட்டு
இருமிரு மென்றுசொல்லி யிட்டார்சிம் மாதனங்கள்
இட்டசிம் மாதனத்தில் ஏறியவர் வீற்றிருந்து

என்தகப்ப னைப்பார்த்து என்னவென்றார் உன்க்ஷேமம்
அப்போது என்தகப்பன் ஆயாச மாயுரைப்பார்
என்தன் விசேஷமெல்லாம் எடுத்து அவர்க்குரைத்து
அருச்சுனர்க் கென்றெருநான் அனலிற் பிறந்ததுவும்
அரக்குமா மாளிகையி லைவ ரிறந்ததுவும்
இத்தனையுஞ் சொல்லியங்கே இருந்தாரே என்தகப்பன்
அப்போ வியாசரவர் அரசனுட வார்த்தையெல்லாம்
செவிகொடுத்துக் கேட்டவுடன் சீக்கிரமா யேதுசொல்வார்
உத்தமியாள் தன்னுடனே ஒன்றாய்ப் பிறந்தவில்லு
கூடப் பிறந்ததொரு கோதண்ட மானவில்லு
எடுத்து நிறுத்துமென்றார் எல்லவருந் தாமறிய
பெருவில்லை வளைத்தவர்க்குப் பெண்ணைக்கொடுப் பேனென்று
தேசத்து ராஜாக்கள் சேதியைத் தாமறிய
அரசர்கள் தாமறிய அறையும் பறையோசை
அப்போ தறிந்திடலாம் ஐவருட சேதிதனை
என்று மவருரைத்து ஏகி நடந்தாரே
அந்த வுரைகேட்டு ஆனந்த மாயெழுந்து
கூடப் பிறந்ததொரு கோதண்ட மானவில்லை
வந்து வளைத்தவர்க்கு மாலையிட்டுத் தாரேனென்று
வில்லை வளைத்தவர்க்கு மெல்லியைத் தருவேனென்று
அரச ரனைவருக்கும் அனுப்பினர் மணவோலை
பெண்ணைத் தருவேனெனப் பிடித்தார்கள் சின்னத்தொனி
சின்னத் தொனியையல்லோ தேசமெல்லாம் ஊதிவைத்தார்
பாஞ்சாலன் சீமையெல்லாம் பந்த லலங்கரித்தார்
எங்கு மலங்கரித்தார் இராசாக்கள் வந்திருக்க
பாஞ்சாலன் சொன்னதொரு பரிவான வார்த்தையினல்
ஐம்பத்தாறு தேசத்துள்ள அரசர்கள் வந்திருக்க
நாலு புறத்திலுள்ள ராஜரெல்லாம் வந்தார்கள்
முத்து முடிதரித்த முடிமன்ன ரானவரும்
பச்சை முடிதரித்த பட்டத்து ராசர்களும்

வச்சிர முடிதரித்த மண்டலத்து ராசர்களும்
காசிநா டாண்டதொரு கர்ணமகா வீரியரும்
நாலுதிக்கி லுண்டான ராஜரெல்லாம் வந்தார்கள்
எட்டுத்திக்கி லுள்ளவர்க ளெல்லோரும் வந்தார்கள்
அப்பெரிய பந்தலிலே அருச்சுனரும் நீருமாக
பார்ப்பார வேஷங்கொண்டு பந்தலிலே வந்திருந்தீர்
வந்ததை தாமறியார் மன்னவர்க ளச்சபையில்
உங்கள் வடிவுதன்னை ஒருவ ரறியார்கள்
அந்தச் சமயத்தில் அடைவுடனே என்தகப்பன்
வந்திருந்த ராசர்களை வளையுமென்றார் வில்லதனை
எப்பெரிய ராசர்களும் இவ்வில் வளைக்கறியார்
காண்டீபந் தன்னையெடுப்பார் கலங்கியே வைத்திடுவார்
ஆராலு முடியாது அப்பெரிய வில்வளைக்க
காசிநா டாண்டிருந்த கர்ண னெழுந்திருந்து
வில்லை வளைத்துமல்லோ வில்நாரி பூட்டுகையில்
எண்ணுது மெண்ணி இவனே புருஷனென்று
வடிவு சிலையுடையான் மாலையிட வேண்டுமென்று
எண்ணினே னென்மனதில் இனியொன்று நானறியேன்
வில்லை வளைக்காமல் கர்ணனும் போய்விழுந்தான்
அன்றுமொரு பார்ப்பானும் அருச்சுனர் வில்வளைத்தார்
நேர்பார்த்து மீனெய்தார் நித்திலஞ்சேர் பூமுடியார்
பார்ப்பான் கழுத்திலே பணிமாலை போடுமென்றார்
துஷ்டரோகி யானவற்குக் குடித்தனம் செய்வேனோ
பார்ப்பாரப் பையலுக்குப் பாரியா யிருப்பேனோ
என்றல்லோ மாலைதன்னை எடுத்தே சுழற்றிவிட்டேன்
கர்ணன் கழுத்திலே கடிமாலை வீழாமல்
பார்ப்பான் கழுத்திலே பணிமாலை விழுந்ததுவே
அப்பாவஞ் செய்ததல்லால் ஆயரே வேறில்லை
அருச்சுனர்க்கு மாலையிட்டு ஐவருக்குந் தேவியானேன்
பார்த்தருக்கு மாலையிட்டுப் பஞ்சவர்க்குத் தேவியானேன்
விஜயருக்கு மாலையிட்டுஇவ் வேந்தருக்குத் தேவியானேன்
மற்றொரு பாவங்கள் மாயவரே செய்தறியேன்

## எம்பெருமாளுக்கு துரோபதை தன் கலியாணச் சங்கதி சரியாய்ச் சொல்ல மாங்கனி மரத்திற் பொருந்துதல்.

தோரா வடிவழகி துரோபதை நாயகியாள்
இவ்வுண்மை சொல்லலுமே எழும்புது மாங்கனிதான்
பொட்டெனவே தானெழும்பிப் பொருந்துதே மாங்கனியும்
தருமர் மனங்குளிர்ந்து சந்தோஷ மானாரே
பாண்டவர்கள் ஐந்துபேரும் பார்த்து மகிழ்ந்தார்கள்

## எம்பெருமாள் பஞ்சவர்க்குப் புத்திசொல்லி, தான் அவர்களிடத்திற் செலவு பெற்று துவாரகைக்குப் போதல்.

ஐவர் மகிழ்ந்தபின்பு அரிராம ரேதுசொல்வார்
பஞ்சவரைத் தாமழைத்துப் பாரளந்தா ரேதுசொல்வார்
இந்த வனந்தனிலே இருந்து சிலகாலம்
மற்றொரு வனந்தனிலே வனவாசஞ் செய்திடுங்கள்
என்னவினை வந்தாலும் என்னை நினையுமென்றார்
பத்திர மாகவே யிருங்களென்றார் பஞ்சவரை
போகச் செலவுதாரு மென்றெழுந்தார் புண்ணியரும்
பாண்டவர்க ளைவர்களும் பாஞ்சாலி துரோபதையும்
ஐவருந் துரோபதையும் ஆண்டவனைத் தெண்டனிட்டு
போய்வாரும் என்றுசொன்னார் புகழ்வேந்த ரைவர்களும்
விடைபெற் றெழுந்தாரே வேந்தர் பெருமாளும்
வட்டமாங் கருடனேறி மாயவரும் போகலுற்றார்
காடு செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறு சுனைதாண்டி அதிகவனந் தான்தாண்டி
சில்லென்ற காடுஞ் செடியும் வனந்தாண்டி
துவாரகா புரிநாடி துரிதமுடன் வந்துவிட்டார்
துவாரகா புரிதனக்கு சுவாமியும் போனபின்பு
ஐவர்பஞ்ச பாண்டவரும் ஆரணங்கு துரோபதையும்

மன்னர்பஞ்ச பாண்டவரும் மயிலனையாள் துரோபதையும்
அந்த வனத்திலே அநேகநாள் வாசம்பண்ணூர்
இப்படி யாக இருக்கிறூர் பஞ்சவர்கள்

ஐந்தாவது சயிந்தவமகாரிஷி வனம்
முற்றிற்று.

## ௬ வது காமதேனுபர்வதம்.

ஆறும் வருஷம் பிறந்தது ஐவருக்கு
அந்த வனத்தைவிட்டு அப்பாலே போகிறூர்கள்
கூடை தலைமேலே குடிவாழ்க்கை கானகத்தில்
கோலிவைத்த சும்மாடு கூடைதலை மேலேவைத்தார்
மண்ணிவைத்த சும்மாடு வனவாசம் போகிறூர்கள்
அந்த வனத்தைவிட்டு அப்பாலே போகிறூர்கள்
காமதேனு பருவதத்திற் கடிகியே தாநடந்தார்
காமதேனு வனந்தனிலே கடுகவந்து சேர்ந்தார்கள்
ஐந்தடுக்குப் பர்ணசாலை அழகாக உண்டுபண்ணூர்
ஏழடுக்குப் பர்ணசாலை எழிலாக உண்டுபண்ணூர்
அந்த வனத்திலே ஐவர் குடியிருந்தார்
அநேக நெடுநாளாய் அவ்வனத்தி லேயிருந்தார்
இப்படி யாக இவரிருக்கும் வேளையிலே

### துரியோதிரன் ஆலோசனை.

தென்ன முடிவேந்தன் திரியோ திரன்தானும்
வணங்கா முடிவேந்தன் மாபாவி யென்னசெய்தான்
சபைகள் நிறைந்திருக்கச் [1]சர்ப்பக்கொடி யோனுரைப்பான்
காளமகா ரிஷியாரைக் கருதித் தவசுபண்ணி
ஐவரையுங் கொல்லுமென்று அனுப்ப வனந்தனிலே

1 சர்ப்பக்கொடியோன் = பாம்பெழுதிய கொடியையுடையவன்.

கொல்லுகிறே னென்றுசொல்லிக் கொப்பெனவே போனுரே
ஐவர்-செத்ததுவும் பிழைத்ததுவுஞ் சேதி தெரியவில்லை
ஆரடா தூதுவரே ஆயிரம்பேர் வாருமென்றான்
அப்படியே தூதுவர்கள் அனைவோரும் வந்தார்கள்
திரியோ திரனைவந்து தெண்டனிட்டு ஏதுசொல்வார்
எங்களை யழைத்தபணி ஏதுபணி சொல்லுமென்றார்
அப்போ திரியோதிரன் அவர்களுக்கு ஏதுசொல்வான்
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் ஆரணியம் போனுரே
எந்த வனத்திலே இருக்கிறு ரென்றறியேன்
அவர்களும்மைக் காணுமல் ஆராய்ந்து பார்த்துவாரும்
என்றுமே சொன்னுனே எரிநாகக் கொடியோனும்

## துரியோதிரன் தூதர்கள் பஞ்சவரைக் காண வருதல்.

[1] மாநாகன் சொன்னதெல்லாம் மல்லர்கள் தாம்கேட்டு
[2] வாரார்கள் தூதுவர்கள் மகாராசன் சொற்படிக்கு
[3] அந்தப் புரந்தாண்டி அவசரமாய் வாரார்கள்
குருக்ஷேத்திரபூமி குருபூமி தேசம்விட்டு
காடு செடிகடந்து கடுகவே வாரார்கள்
சில்லென்று பூத்ததொரு செடியும் வனந்தாண்டி
சூரியன் வனந்தனிலே தூதர்கள் பார்த்தார்கள்
அங்கேயுங் காணுமல் அப்பாலே தேடிவாருர்
ராம ரிஷிவனத்தில் நடந்தெங்குந் தேடிவாருர்
அங்கேயுங் காணுதே அப்புறந் தேடிவாருர்
முருக்கமகா ரிஷிவனத்தில் முடுகியே தேடினுர்கள்
அங்கேயுந் தேடியே அப்பாலே போகலுற்ருர்
காளமகா ரிஷிவனத்தில் கடுகியே தேடிவந்தார்
அங்கேயுங் காணுமல் அப்பாலே போகலுற்ருர்
சயிந்தவ ரிஷிவனத்தில் தாமெங்குந் தேடினுர்கள்

---

1 மாநாகன் = பெரிய நாகக் கொடியோன்.
2 வாரார்கள் = வருகிறுர்கள்.
3 அந்தப்புரம் = அந்த நகரம்.

அங்கேயுங் காணுமல் அப்புறம் தேடிவாருர்
காமதேனு பருவதத்திற் கண்டார்கள் பஞ்சவரை
ஐவரையுங் கண்டவுடன் அங்கே பயங்தெளிந்தார்
பஞ்சவர்க ளைவரையும் பார்த்துத் திரும்பினுர்கள்
காவலர்க ளைவரையுங் கண்டு திரும்பினுர்கள்

## துரியோதிரனனுப்பிய தூதுவர்கள் காமதேனு வனத்தில் பஞ்சவரைக் கண்டு துரியோ தனனுக்குச் சொல்லுதல்.

கண்டல்லோ தூதுவர்கள் கடுகி வழிநடந்தார்
ஆறு சுனைதாண்டி அதிக வனந்தாண்டி
காடு வனங்களுமே கரியமலை தாந்தாண்டி
ஆனந்த மாகவே அத்திபுரத்தில் வந்தார்
திரியோ திரனிருக்கும் சிங்கா தனத்தருகே
மகாராசன் முன்னுக வந்து பணிந்தார்கள்
வந்து பணிந்துமல்லோ மன்னருக் கேதுரைப்பார்
திரியோதிர ராசனுக்குச் சேதிகளைச் சொல்லலுற்ருர்
ஐவரைத் தேடியே ஆரணியம் போனேமே
மாண்டார்க ளென்றீரே வனத்திலே கண்டோமே
காமதேனு பர்வதத்திற் கண்டுவந்தோம் பஞ்சவரை
அந்த வனந்தனிலே ஐவ ரிருக்கிருர்கள்
பார்த்துப் பயந்துவந்தோம் பஞ்சவர்க ளைவரையும்
கண்டு பயந்துவந்தோம் காவலர்க ளைவரையும்
என்று மொழிந்தார்கள் ஏகிவந்த தூதுவர்கள்
தூதுவர்கள் சொன்னதெல்லாம் துரியோ திரன்கேட்டு
துள்ளி மனங்கொதித்துச் சொல்வா னொருவார்த்தை

## துரியோதிரன் பஞ்சவர்கள்மேல் சண்டைக்குப் போகச் சகுனியுடன் ஆலோசனை பண்ணுதல்.

என்ற வுரைகேட்டு எரிநாகக் கொடியோனும்
சபைகள் நிறைந்திருக்கச் சர்ப்பகொடி யோனுரைப்பான்

ஐவர்வன வாசம்போய் ஐந்தாறு வருஷமுண்டு
வில்வித்தை ஆண்மைகளை மெத்த மறந்திருப்பார்
ஆனைகளுஞ் சேனைகளு மண்டவொண்ணுப் படையுமில்லை
அக்ரோணிச் சேனைகூட்டி ஐவர்மேல் படையெடுத்தால்
ஐவரைக் கொன்றிடலா மதம்பண்ணிப் போட்டிடலாம்
இதுவே சமயங்காண் இராசரைக் கொல்லுகைக்கு
அம்மான் சகுனியேநீர் ஆலோசனை சொல்லுமென்றான்

## சகுனி, துரியோதிரனைப் பஞ்சவர்களுடன் சண்டைக்குப் போகச் சொல்லுதல்.

அப்போ சகுனியும் அங்கே தெடுத்துரைப்பான்
கொல்லைக்குப் பல்லியவன் குடிக்குச் சகுனியம்மான்
இதுசமய மிதுசமயம் இவன்குடியைக் கெடுக்கவென்று
மருமகனுக் காகவேதான் வார்த்தைக ளேதுசொல்வான்
மெய்வார்த்தை சொன்னீர்காண் விஷநாகக் கொடியோரே
ஐவர் பிழைத்தினிமேல் ஆரணியம் விட்டுவந்தால்
தப்பிப் பிழைத்துவந்தால் தருமர்பஞ்ச பாண்டவர்கள்
பங்குள்ள பிரகாரம் பாதிநாடு கேட்பாரே
இப்போ படையெடுத்து இராசரைக் கொன்றிடலாம்
நல்ல சமயமிப்போ நமக்குக் கிடைத்ததென்ன
தென்ன முடிவேந்தன் திரியோ திரப்பெருமாள்
மாம னுரைகேட்டு மகாராச னேதுரைப்பான்

## திரியோதிரன் சண்டைக்குப்போகச் சேனைகளைத் திட்டப் படுத்துதல்.

ஆர்காணும் ராசர்களே அருகிருக்கு மந்திரிகளே
ஐந்து குருக்கள்களும் ஆயிரஞ் சேவகரும்
பலபல ராணுவமும் பத்துலட்சம் சேவகரும்
நாலான சேனைகளும் நடப்பார்கள் தாதியரும்
அத்தண்ட சேனைகளும் அடங்கலும் பயணமென்றான்

## திரியோதிரன் பஞ்சவர்களுடன் சண்டை பண்ண வருதல்.

அப்போது திரியோதிரன் அவனுடைய சேனைகளும்
பயணம் பயணமென்று பயணபேரி யடியுமென்றார்
இன்றுவெளிக் கூடாரம் இயலுடனே போடுமென்றார்
நாட்டுமென்றார் ஜண்டாவை [1]நகரா அடியுமென்றார்
அங்கேநட்டார் ஜண்டாவை யடியுமென்றார் பேரிகையை
அடிபடுது ராயபேரி அண்டங் கிடுகிடென்ன
சண்டை சண்டை யென்றுசொல்லி சண்டை [2]நகராடிபடுது
[3] ரணங்கள் ரணங்களென்று ரணபேரி யடிபடுது
ஆனையின்மேல் பேரிகையும் அசுவத்தின்மேல் [4]டங்காவும்
ஒட்டையின்மேல் [5]நகபத்து மொருகோடி முரசுகளும்
தாளமொடு மத்தளமும் தவுல்முரசு [6]வீராணம்
பதினெட்டு வாத்தியமும் பலதிசையுந் தான்முழங்க
அண்டபிண்டந் தானதிர அடிபடுது மேளவகை
முக்காத தூரமட்டும் முரசு முழங்கிவர
நாற்காத தூரமட்டும் [7]நாகசின்ன மூதிவர
ஐங்காத தூரமட்டும் அடிபடுது பேரிகையும்
ஆனையின்மேல் நகபத்தும் குதிரையின்மேல் டங்காவும்
கானலுக் கெடுத்தார்கள் கறுப்புநல்ல கூடாரம்
வெய்யிலுக் கெடுத்தார்கள் வெள்ளைநல்ல கூடாரம்
மழைகளுக் கெடுத்தார்கள் வண்ணவெள்ளைக் கூடாரம்
பனிகளுக் கெடுத்தார்கள் பட்டுநல்ல கூடாரம்
காற்றுக் கெடுத்தார்கள் கறுப்புநல்ல கூடாரம்
குதிரை யொருகோடி கொக்கரித்து வருகுதங்கே
யானையுஞ் சேனைகளும் அண்டவொண்ணா ராணுவமும்
அதிரதருஞ் சமாதரும் அர்த்தரத ரானவரும்
கலிங்கர் தெலுங்கர்களும் கன்னடிய ரானவரும்

---

1 நகரா = ஒருவித தம்பட்டப்பறை. 2 நகர் = நகரா.
3 ரணங்கள் = இரணங்கள் = போர்கள். 4 டங்கா = பெரும்பறை.
5 நகபத்து = ஒருவிதவாத்தியம். 6 வீராணம் = ஒருவிதவாத்தியம்.
7 நாகசின்னம் = ஒரு வித ஊது குழல் வாத்தியம்.

ஈழத்து வங்கணரும் இளநாட்டுச் சோனகரும்
வேதியரு மாதியரும் வில்லேந் தாசர்களும்
தொழுவர் மலையாளர் சோனகரும் ஒட்டியரும்
பட்டாவுஞ் சூரியும் பாரியவில் [1]சமுதாடும்
[2] நேரிசமும் பெரியகத்தி நிகரான பாங்குகளும்
அதிரு மிருப்புலக்கை ஆயுத வரிசையுடன்
ஈட்டிகத்தி வேலாயுதம் எடுத்தார்கள் சூலாயுதம்
அத்தண்ட ராணுவமும் அல்லவரும் பயணமென்றார்
துரோணாசு வத்தாமர் சொல்லரிய வீரர்களும்
கிருபன்கிரு பாசாரி கீர்த்திபெற்ற கர்ணராஜன்
சாமத் துரோகி சகுனி யவன்கூட
மாமன் சகுனியுடன் மைத்துனன் தேத்தரசன்
தங்கை மணவாளன் தறிதலைப் பட்டிமகன்
அக்காள் மணவாளன் [3]அறுதலியாள் பெற்றபிள்ளை
காந்தாரி பிள்ளைகளும் கவுரவர் சேனைகளும்
குருடன்பெற்ற பிள்ளைகளும் கோடி யாசர்களும்
ஐவரைக் கொல்லவென்று அநேகம்பேர் பயணமானார்
செந்தூ ளெழும்புறது தெய்வலோகங் [4]கப்புறது
கொடிகள் பறக்கிறது குவலய [5]மெட்டுறது
முடிக ளதிருமது மூன்றுலோகந் தத்தளிக்க
அச்சு கிறுகிறென்ன ஆனெநெடுந் தோசைய
வண்டில் கிறிச்சில்களும் மதயானை கோஷ்டமுடன்
குதிரை கனைத்துவரக் கோடிமன்னர் சத்தமிட
சந்தை யிரைச்சலது சமுத்திரக் கோஷ்டமுடன்
செல்லும் ஜனங்கள்தொகை சொல்லி முடியாது
[6] வார ஜெனங்களென்றால் மட்டு மிதங்களில்லை
பஞ்சவரைக் கொல்லவென்று பாதகனும் வாறானே
ஐவரைக் கொல்லவென்று அரும்பாவி [7]வாறானே
அஸ்தின புரந்தாண்டி அப்புறம் வருகையிலே

---

1 சமுதாடு=ஓராயுதம்.
2 நேரிசம்=அம்பு.
3 அறுதலியாள்=கைம்பெண்.
4 கப்புறது=கப்புகிறது.
5 எட்டுறது=எட்டுகிறது.
6 வார=வருகிற.
7 வாறானே=வருகிறானே.

## துரியோதிரன் பஞ்சவர்கள்மேல் சண்டைக்குவருகிற போது துரோணரைச் சாஸ்திரம் பார்க்கச்சொல்லுதல்.

தென்ன முடிவேந்தன் திரியோ திரப்பாவி
துரோணரைத் தானழைத்துச் சொல்லுவா னப்போது
பஞ்சவரைக் கொல்லவென்று பாரவனம் போறேமே
வாருந் துரோணரே வழிநிமித்தம் பாருமென்றான்
ஐவரைக் கொல்லவென்று ஆரணியம் போறேமே
என்ன சகுனங்கள் இனிநிமித்தங் காண்கிறது
சகுனத்தைப் பாருமென்றான் தாம முடியானும்

## துரியன்சொற்படி துரோணர் சகுனம் பார்த்தல்.

தென்ன முடிவேந்தன் திரியோதிரன் சொற்படியே
அரச னுரைப்படிக்கு ஆசிரிய ரானவரும்
தாமமுடி யானுக்குச் சகுனங்கள் பார்க்கையிலே
என்ன சகுனங்கள் எதிராகக் காண்கிறது
பொல்லாச் சகுனங்கள் பொருந்துது மன்னனுக்கு
[1] வாயச மிடமாச்சு வலியன் வலமாச்சு
நரையா னிடமாச்சு நரிகள் குறுக்காச்சு
பாம்பு குறுக்காச்சு பார்ப்பா னெதிரானான்
சாரை குறுக்காச்சு சந்திரர்மேல் பல்லிசொல்லும்
வேட ரெதிர்வருவார் வில்லிய ரெதிரானார்
வெட்டிப் பிடியுமென்று வேடரெதிர் [2]வாறார்கள்
குத்திப் பிடியுமென்று கோட்டானு மோலமிடும்
பட்டப்பக லிதனில் பகலாந்தை [3]சீறறது
நெருப்பெடுத்துக் கூன்கிழவி நின்றிழவு தான்கொடுத்தாள்

## துரோணாச்சாரியர் துரியோதனனுக்குச் சகுனங்கள் நன்றாயில்லையென்று சொல்ல துரியன் அவர் சொல்லைத் தடுத்து வருதல்.

துரியோ தனனுக்குத் துரோண ரவருரைப்பார்
அப்பா திரியோதிரா அரசர் சிகாமணியே

---

[1] வாயசம்=காக்கை. [2] வாறார்கள்=வருகிறார்கள். [3] சீறறது=சீறுகிறது.

[1] என்தனுட வார்த்தைகளை இராஜாவே நீகேளாய்
ஆகாத சகுனங்கள் ஆகுதே யிப்பொழுது
பொல்லாச் சகுனங்கள் பொருந்துதே யென்னசெய்வோம்
இன்றொரு நாள்போக்கி இனியொருநாள் நாம்வரலாம்
சண்டைக்குப் போகவேண்டாம் வாவென் றழைக்கையிலே
தென்ன முடிவேந்தன் திரியோ திராஜன்
அவ்வார்த்தை தான்கேட்டு அரசுமன்ன னேதுசொல்வான்
சனத்தால் பழுதுமுண்டோ சதிரான ராஜர்களே
பொல்லாச் சகுனமென்று போகாமல் நிற்கலாமோ
ஐவரு மல்லாமல் அடைப்பக்காரப் பையனில்லை
பஞ்சவரு மல்லாமல் பலவகையோ ரொருவரில்லை
இந்தச் சகுனத்தில் யாதுமொரு குற்றமில்லை
நடவும் நடவுமென்று நடைபேரி யடியுமென்றார்
வருகுது பாளையங்கள் மண்ணுவிண்ணுங் கொள்ளாமல்
செந்தூ ளெழும்புமது சூரியனைக் கப்புறது
கருந்தூ ளெழும்புமது கதிரோனைக் கப்புறது
காடு செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறு சுனைதாண்டி அதிகவனந் தான்தாண்டி
ஒருநாரைக் கிருநாரை உயர்ந்தகொம்பி லேயிருக்கும்
கருநாரைக் கிரைதேடுங் கதலி வனந்தாண்டி
செந்நாய் புலிகரடி சீறும் வனந்தாண்டி
எல்லை யிலாத்தூரம் முல்லை வனந்தாண்டி
சூரியன் வனந்தனிலே துரைகளெல்லாஞ் சேர்ந்தார்கள்
அங்கேகட்டார் சண்டாவை அடியுமென்றார் பேரிகையை
அன்றுமுகா மங்கிருந்து அடுத்ததொரு மற்றுநாள்
மற்றுநாட் காலையிலே வாறார்கள் துரைகளெல்லாம்
ராம ரிஷிவனத்தில் நடந்தார்கள் துரைகளெல்லாம்
சண்டாவை நாட்டுமென்றார் [2] சல்லரி யடியுமென்றார்
அடித்தார்கள் பேரிகையை அடிவானத் திடிபோல

---

1 என்தனுட=என்னுடைய.
2 சல்லரி=பம்பைமேளம்.

அன்றுமுகா மங்கிருந்து அடுத்ததொரு மற்றுநாள்
மற்றுநாட் காலையிலே வருகுது பாளையங்கள்
காளமகா ரிஷிவனத்தில் கடுகவந்து சேர்ந்தார்கள்
ரணபேரி அடியுமென்றான் நல்லசின்னம் ஊதுமென்றான்
அரசன் தன் சொற்படியே அறைந்தார்கள் பேரிகையை
ஊதினார் சின்னத்தொனி உலகேழுந் தானதிர
அன்றுமுகா மங்கிருந்து அடுத்ததொரு மற்றுநாள்
மற்றுநாட் காலையிலே மன்னர் பயணமிட்டார்
காமதேனு பர்வதத்திற் கடுகி வருகையிலே
ஐவரைக் கொல்லவென்று அரும்பாவி வருகையிலே
பஞ்சவரைக் கொல்லவென்று படுபாவி வருகையிலே

## துரியோதிரன் ஐவரையுங் கொல்ல வருகிறதை எம்பெருமாளறிந்து வந்தவர்க்கெல்லாந் தாகமுண்டாக்குதல்.

ஐவருக்கும் வந்தவிதி ஆயருந் தாமறிந்து
கைமோசம் வந்ததுவே காவலர்கள் பஞ்சவர்க்கு
மோசங்கள் வந்து முடிந்திடுமே பஞ்சவர்க்கு
பாவி கெடுத்தானே பஞ்சவரைக் கொல்லவென்று
தோஷி கெடுத்தானே தொண்டர்களைக் கொல்லவென்று
எந்நாளும் பகையாளி ஏற்பட்டான் பஞ்சவர்க்கு
எந்த விதத்திலுமே இறக்கவகை பண்ணுகிறான்
அசதியாய் நாமிருந்தால் ஐவ ரிறந்திடுவார்
மறதி யுடனிருந்தால் மாண்டிடுவார் பஞ்சவர்கள்
செல்வத் திரவியங்கள் சீரழிந்து போகிறதே
உள்ளங்கை நெல்லிப்பழம் உருக்குலைந்து போகிறதே
தோளில் செபமாலை தொண்டழிந்து போகிறதே
கையில் செபமாலை கனங்குலைந்து போகிறதே
என்ன உபாயமது செய்கிறு ரெம்பெருமாள்
வருகிற ராஜருக்கும் மாநாகக் கொடியாற்கும்
தண்ணீர் கவனங்கள் தாகவிடா யுண்டுபண்ணூர்

தண்ணீர் கவனங்கள் தாகவிடா யானுர்கள்
அத்தண்ட ராசருக்கும் அடிநாக் குலருறது
நாவு வறட்டுறது நடுநாக் குலருறது
அவ்வனத்தில் தீர்த்தங்கள் அள்ளியுண்ணக் கிடையாது
மாயர் பெருமாளும் மலோாம ரேதுசெய்தார்
தேவேந் திரனுடைய சுரபியெனுங் காமதேனு
அப்பசுக்கள் தீர்த்தமுண்ணும் அக்குள மொன்ருெழிய
தீர்த்தங்க ளில்லாமற் செய்துவிட்டா ரப்போது
அத்தண்ட ஜெனங்களும் மெத்தவே விடாயாச்சு
தண்ணீர்க் களையாகித் தவிக்குது பாளையங்கள்
காதை யடைத்துக் களைத்தார் துரைகளெல்லாம்
தூதுவரைத் தானழைத்துத் துரியோ திரனுரைப்பான்
இந்த வனத்திலே எங்கும் நதியிலையோ
எங்குங் குளமிலையோ இறங்கியே தீர்த்தமுண்ண
தேடியே பாருமென்று செப்பி யனுப்பினுனே
அப்படியே நல்லதென்று அந்த வனங்களெல்லாம்
தேடிப் புறப்பட்டார் திரியோதிரன் தூதுவர்கள்
அந்த வனங்களெல்லாம் ஆராய்ந்து பார்த்தார்கள்
காமதேனு தன்குளத்தைக் கண்டார்கள் தீர்த்தமுண்ண
ஓட்டம் நடையுமாக ஓடிவந்தார் தூதுவர்கள்
திரியோ திரனுர்க்குச் சேதி யுரைத்தார்கள்
அகல முள்ளதாயிருக்கும் அலங்காரப் பொய்கை கண்டோம்
வாருங்க ளென்றுசொல்லி வருந்தியே தெண்டனிட்டார்

## துரியோதிரன் காமதேனுகுளத்தில் தண்ணீர் குடிக்க, சேனையோடு வருதல்.

தென்ன முடிவேந்தன் திரியோ திரன்கேட்டு
நல்லது [1]வாருேமென்று நடந்தார்கள் சேனையெல்லாம்
வருகிற வேளையிலே வானுலக இடையரெல்லாம்

[1] வாருேம்=வருகிருேம்.

## தெய்வலோகத்து இடையர் காமதேனுப் பசுக்களுக்கு அந்தக் குளத்தில் தண்ணீர் காட்ட வருதல்.

அந்தச் சமயத்தில் அந்தரத்து இடையரெல்லாம்
வானுலக இடையரெல்லாம் மாடுகளைத் தாம்திருப்பி
காட்டிலே மேய்கின்ற காமதேனு அத்தனையும்
மேய்த்துத் துரத்தியே விரட்டிக் குளத்தில்விட்டார்
குளத்திலே நீர்குடித்துக் குளமெல்லாம் சேறாக்கி
தண்ணீர் கலங்கியே தண்ணீர்மேல் மண்கிளம்பும்
குளங்கள் கலங்கியே குளத்தின்மேல் மண்கிளம்பும்
வாருங்க ளென்றுசொல்லி வருந்தியே தெண்டனிட்டார்

## பசுக்கள் குளங்கலக்கினதை, தூதர்சொல்லத் துரியோ திரன்கேட்டுக் கோபித்து இடையர்களைக் கொன்று பசுக்களை மடக்கச்செய்தல்.

அந்தச் சமயத்திலே அரவக்கொடி யோன்தூதர்
தூதர்கள் தாம்பார்த்துச் சொல்லுவா ராசனுக்கு
ஐயையோ ராஜாவே ஆரோ தெரியாது
ஆயிரம் இடையரவர் ஆவுகளைக் கொண்டுவந்து
விட்டுமே அக்குளத்தை மெத்தச்சே றாக்கிவிட்டார்
தண்ணீர் குடிக்கவேதான் உதவாது என்றார்கள்
என்ற வுரைகேட்டு ஏதுசொல்வான் ராஜனுமே
ஆயிரம் இடையரையும் அங்கேபலி வெட்டிவிட்டு
அத்தண்ட பசுவையெல்லாம் அத்திபுர மோட்டுமென்றான்
இராஜ னுரைகேட்டு நடந்தாரே தூதுவர்கள்
மாடுக ளத்தனையும் மடக்கித் திருப்பினார்கள்
எதிர்த்த இடையர் தம்மை யாவரையுங் கொன்றுவிட்டார்
சண்டைபண்ண வந்தவரைச் சிதைத்தங்கே போட்டார்கள்

## காமதேனுப் பசுக்களைமேய்க்கவந்த இடையர்களில், துரியோதனன் தூதர்களால் மாண்டவர்கள் தவிர மற்றஇடையர்கள்போய், தேவேந் திரனுடன் சொல்லுதல்.

தப்பிப் பிழைத்தவர்கள் தாம்விழுந் தோடலுற்றார்
அமரா பதிதேடி அவ்விடைய ரோடலுற்றார்

தேவேந் திரன்முன்னே தெண்டனிட்டார் இடையாவர்
வந்து பணிந்தவர்கள் வார்த்தைக ளேதுசொல்வார்
காமதேனு பர்வதத்திற் காலிகளை மேய்த்திருந்தோம்
காட்டிலே மேய்த்தோட்டிக் கடுகிக் குளத்தில்விட்டோம்
ஆரோ தெரியாது ஆங்கார முள்ளமன்னன்
சேனை பரிவாரத் திரளுடன் கூடிவந்தான்
மாடுகளை மடக்கிஎங்கள் வல்லுயிரை வாங்கிவிட்டான்
அல்லவரைக் கொன்று னடியார்கள் தப்பிவந்தோம்
என்ற வுரைகேட்டு ஏதுசொல்வா னிந்திர னும்
உருட்டினுன் கண்விழியை உறுமினுன் பெரும்புலிபோல்
கண்கள் சிவக்கிறதே [1]காந்தாள மாகிறதே
மீசை துடிக்கிறதே முன்கோப மாகிறதே
அவ்வலரிக் கண்ணிரண்டும் செவ்வலரி பூத்திடுது
நீலவிழிக் கண்ணிரண்டும் நெருப்புத்தண லாய்விடுது
என்றுமில்லாக் கோபம் பிறந்தது இந்திரற்கு

## தேவேந்திரன் தன்மகனைச் சண்டைக்குபோகச் சொல்ல, சித்திராங்கதன் மாதலியைத் தேர்கொண்டுவரச் சொல்லுதல்.

என்மகனே சித்திராங்கா இயலான ரத்தினமே
மாட்டை மடக்கினதோர் மன்னவனைக் கைப்பிடியாய்
பிடித்த பிடியோடே பின்கட்டாய்க் கட்டிவாராய்
ஆனைசேனை பரிவாரம் அடங்கலுங் கொன்றழித்து
பிடித்த பிடியோடே கொண்டுவாராய் கொப்பெனவே
கைப்பிடியாய்க் கொண்டொருநீ கண்ணெதிரே வந்துநில்லு
இல்லாதேயாமானுல் எதிரேவந்து நில்லாதே
என்று- [2]உத்தாரம் பண்ணுரே உம்பர்பிரா னிந்திரும்
தேவேந் திரமகனுர் சித்திராங் கதராசன்
அவ்வார்த்தை தான்கேட்டு அதிகமாய்ச் சிந்தித்து
மாதலியைத் தானழைத்து மச்சுரத மெங்கேயென்றுன்

[1] காந்தாளம்=கடுங்கோபம். [2] உத்தாரம்=உத்தரவு.

தேரை யலங்கரித்துச் சீக்கிரம் கொண்டுவாநீ
என்ற வுரைகேட்டு எழுந்தானே மாதலியும்
ஆறுவண்டி நூறுசட்டம் அதுக்கேற்ற குத்துக்காலும்
குத்துக்கால் சொப்பனிட்டுக் கொடுங்கைத் திரைவளைத்து
கொடுங்கைத் திரைவளைத்துக் கும்பகல சங்கள்வைத்து
கும்பகல சங்களின்மேற் குடைகளைக் கட்டிவைத்தான்
அங்ஙனமே தேர்ச்சிலை அலங்காரம் பண்ணுனே
தேரை யலங்கரித்துத் தேர்ப்பாகன் சொப்பனிட்டான்
[1] வாசியைக் குளிப்பாட்டி வாயிற்கடி வாளமிட்டான்
நாலுகால் வண்டயமும் நடுக்கழுத்திற் கொலுசுகளும்
முன்னாலே சிட்டிகளும் முன்னே கடிவாளம்
பக்கத்தில் அங்கப்படி பதியவைத்தான் சேணகளை
முதுகிலே சீனிகளும் முன்னே கடிவாளம்
சந்த்ரபிறை சூர்யபிறை தரித்தான் அவைகளுக்கு
தேரை யலங்கரித்துத் தேர்ப்பாகன் தெண்டனிட்டான்

## துரியன்மேல் சித்திரசேனன் சண்டைக்குப் போதல்.

கடுகி யெழுந்தானே கட்டழகன் சித்ரசேனன்
நீண்டிடுங் கால்களுக்கு நெறிஞ்சிபூச் சல்லடமாம்
குந்தியிடுங் கால்களுக்குக் குறிஞ்சிப்பூச் சல்லடமாம்
மண்டியிடுங் கால்களுக்கு மாதளம்பூச் சல்லடமாம்
தூக்கிவைக்குங் கால்களுக்குத் துத்திப்பூச் சல்லடமாம்
பில்லை [2]சமுதாடு [3]பிகுவெடுத்த ஒட்டியாணம்
கட்டி யரைதனிலே [4]காங்குகச்சை சுங்குவிட்டு
சந்திரகாந்தித் தட்டிகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
முத்தி னுறுமாலை முகத்தழகாய்க் கட்டினுனே
சிங்காணி வில்லெடுத்துச் சிறுநாரி பூட்டிக்கொண்டான்
அம்பறாத் தூணிஒன்று அணிந்துகொண்டான் தன்முதுகில்

---

[1] வாசி=குதிரை.
[2] சமுதாடு=ஓராயுதம்.
[3] பிகுவெடுத்தஒட்டியாணம்=அழுத்தமானகச்சம்; இடைகட்டு.
[4] காங்குகச்சை=நீலவஸ்திரக்கச்சை.

தேரைச்சுற்றித் தெண்டனிட்டு சிவ்வெனவே ஏறினனே
ஏறின போதே யியலான சாரதிதான்
[1] துரகதம்வார் கைபிடித்துத் துரிதமுடன் சாரிசெய்ய
வருகுது மச்சுரதம் வானுலகந் தானதிர
தேர்தனிலே சங்குநாதம் சித்ரசேனன் பண்ணினனே
சங்குநாதம் பண்ணினனே தாம்திரும்பச் சுரபியெல்லாம்

## துரியோதிரன் சேனைகளைக் காமதேனு அதம்பண்ணுதல்.

அந்தச் சமயத்தில் அறிந்தது காமதேனு
சங்குத் தொனிகேட்டுத் தான்வருது காமதேனு
குத்துக்கும் மாளமிட்டு வருகுது காமதேனு
வருகுது காமதேனு மண்ணும்விண்ணுங் கொள்ளாமல்
வந்து விழுந்தது வளம்பெரிய பாளையத்தில்
குத்துது கொம்பாலே குளம்பால் மிதிக்கிறது

## துரியோதிரனும் அவனுடையசேனைகளும் சித்திர சேனனும் சண்டைபண்ணுதல்.

அத்தண்ட சேனைகளை அதம்பண்ணுங் காமதேனு
மாண்ட சனங்களென்றால் மட்டுமுடி போகாது
செத்த சனங்களென்றால் செப்ப முடியாது
அந்தச் சமயத்தில் வந்துவிட்டான் சித்ரசேனன்
வில்வளைத்து நாரிபூட்டி விட்டான் சரபாணம்
கைகண்ட பாணமெல்லாங் கடுகெனவே விட்டுவிட்டான்
கூச்ச லெழும்புகுது கொப்பெனவே பாளையத்தில்
கண்டான் துரியோதிரன் கட்டழக னேதுசொல்வான்
எவனோ தெரியாது இங்குவந்தான் சண்டைபண்ண
இத்தண்ட துரைகளெல்லாம் எல்லாரு முஸ்தீபாய்
ஆயுதங்கள் தானெடுத்து அமாது செய்யுமென்றான்
எண்ணன்கு ஆயுதத்தை எடுத்து அரையிற்கட்டி

---

[1] துரகதம்=குதிரை.

சண்டைசண்டை யென்றுசொல்லி சண்டை [1]நகரடித்தார்
ரணங்கள் ரணங்களென்று ரணபேரி தானடித்தார்
எட்டினார் சண்டைதனை எழும்புது சரப்போர்
வில்வளைத்து நாரிபூட்டி விட்டா ரிருவர்களை
ஒருவருக் கொருவர் ஒழிவில்லாப் பாணம்விட்டார்
அம்புவரும் வேகமதைப் பார்க்க முடியாது
பாணம்வரும் விதங்கள் பார்த்து முடியாது
ஒருகோடி பாணங்கள் ஒருமித்து விட்டுவிட்டார்
சூரியன் விடும்பாணம் சொல்லி முடியாது
கருணன் விடும்பாணம் கணக்கு மிதங்களில்லை
துரோணர் விடும்பாணம் சொல்லி முடியாது
கோபமாய்க் கிருபாசாரி கூட்டமாய்ப் பாணம்விட்டார்
வீஷ்டுமாச் சாரியரும் வேணபா ணங்கள்விட்டார்
அசுவத் தாமாவும் அநேகநெடும் பாணம்விட்டார்
சகுனி சயிந்தவரும் சரமேற் சரம்பொழிந்தார்
அவரவர்கள் விடும்பாணம் அளவு மிதமில்லை
ஒருவருக் கொருவர் ஒருகோடி பாணம்விட்டார்
வாயுவாஸ் திரங்களுடன் வருணாஸ் திரங்களும்
சந்திர அஸ்திரமும் இந்திர அஸ்திரமும்
சங்கஞ்சங் கம்போலே சரங்கள் பொழிந்தார்கள்
கண்டானே சித்ரசேனன் கண்கொள்ளாக் கோபமுடன்
வில்வளைத்து நாரிபூட்டி விட்டான் நெடும்பாணம்
தன்மேல் விடும்பாணம் தாக்காம லேவிலக்க
பின்னையுங் கோடிசரம் பிரளயமாய் விட்டுவிட்டான்
அத்தனைபேர் விட்டசரா மத்தனையுங் கொள்ளைகொண்டான்
அங்காரசர் தேருடைத்து அவரவர்கள் வில்பறித்து
ஆனையின்மே லிருந்ததுரை ஆக்கிரமித்து மண்ணைக்கவ்வ
குதிரையின்மே லிருந்ததுரை கொக்கரித்து மண்ணைக்கவ்வ
ஒட்டையின்மே லிருந்ததுரை ஓலமிட்டுக் கீழேவிழ
தென்னங் குலைபோல திருகுகிறான் வேணதலை

[1] நகரடித்தார் = நகரா அடித்தார்.

கரும்புக் கரணையைப்போல் கண்டித்தான் வேணதலை
ஆலைக் கரும்புபோலே அறுத்திட்டான் வேணதலை
பேய்க்கா லெறும்புகள்போற் பிசைந்தெடுத்தான் பாளையத்தை
பனை நுங்கு போலாகப் பருத்த விழிபிதுங்க
கண்டச் சதையரிந்து கழுகுக்கிறை போடுகிறான்
ஈரல் சரிகிறது இறைச்சி வெளியாகிறது
குடலுஞ் சரிகிறது குறிப்பாக அப்பொழுது
[1] சப்பை விலாவெலும்பு நெறுநெறென்று தான்முறியும்
பட்ட ஜனங்களென்றால் மட்டு மிதங்களில்லை
செத்த ஜனங்களென்றால் செப்ப முடியாது
சித்ரசேனன் சண்டையிலே ஜனங்களு மாளுகிறார்
அபய மபயமென்று அலைகிற பாளையங்கள்
தண்ணீர்தண்ணீ ரென்றுசொல்லித் தவிக்கிற பாளையங்கள்
இரத்தாறு ஓடுறது இரணமுண்டங் கொக்கரிக்க
இந்தவிதம் பாளையங்கள் ஏடாகூட மாகிநிற்க
திரியோ திராசன் தேரிழந்து நின்றுவிட்டான்

## சித்திரசேனன் துரியோதிரனைக்கட்டி இழுத்துக் கொண்டு போகிறபோது துரியோதிரன் முறையிடுதல்.

அங்கந் துளையாக்கி அதிரடித்தான் சித்ரசேனன்
அந்தர வீதியிலே அவனைப் பிடித்துக்கட்டி
பிடித்த பிடியோடே பின்கட்டாய்க் கட்டிக்கொண்டு
தேர்குத்துக் காலோடே திரியனைப் பிடித்துக்கட்டி
ஊதினான் சங்குநாதம் உம்பர்பிரான் றன்மகனும்
திரியன் பிடிபடவே திகிலெடுத்து ராசரெல்லாம்
ஒருவ ருடனொருவர் சொல்லாம லோடலுற்றார்
திரியனைக் கட்டிக்கொண்டு தெய்வலோகம் போறானும்
அந்தச் சமயத்தில் அரவக் கொடியோனும்
எண்ணாது மெண்ணுகிறான் எண்ணிப் புலம்புகிறான்

[1] சப்பை=தொடை.

ஆரோ தெரியாது ஆகாசம் கொண்டுபோருன்
எவனோ தெரியாது எமலோகங் கொண்டுபோருன்
ஐவர்பஞ்ச பாண்டவரை அனர்த்தம்பண்ண வந்தேனே
என்னையே இன்னொருவன் இழுத்துப்போரு னென்னசெய்வேன்
கூடவந்த ராஜாக்கள் கோடானு கோடியுண்டு
மட்டில்லா ராசாக்கள் வந்தார்கள் வீரியர்கள்
அத்தண்ட ராசாக்கள் அல்லவருங் கைவிட்டார்
கட்டி யிழுத்தென்னைக் கைலாசம் கொண்டுபோருன்
ஆர்வந்து காப்பார்கள் என்சீவன் பிழைக்கவிப்போ
எவர்வந்து காப்பார்கள் என்சீவன் பிழைக்கவிப்போ
தருமரைத் தானினைந்தால் தயவுவைத்துக் காத்திடுவார்
இந்த வனந்தனிலே இருக்கிரு ரென்ருர்கள்
கூவிப் புலம்பினல் குரல்கேட்குந் தருமருக்கு
தம்பியரைத் தாமனுப்பி தயவுவைத்துக் காத்திடுவார்
ஐவரு மிப்போது அன்புவைத்துக் காத்தாலே
ஐவரைக் கொல்லுகைக்கு ஆலோசனை செய்திடுவோம்
தப்பிப்பி ழைத்தோமானல் தருமரைக் கொன்றிடுவோம்
என்றவன் யோசனையாய் என்னசொல்லிப் புலம்புகிருன்
கூவிப் புலம்புகிருன் கொற்றவன் திரியோதிரன்
அண்ணாவே அண்ணாவே அழகான தர்மலிங்கம்
ஐவர்பஞ்ச பாண்டவரே அண்ணாவே நீர்கேளும்
ஐவரைப் பார்ப்பதற்கு அதிகப் பிரியமுமாய்
பார்க்கும் படியாக வந்தேன்காண் பஞ்சவரே
காணும் படியாக வந்தேன்காண் பஞ்சவரே
எவனோ தெரியாது இழுத்துப்போருன் அந்தரமாய்
கூடப் பிறக்கலையோ கூட்டுப்பா லுண்ணலையோ
தாயாரும் வேருனல் தகப்பனு ரொன்றலவோ
மனது [1]மிரங்கலையோ மகாராஜா தர்மலிங்கம்
சகோதர னென்மேல் தயவிலையோ உங்களுக்கு
அநீதமாய்க் கொண்டுபோருன் ஆரோ தெரியாது

[1] இரங்க + இல்லையோ = இரங்கலையோ.

என்-ஆவியைக் காத்தாலே அனேககோடி புண்ணியங்காண்
சாயாம்பு மேனியனே தயவிலையோ யென்மேலே
என்று புலம்பியவன் இடிபோலக் கூச்சலிட்டான்
கூவுங் குரல்கேட்டது கொப்பனவே தருமருக்கு
உற்றுற்றுக் கேட்டாராம் [1]உரகதன் வார்த்தையெல்லாம்

## துரியோதிரன் முறையிடுவதைத் தர்மர்கேட்டு அவனை அழைத்துவர அருச்சுனனுக்குக் கட்டளையிட்டது.

தருமர்மனங் கொள்ளாமல் தம்பியரைத் தாமழைத்து
ஆனு லழகுமன்னு அருச்சுனு நீகேளு
பெரியதந்தை பெற்றெடுத்த புத்திரர்கள் நூற்றுவரில்
திரியோதிர னம்மையெல்லாம் தேடியே பார்க்கவந்தான்
ஆரோ வொருவன் ஆகாசங் கொண்டுபோறான்
எவனோ தெரியாது இழுத்துப்போறான் அந்தரமாய்
பார்த்து மிருந்தோமானால் பாதக மெத்தவரும்
மெத்த வருந்துகிறான் வில்வேந்த னிப்போது
நம்மை வருந்துகிறான் ரக்ஷிப்பீ ரென்றுசொல்லி
ஆபத்து வேளையிலே ஆதரித்தால் புண்ணியங்காண்
கடுக விடுவித்துக் கையோடே கூட்டிவாராய்
என்ற வுரைகேட்டு ஏதுசொல்வான் வாள்விஜயன்
ஊரோ டிருந்தநம்மை உரகதன் தானழைத்து
கொல்ல நினைத்தானே குருடன்மகன் சதிகாரன்
எத்தனை வஞ்சனைகள் இடறுகள் செய்தான்காண்
நாடு பறித்தானே ராஜ்ஜியத்தைக் கொள்ளைகொண்டான்
ஐவர்நம்மை விலங்கிலிட்டு அறையி லடைத்தானே
அரண்மனைப் பெண்களையும் அம்பல மேற்றிவைத்தான்
அண்ணன் பெருந்தேவி யாடை யுரியவைத்தான்
டார வனவாசம் பரதேச மோட்டிவிட்டான்
இந்தப் பரதேசம் இனித்திரியு மென்றானே
சாமத்து ரோகனுக்குத் தயவு நினைப்பாரோ

1 உரக + கேதனன் = உரகதன் = பாம்புக்கொடியோன்.

பொல்லாத பாவிக்குப் புண்ணியந் தேடுவாரோ
தென்ன முடிவேந்தன் திரியோ திராஜன்
எத்தனைநா ளிருந்தாலும் மிடறல்லோ தேடுகிறான்
கொல்ல நினைக்கின்றான் கொடும்பாவி திரியோதிரன்
இன்றோ டொழிந்தவனும் எமலோகஞ் சேர்ந்திருந்து
செத்தாற் பழுதுமில்லை சீரான அண்ணாவே
என்ற வுரைகேட்டு ஏதுசொல்வார் தருமராயர்
அவரவர் செய்தவினை அவரவரே யனுபவிப்பார்
நன்மையைச் செய்தவர்கள் ராச்சியத்தை யாண்டிடுவார்
பொல்லாங்கு செய்தவர்கள் போவார் பெருநரகில்
நன்மையைச் செய்தவர்க்கு நக்ஷத் திரங்காணும்
தீமையைச் செய்தவர்க்குத் தெரியா திருளாகும்
வஞ்சனைகள் வேண்டாமே மாயன் துணையாவார்
இக்கணமே நீயேகி யிட்டுவந்து சேருவென்றார்
என்வார்த்தை தள்ளாதே என்னுடைய தம்பியே நீ

## அருச்சுனன் துரியனையழைக்கப்போனது.

என்ற வுரைகேட்டு எழுந்தா னருச்சுனனும்
நீண்டிடுங் கால்களுக்கு நெரிஞ்சிப்பூச் சல்லடமாம்
மண்டியிடுங் கால்களுக்கு மாதளம்பூச் சல்லடமாம்
குந்தியிடுங் கால்களுக்குக் குறிஞ்சிப்பூச் சல்லடமாம்
தூக்கிவைக்குங் கால்களுக்குத் துத்திப்பூச் சல்லடமாம்
சல்லடங்க ளிட்டுமல்லோ தட்டி வரிந்துகட்டி
சந்த்ரகாந்தித் [1]தட்டிகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
ஈட்டி சமுதாடு எடுத்தான் பெரியகத்தி
கத்தி சொருகியல்லோ கடுக வெழுந்தானே
சிங்காணி வில்லெடுத்துத் தேர்விஜயன் பயணமானான்
[2] வாறானே அர்ச்சுனனும் வழிபட்டான் அங்கெனவே
நடந்தானே அர்ச்சுனனும் [3]நாழிகைக்குக் காதவழி

[1] தட்டி = கேடகம்.
[2] வாறானே = வருகிறானே.
[3] நாழிகை = இருபதுநிமிஷகாலம்.

## அருச்சுனனும் சித்திரசேனனும் சண்டைபண்ணுதல்.

அப்போ தருச்சுனனும் அதிவேக மாகவல்லோ
அக்கினி பாணத்தை அதிவிரைவாய்த் தானெடுத்து
வரிவில் வளைத்தெடுத்து மார்புரள வாங்கினான்
அக்கினிப் பாணமது அதிரவே போய்த்தடுக்கும்
கண்டானே சித்ரசேனன் கண்கொள்ளாக் கோபமுடன்
சீறி யெழும்பியே சீக்கிரமாய் வந்தெதிர்த்தான்
சண்டைசண்டை யென்று சாப்போர் நடக்கிறது
ஒருவர்க் கொருவர் யுத்தங்க ளாகிறது
ஒருவர் விடுஞ்சரங்கள் ஒருவர் விலக்குவாரும்
இருவர் சமானமாக இசைந்துமே சண்டைபண்ணூர்
ஆகாய முள்ளதெல்லாம் அம்பாலே பந்தலிட்டார்
சூரியனைத் தான்மறைக்கும் சூரர்விடும் பாணமெல்லாம்
நான்கு [1]கடிகைமட்டும் நல்லசண்டை பண்ணூர்கள்
அருச்சுனன் சண்டைகளை [2]அண்டர்பிரான் மகனறிந்து

## அருச்சுனனும் சித்திரசேனனும் சமாதானமாகி துரியோதிரனைத் தருமரண்டை அழைத்துப்போகிறது.

மன்னிலும் [3]வல்லபிரான் என்று மனதிலெண்ணி
இவன்-யாரோ தெரியாது ஆண்மையுள்ள சேவகன்தான்
வம்சத்தை நாமறிந்து பிறகாக சண்டைசெய்வோம்
என்றல்லோ சித்ரசேனன் ஏதுசொல்வா னருச்சுனனை
ஆரடா தம்பிநீ ஆண்மையுள்ள சேவகனே
எவனடா தம்பிநீ எதிர்த்துச்சண்டை செய்யவந்தாய்
ஊரேது பேரேது உன்தகப்பன் சீரேது
எவருடைய புத்திரன்நீ எனக்கறியச் சொல்லுமென்றான்
இவ்வார்த்தை கேட்டவுடன் ஏதுசொல்வா னருச்சுனனும்

---

1 நான்குகடிகை = நாற்பதுநிமிஷம்.
2 அண்டர்பிரான்மகன் = தேவேந்திரன்மகன், சித்ரசேனன்.
3 வல்லபிரான் = கெட்டிக்காரன்.

யுத்த களந்தனிலே உறவின் முறைகேட்பாரோ
படுகளத்தி லொப்பாரி கேட்பாரோ பாருலகில்
நீ-ஆண்பிள்ளை யானுக்கால் அமரது செய்யுமென்றான்
உன் தகப்பன் றன்பெயரும் ஊர்ப்பெயருஞ் சொன்னாலே
நானுரைப்பேன் பிற்பாடு நவிலென்றான் போர்விஜயன்
தேவேந் திரன்மகனும் சித்ரசேனன் தான்கேட்டு
உத்தரவு தான்கேட்டு உற்சாகங் கொண்டவனும்
தேவர்க் கதிபதிதான் தேவேந்திர னென்தகப்பன்
என்ற வுரைகேட்டு ஏதுசொல்வான் அர்ச்சுனனும்
அண்ணனென் றறியாமல் அமரது செய்தேனே
தமயனென் றறியாமல் சண்டைகள் செய்தேனே
என்று-வில்லைத் தரையில்வைத்து விஜயனு மோடிவந்து
சாஷ்டாங்க மாகவே சரணமென்று தெண்டனிட்டான்
முக்கால் வலம்வந்து மூவொருகால் தெண்டனிட்டான்
அண்ணா சரணமென்று அடிபணிந்தா னருச்சுனனும்
தேவேந் திரன்மகனும் சித்ரசேன னேதுசொல்வான்
ஆர்வீட்டுப் பிள்ளையோநீ அறிய உரையுமென்றான்
என்னை யறியாயோ என்னுடைய அண்ணாவே
என்தாயார் குந்தியம்மாள் என்தகப்பன் தேவேந்திரன்
என்தகப்பன் தேவேந்திரன் என்பேரு மர்ச்சுனன்காண்
என்ற வுரைகேட்டு ஏதுசொல்வான் சித்ரசேனன்
என்-தந்தைக்கு நீபிறந்த தன்மையினால் தம்பியரே
அப்பனுக்கு நீபிறந்த ஆண்மையினால் தம்பியரே
நான்விட்ட பாணத்தால் தப்பியே நீர்பிழைத்தீர்
அல்லாதே யாமானால் அவனியில் மடிந்திடுவீர்
தப்பிப் பிழைத்தீரே சாமியுட புண்ணியத்தால்
என்றிவர்க ளோர்மனதா யிருவ ருறவாடி
ஒருவருக் கொருவர் உறவாடிக் கொண்டார்கள்
எழில்விஜய னப்போது ஏதுசொல்வான் அண்ணனுக்கு
தென்ன முடிவேந்தன் திரியோ திராசன்
என்னசெய்தா னென்றுநீர் இட்டுப்போறீ ரண்ணாவே

அவன்செய்த குற்றமெல்லாம் அண்ணாநீர் சொல்லுமென
இவ்வார்த்தை தான்கேட்டு என்னசொல்வான் சித்ரசேனன்
காட்டிலே மேய்ந்திருந்த காமதேனு அத்தனையும்
பாற்பசுக்கள் தம்மையிந்தப் பாவி மடக்கிக்கொண்டான்
ஆயிர மிடையரையும் அநீதமாய்க் கொன்றுவிட்டான்
அவ்வார்த்தை தான்கேட்டு அனுப்பினார் என்தகப்பன்
கைப்பிடியாய்க் கொண்டுவரக் கட்டளையு மிட்டார்காண்
அவர்சொன்ன படியினாலே அமாது செய்தேன்காண்
இவனுடைய சேனைகளை எல்லாம்நான் கொன்றழித்து
விரைவாகக் கைப்பிடியாய் விண்ணுலகங் கொண்டுபோறேன்
என்ற வுரைகேட்டு என்னசொல்வா னருச்சுனனும்
ஆனால்கேள் அண்ணாவே அடியே னொருவார்த்தை
சாயாம்பு மேனியினார் தருமாவ ரெங்களண்ணல்
என்னை விடுத்தவனை இட்டுவா வென்றுசொன்னார்
என்னை யனுப்பினார் இயலான தர்மலிங்கம்
அழைத்துவரச் சொன்னாரே அண்ணா லு மிப்பொழுதே
உன்முகத்தில் நான்விழிக்கேன் என்றுமே தர்மலிங்கம்
கூட்டி யனுப்பினாரே குறிப்பாக என்தனையும்
என்மேல் தயவுவைத்து இவனை யனுப்புமென்றான்
தேவேந் திரன்மகனும் சித்ரசேன னேதுசொல்வான்
மாடு மடக்கியே மன்னுயிரைக் கொன்றவனை
கைப்பிடியாய்க் கொண்டுவரக் கடுகி யனுப்பிவைத்தார்
ஆகையாற் கொண்டுபோறே னருச்சுனா என்செய்வேன்
என்றவ னுரைத்தனுமே ஏதுசொல்வான் வாள்விஜயன்
ஆனாற்கே ளண்ணாவே அடியே னொருவார்த்தை
அருச்சுனன் வந்தவனை அழைத்துப்போனா னென்றுசொல்லும்
ஐவரென்று சொன்னாலே அதிக மனமகிழ்வார்
அல்லாதே யாமாகில் அழைத்துமே போனாலே
என்வார்த்தை தள்ளிநீர் இட்டுக்கொண்டு போனாலே
அண்ணாவே நாளைக்குநான் அமரா புரம்வருவேன்
தேவேந் திரபுரத்தைச் சிதறவே கொள்ளைகொள்வேன்

ஆடுகளும் மாடுகளும் அழகான ஊருகளும்
கடையுங் கடைத்தெருவுங் கருமார வீதிகளும்
அங்காடி வீதிகளும் அரண்மனைத் தெருவுகளும்
அத்தனையுங் கொள்ளையிட்டு அதம்பண்ணிப் போட்டிடுவேன்
என்வார்த்தை தான்கேட்டு இவனைவிட்டு விடுவென்றான்
சித்ரசேனன் கேட்டதனைச் சிந்தை மகிழ்ந்தவனாய்ச்
சந்தோஷப் பட்டவனும் சர்ப்பக் கொடியோனை
கட்டவிழ்த்து விட்டுவிடுங் காணென்றான் சித்ரசேனன்

## சித்திரசேனன் தேவேந்திரனைக் காண்கிறது.

போய்வாரே னென்றல்லோ புறப்பட்டான் தேரேறி
அமரா பதிதேடி அடைவுடனே தானடந்தான்
தேவேந் திரனுக்கு சித்ரசேனன் தெண்டனிட்டான்
அருச்சுனன் தன்னுடைய அதிசயச் சேதிகளும்
அரவக் கொடிவேந்தன் அகப்பட்ட சேதிகளும்
இவ்விருவர் சேதிகளும் இயலாகத் தன்சேதி
தகப்ப னுடனுரைக்கச் சந்தோஷ மாகிவிட்டார்
அந்தச் சமயத்தில் அரவக் கொடியோனை
திரியோ திரனவனைத் தேர்விஜயன் கூட்டிவாரான்
அண்ண லருகாக அழைத்துவந்து விட்டானும்
அண்ணல் தருமருக்கு அடிபணிந்தான் திரியோதிரன்
சரணஞ் சரணமென்று சாஷ்டாங்க தெண்டனிட்டான்
எமன்மகன் தருமாரயன் எடுத்தணைத்தான் திரியனையும்
எங்கிருந்து வந்தீரையா எனக்கறியச் சொல்லுமென்றான்
அத்துவான கானகமாம் ஆரண்யம் வந்ததென்ன
அந்தர மாகவே ஆர்காணும் கொண்டுசென்றார்

## துரியோதிரன் தருமருக்குத் தன்வரலாறு கூறுதல்.

என்று கேட்ட ஐயர் தருமருக்கு
துரியோ திராசன் சொல்லத் தொடங்கினான்
ஆசையாம் பாசமதா லண்ணாவே பார்க்கவந்தேன்
எத்தனைநாள் காடுறைந்தீர் இட்டுப்போக வேணுமென்று

அஸ்தினு புரத்துக்கு அழைத்துக்கொண்டு போவோமென்று
எண்ணுது மெண்ணிநான் இக்காடு தேடிவந்தேன்
என்னை-ஆரோ தெரியாது அந்தரமாய்க் கட்டிப்போனுர்
அபய மபயமென்று அழுது புலம்புகையில்
அருச்சுனன் தானுமங்கே அமர்செய்து இட்டுவந்தான்
எத்தனைநாள் காடுறைவீர் இயலான ராஜாவே
பார வனவாசம் பரதேசந் திரிவானேன்
வேடரைப் போலாக வில்லியரைப் போலாக
பரதேசம் போவானேன் பட்டணத்தில் [1]வாங்களென்றுன்
அஸ்தினு புரத்தை ஆண்டிடுவீர் வாங்களென்றுன்
இவ்வார்த்தை தான்கேட்டு ஏதுசொல்வார் தருமராயர்
ஆறு வருஷமாச்சு ஆரணியம் வந்துநாங்கள்
இன்னஞ் சிலகாலம் இப்படியே நாம்திரிந்து
பன்னிரண்டு வருஷமட்டும் பார வனந்திரிந்து
வந்த பிறகாக மனதுவைத்து எம்மேலே
சொன்ன படிசீமை துரைத்தனந் தாருமென்றுர்

## வீமன் கனிபறித்துவர துரியோதிரன் புசித்து தருமரிடத்திற் செலவுபெற்று அஸ் திஞபுரம் செல்லுதல்.

வெற்றி மதயானை வீமா மதகரியே
அண்ணல் களையாகி அதிக பசியானுர்
காடெல்லாந் தான்திரிந்து கனிபறித்து வாருமென்றுர்
வெற்றி மதயானை வீம னெழுந்திருந்து
அருநெல்லி சிறுநெல்லி அழகான தமர்த்தம்பழம்
காட்டு விளாம்பழமும் கருநெல்லிப் பழங்களுடன்
வேரிற் பழுத்திருக்கும் வெடித்த பலாப்பழமும்
மலைத்தேன் சுனைத்தேனும் மாங்கனியும் தேங்கனியும்
மட்டில்லாப் பழம்பறித்து மதவீமன் கொண்டுவந்தான்
தேக்கிலை தான்பறித்துத் திறல்வீமன் கொண்டுவந்தான்
பறித்த கனிகளெல்லாம் பசியாற உண்ணுமென்று

1 வாங்கள்=வாருங்கள்.

கைக்குச் சலங்கொடுத்துக் கட்டழக ருண்ணுமென்றார்
ஆசனந் தான்போட்டு அமுது புசியுமென்றார்
விஷநாகங் கொண்டவனும் வேந்தனுந் தான்புசித்தான்
எண்ணாது மெண்ணுகிறான் எரிநாகங் கொண்டவனும்
இப்படிக் கொத்தவர்கள் இயலான பஞ்சவர்கள்
எப்படிச் சாவார்கள் இக்கனியைத் தின்றவர்கள்
அஸ்தினு புரத்திற்போய் ஆலோசனை பண்ணவேண்டும்
எப்படியும் பஞ்சவரை இக்காட்டிற் கொல்லவேணும்
என்று மனதிலெண்ணி இருந்து கனிபுசித்தான்
பசியாற உண்டானே பாதகன் திரியோதிரன்
கைபூசிக் கொண்டானே காதகன் திரியோதிரன்
சாயாம்பு மன்னவனார் தருமர் பெருமாளும்
பின்னுஞ் சிலகனியைப் பெருமூட்டை யாகக்கட்டி
அப்பா திரியோதனா அழகான இக்கனியை
அரண்மனைக்குக் கொண்டுசென்றால் அனைவரும் தாம்புசிப்பார்
எடுத்துப்போ வென்றுசொல்லி ஈந்தாரே அக்கனியை
வாங்கியே அக்கனியை மன்னவனும் தோளிலிட்டான்
ஐயா [1]போய்வாறேனென் றடிபணிந்தான் திரியனுமே
சாயாம்பு மன்னவனார் தர்மலிங்க மேதுசொல்வார்
காண்டீபா அருச்சுனாநீ கடுகி யெழுந்திருந்து
அண்ணன் திரியன்முன் னக்கனியின் மூட்டைகொண்டு
காடு கடக்களவும் கைமூட்டை நீவாங்கி
அண்ணனை வழிகூட்டி அனுப்பிவா தம்பியென்றார்
கரும னுரைகேட்டுத் தார்விஜயன் தானெழுந்து
கனிமூட்டை தோளில்வைத்துக் கடுகியே பின்னடந்தான்
திரியோ திரன்பின்னே நடந்தானே தேர்விஜயன்
காடு செடிகளுடன் கடிய வனந்தாமும்
ஆறு சுனைகளுடன் அவ்வனமுந் தான்கடந்து
காடு கடந்தபின்பு கைமூட்டை வாங்கிக்கொண்டு
தென்ன முடிவேந்தன் திரியோதிர னேதுசொல்வான்

---

[1] போய்வாறேன் = போய்வருகிறேன்.

தூரநிற்பாய் அர்ச்சுனனே தொல்லுலகில் வாருதே
கடக்கநிற்பாய் அர்ச்சுனனே காசினியில் வாருதே
காடு மிதித்தகாலால்என் நாடு மிதியாதே
அரைக்ஷணப் போததனில் அறுத்திடுவே னுன்தலையை
தருமர் பெருமையினுல் தணித்துவிட்டேன் கோபமதை
என்று திரியன்சொல்லி இசைந்து வழிநடந்தான்
அண்ண லருகாக அருச்சுனன் வந்தடைந்தான்
அப்போ திரியோதிரன் அதிக விரைவாக
காடு செடிகளுடன் கரிய மலைகடந்து
அஸ்தினு புரந்தன்னை ஆணழகன் போயடுத்தான்
சிங்கா தனமீதிற் சென்றுனே திரியோதிரன்
ஆசிரியர் அனைவரையும் அனந்தமகா ராஜரையும்
மாமன் சகுனியையும் மைத்துனன் சயிந்தனையும்
அத்தண்ட பேர்களையும் அழைத்தான் திரியோதிரன்
கொண்டுவந்த காய்கனியைக் கொப்பெனவே முன்னேவைத்து
இக்கனியை யுண்ணுபவ ரெப்படிகாண் மாண்டிடுவார்
தேவேந் திரன்மகனுர் சித்ரசேன ரெனைப்பிடித்தார்
தேரி லெனைப்பிணித்துத் தெய்வலோகங் கொண்டுசென்றூர்
அபய மபயமென்று அழுது புலம்புகையில்
அருச்சுனன் வந்தானங்கே அமாது செய்தான்காண்
என்னை விடுவித்து இட்டுவந்தா னண்ணலண்டை
இவரையுங் கண்டேனே அனேகமான வார்த்தைகளை
உச்சித மாகவேதா னெற்றுமையாய் வார்த்தைசொன்னேன்
இந்தக்கனி தான்புசிக்கும் எழிலான பஞ்சவர்கள்
எப்படிக்கு மாண்டிடுவார் இயலான பஞ்சவர்கள்
என்றிவர்கள் தான்பேசி யிருந்தார் சிலவார்த்தை
இப்படி யாக இருக்கின்ற வேளையிலே
ஆரும் வருஷமும் முடிந்தது இவருக்கு

ஆருவது காமதேனு பர்வதம்

முற்றிற்று.

## ௭-வது கெந்தர்வ பர்வதம்.



ஏழாம் வருஷம் பிறந்தது பஞ்சவர்க்கு
அந்த வனத்தைவிட்டு அப்பாலே போருர்கள்
கூடை தலைமேலே குடிவாழ்க்கை கானகத்தில்
கோலிவைத்த சும்மாடு கூடைதலை மேலேவைத்தார்
மன்னிவைத்த சும்மாடு வனவாசம் போருர்கள்
காமதேனு பர்வதத்தைக் கடந்து வழிகூட்டி
அந்த வனத்தைவிட்டு அப்பாலே போருர்கள்
கெந்தர்வ பர்வதத்தில் வந்தாரே பஞ்சவர்கள்
ஐந்தடுக்குப் பர்ணசாலை அழகாக உண்டுபண்ணுர்
ஏழடுக்குப் பர்ணசாலை எழிலாக உண்டுபண்ணுர்
அந்த வனத்தினிலே ஐவர் குடியிருந்தார்
இப்படி யாக இவரிருக்கும் வேளையிலே
அங்கே பெருமாளும் அலைகங்கை ஸ்நானம்பண்ணி
ஈர முலர்த்தியபின் இழைசேர்ந்த பட்டுடுத்தி
சாம்பசிவ பூசைகளும் சகலமுந் தாமுடித்து
ஆசன மிட்டுமல்லோ அரிராமர் பூசைபண்ணுர்
அரிபூசை குருபூசை அனைத்துங் கடன்முடித்து
கைதனிலே தீர்த்தமள்ளிக் கதிரோனைப் பூசைபண்ணி
எரிக்குங் கதிரோனை எம்பெருமாள் தோத்தரித்தார்
கண்ணிரண்டு மூடியபின் கையிரண்டு மேந்திக்கொண்டு
சிவஞான மயமாக ஸ்ரீகிருஷ்ணர் தாமிருந்தார்

### எம்பெருமாள் சேபம்பண்ணும்வேளையில் கேந்தருவன் தம்பலம்உமிழப் பெருமாள் கோபிக்கிறது.

ஆகாய வீதியிலே அழகான கெந்தருவன்
மாயனென்னும் கெந்தருவன் வாருனே தேரேறி
தேரேறி வருகையிலே தின்று உமிழ்ந்தானே

வால்மிளகு ஏலரிசி வாசமுள்ள ஜாதிபத்திரி
வெற்றிலையும் பாக்குகளும் மென்று உமிழ்ந்தானே
மாயவனார் கைதனிலே வந்து விழுந்ததது
துப்பிய தம்பலமும் துழாய்மௌலி கையில்விழ
கண்திறந்து பார்த்தாரே கைதனிலே தம்பலத்தை
சுற்றியங்கே பார்த்தாரே தோன்றவில்லை வேறொருவர்
ஆகாய வீதியிலே அவனாரோ தெரியாது
கைதனிலே தம்பலத்தைக் காறியுமிழ்ந்தானே
செபதபஞ் செய்கையிலே இதுசெய்தான் கெருவமென்ன
என்றெண்ணி மாயவனார் எரிகின்ற கோபத்தால்
கண்கள் சிவந்தாராம் காந்தாள மானாராம்
அவ்வலரிக் கண்ணிரண்டும் செவ்வலரி பூத்திடுமாம்
நீலவிழிக் கண்ணிரண்டும் நெருப்புத்தண லாகுதங்கே
கோவைப் பழம்போலக் கூர்விழிக்கண் சிவப்பேறும்
பாவற் பழம்போலப் [1]பதுமக்கண் சிவப்பேறும்
சக்கரத்தைத் தாமெடுத்து சாமி பெருமாளும்
கொல்ல நினைவுகொண்டார் கோபால ரெம்பெருமாள்
மந்திர தூபமிட்டு வலதுகையில் தானெடுத்தார்
தம்பலம் உமிழ்ந்தவன்றன் றலையைநீ வாங்கிவிட்டு
அரைக்ஷணப் போதையிலே அறுத்துவா அவன்தலையை
ஆனார்வந் தெதிர்த்தாலும் அமரர்வந் தெதிர்த்தாலும்
பிரமதேவன் வந்தாலும் பிரியங்கள் சொன்னாலும்
தேவர்பிரான் வந்தாலும் தெண்டனிட்டுக் கொண்டாலும்
முப்பத்து முக்கோடி முனிவர் தடுத்தாலும்
கர்த்தரே வந்துநின்று கையமர்த்தி நின்றாலும்
ஆரார் தடுத்தாலும் ஆரவாரம் பண்ணாலும்
அரைநாழிக் குள்ளாக அறுத்துவா அவன்தலையை
இக்கணமே சென்றுநீ இருதுண்டம் போட்டிடுவாய்

[1] பதுமக்கண் = தாமரைக்கண்.

## மாயன் கெந்தருவன்மேல்கோபித்து சக்கரத்தை அனுப்புகிறது.

என்று-சக்கரத்தைத் தூபமிட்டு சாமியார் விட்டுவிட்டார்
வருகிறது சக்கரமும் வானுலகந் தான்தாண்டி
இயல்பாய் வழிதனிலே எதிர்ப்பட்டார் நாரதரும்
நாரத மாமுனிதாம் நமஸ்கரித்தார் சக்கரத்தை
இத்தனை கோபத்துடன் எங்குநீர் போறீர்காண்
என்னவே-அரிராமர் சக்கரந்தான் அம்முனிக்கு ஏதுசொல்லும்

## நாரதர் சக்கரத்தை நீர்போகிற காரியம்என்ன வேன்றுவினவ, சக்கரம் சொல்லுதல்.

ஸ்ரீராம செம்பெருமாள் ஜெபதபஞ் செய்கையிலே
அவர்கையில் கெந்தருவன் அடைகாயைத் துப்பிவிட்டான்
ஆகையினுல் சாமியார் அவன்மேலே கோபமானுர்
என்னை யனுப்பிவைத்தார் இவன்தலை யறுக்கவென்று
கெந்தருவன் தன்தலையை அந்தமுடன் அறுக்கவந்தேன்
என்ற-அவ்வார்த்தை யைக்கேட்டு அந்தமுனி போய்நடந்தார்
கெந்தருவன் தன்னருகே வந்தாரே நாரதரும்
ஆரடா கெந்தருவா ஆயன் பெருமாள்மேல்
தம்பல முமிழ்ந்ததனுல் சாமியார் கோபமுடன்
சக்கரம் அனுப்பியுன்தன் தலையைத் தறிக்கவென்று
வருகிறது சக்கரந்தான் மாள விதியாச்சே
ஆதி சிவனருகே அபயமிட்டுப் போனுக்கால்
பாமசிவன் தாம்பார்த்துப் பக்ஷம்வைத்தா ராமானுல்
ஆதிசிவன் தன்னுலே ஆகும் உனைக்காக்க
அல்லாதே யாமானுல் அறுத்துவிடும் உன்தலையை
தப்பிப் பிழையுமென்று தவமுனி சொல்லுகையில்
அவ்வார்த்தை தான்கேட்டு அஞ்சிப் பயந்தவனும்

## கெந்தருவன் சக்கரத்துக்கஞ்சி மும்மூர்த்திகளிடத்திற் போய் முறையிட்டுத் தீராமையால் அருச்சுன னிடத்திற் போகிறது.

வாயுவின் வேகமாக வழிபிடித்தான் கெந்தருவன்
சக்கரம் வந்திடவே தான்புலம்பி ஓடுகிருன்

ஆதி சிவனருகில் அபயமிட்டு ஓடுகிறான்
அரவா பரணமுள்ள ஐயா உனக்கபயம்
சங்கரா நான்சரணம் சதாசிவா உனக்கபயம்
சாந்தலிங்கா நான்சரணம் தாணுவே உனக்கபயம்
வெள்ளி ரிஷபமேறும் வித்தகா நான்சரணம்
மாபூ ஷணந்தரித்த மகாதேவா உனக்கபயம்
முக்கண் படைத்தவரே முதல்வரே உமக்கபயம்
திரிபுர மெரித்தவெங்கள் தேவா உனக்கபயம்
காமனைக் காய்ந்தவொரு கடவுளே நீசரணம்
எமனை யுதைத்தவரே ஈசா உமக்கபயம்
கங்கை யணிந்தோனே [1]கடுக்கை தரித்தோனே
திங்களைத் தலைதனிலே தரித்த சிவனாரே
அபய மபயமையா அந்திவண்ணா உமக்கபயம்
என்ற-அபயக் குரல்கேட்டு ஆதிசிவ னேதுசொல்வார்
ஆரடா கெந்தருவா அபயமிட்ட வாறேது
ஆருக்குப் பகையாகி அழுது புலம்பிவந்தாய்
வந்த வயணமென்ன வார்த்தை யுரைத்திடென்றார்
ஆண்டவனே யென்சாமி அடியே னொருவார்த்தை
ஆகாய வீதியிலே அழகுரத மேறி வந்தேன்
காயாரக் காய்த்ததொரு [2]கமுகின்காய் தனையறுத்து
வாயாரத் தின்றொருநான் மண்மேலே துப்பிவிட்டேன்
தாமரைப் பொய்கையிலே சாமி பெருமாளும்
தினகரனைத் தாம்பார்த்து செபதபஞ் செய்தாராம்
நானுமிழ்ந்த தம்பலந்தான் ராமர்கையில் வீழ்ந்திடவே
கோபால சுவாமியார் கோபம் பெரிதாகி
சக்கரத்தை யனுப்பிவைத்தார் தலையைத் தறிக்கவென்று
என்னைக்கொல்ல வருகிறது கோபாலன் சக்கரந்தான்
ஆகையா லாண்டவனே ஆதரிப்பீ ரென்றுவந்தேன்
என்னை நீர் காத்தருளும் ஈசா வெனப்பணிந்தான்
காக்கக் கடனுனக்குக் கார்வண்ணன் மைத்துனனே

1 கடுக்கை=கொன்றை. 2 கமுகின்காய்=பாக்கு.

இவ்வார்த்தை தாம்கேட்டு ஈசுவாரும் ஏதுசொல்வார்
நான்வேறு விஷ்ணுவேறோ நானிலத்திற் கெந்தருவா
ஆயருக்குப் பகையாகி அருகே வாலாமோ
உன்னைநான் காத்தாக்கால் உலகளந்தா ரென்னசொல்வார்
கார்வண்ண ரென்தனக்குக் கடுகிப் பகையாவார்
காக்க முடியாது கடக்கவே போய்விடுங்காண்
பிரமதேவன் தன்னருகே போனீரே யாமானல்
அவராலே யாகுங்காண் ஆதரிக்க வல்லபிரான்
என்று உரைத்தாராம் [1]எண்தோள ரப்போது
அழுது புலம்பியே அப்புறம் போய்ப்புகுந்தான்
பிரமலோகந் தான்புகுந்து பிரமன் அருகில்வந்தான்
அபய மபயமையா ஆதரிக்குங் கர்த்தாவே
என்னையே யாதரியும் என்றல்லோ தெண்டனிட்டான்
ஆயுளைப் பார்த்தெழுதும் அரிபிரம ரேதுசொல்வார்
ஆருக்குப் பகையாகி அழுது புலம்பிவந்தாய்
வந்த கருமத்தை வாய்திறந்து சொல்லுமென்றார்
ஆண்டவனே ஐயாவே அயனாரே நீர்கேளும்
ஆகாய வீதியிலே அழகுரத மேறிவந்தேன்
அந்தரத மீதிருந்து அடைகாயும் வெற்றிலையும்
வாசங்க ளுடன்தின்று மண்மேலே துப்பிவிட்டேன்
மாயவனர் கைத்தலத்தில் விழுந்தது தம்பலமும்
மாயவனர் கோபமாகி வாவிட்டார் சக்காத்தை
என்னையே கொல்லுமென்று இயலா யனுப்பிவைத்தார்
ஆகையால் ஆண்டவனே ஆதரிப்பீ ரென்றுவந்தேன்
என்தனை யாதரியும் என்றல்லோ அடிபணிந்தேன்
என்ற-இவ்வார்த்தை தான்கேட்டு ஏதுசொல்வான் நான்முகனும்
நான்வேறு விஷ்ணுவேறோ நானிலத்திற் கெந்தருவா
மாயருக்குப் பகையாகி வந்தாயோ பாதகனே
உன்னையே ஆதரித்தால் உலகளந்தார்க் கென்மேலே
பொல்லாப்பு நேர்ந்துவிடும் பெரும்பாவி யானதினல்

---

[1] எண்தோளர் = எட்டுக்கைகளுடையவர் = சிவன்.

உன்னையே ஆதரிக்க உதவாது யென்தனக்கு
எமபுரம் சென்றொருநீ எம னுட னுரைத்தால்
எந்தவித மானாலும் எமனுன்னைக் காத்திடுவான்
கடுகி நடவுமென்று கைவிட்டார் பிர்மதேவர்
அழுது புலம்பியவன் அதிவிரைவாய்த் தான்பயந்து
எம னருகில்வந்து இளைத்துப் புலம்புகிறான்
காலனுங் கண்டவனைக் கடுகவே யேதுசொல்வான்
ஆருக்குப் பகையாகி அழுது புலம்பிவந்தாய்
வந்த கருமமதை வாய்திறந்து சொல்லுவென்றான்
அப்போது கெந்தருவன் அவருக் கெடுத்துரைப்பான்
அந்தர மார்க்கத்திலே அழகுரத மேறிவந்தேன்
வாசங்கள் தின்றொருநான் மண்மேலே துப்பிவிட்டேன்
வந்து விழுந்ததது [1]மாயருட கைத்தலத்தில்
ஆகையால் கோபமாகி அனுப்பினார் சக்கரத்தை
அது-என்னைக் கழுத்தறுக்க [2]எகிரி வருகுதென்றான்
என்னைநீர் ஆதரியு மென்றானே கெந்தருவன்
கால னதுகேட்டுக் கடுகி யெடுத்துரைப்பான்
மாயருக்குப் பகையானால் மன்னவனே காக்கலாமோ
மாயருட ஊழியத்தை மன்னவனே செய்திடுவேன்
உன்னையே காத்தாலே உலகளந்தார் கோபமுற்று
எதிர்த்துப் புறப்பட்டால் எதிர்நிற்கப் போறேனோ
காக்க முடியாது கட்டழகா கெந்தருவா
அமரா பதியாளும் அழகான தெய்வபிரான்
தேவேந் திரராருகிற் சென்றுநீ சேர்வாயானல்
காக்கவும் வல்லபிரான் கடுகிநீ போவென்றார்
அவ்வார்த்தை கேட்டுமவன் அழுது புலம்பிவாறான்
தெய்வலோகந் தன்னில்வாழும் தேவேந் திரராருகே
அபயமிட்டு அடிபணிந்தான் ஆனதொரு கெந்தருவன்
ஆரடா தம்பீநீ அறிய வுரையுமென்றான்
ஆண்டவனே ஐயாவே அடியே னொருவார்த்தை

[1] மாயருட=மாயருடைய. [2] எகிரி=பறந்து.

ஆகாய வீதியிலே அழகுரத மேறிவந்தேன்
வெற்றிலைப் பாக்குச்சுண்ணம் வால்மிளகு குங்குமப்பூ
ஜாதிக்காய் ஏலரிசி சன்ன லவுங்கமுடன்
வாசங்கள் தின்றுநான் மண்மேலே துப்பிவிட்டேன்
வந்து விழுந்ததது மாயவனார் கைத்தலத்தில்
ஆகையினா லெம்பெருமாள் அடியேன்மேல் கோபமாகி
சக்கரத்தை யனுப்பியென்தன் தலையை யரியுமென்றார்
வருகிறது சக்கரந்தான் வல்லுயிரை வாங்கவென்று
கொல்ல வருகிறது கொப்பெனவே சக்கரந்தான்
ஆதரித் தென்னைக்காத்தால் அனேககோடி மோக்ஷமுண்டு
என்ற வுரைகேட்டு ஏதுசொல்வா ரிந்திரரும்
மாயருக்குப் பகையாகி வந்தவனை ஆதரித்தால்
அவர்-எதிர்த்தாரே யாமானால் எதிர்நிற்கப் போறேனோ
மாயனுக்குச் சரியானோர் வையகத்தில் யாருமில்லை
உன்னையே யாதரிக்க உலகத்தில் யாருமில்லை
[1] தர்மருட தம்பியவன் தார்விஜய னர்ச்சுனன்தான்
அருச்சுன னாலேஉன்னை ஆதரிக்க வேமுடியும்
அபயக் குரல்கேட்டு ஆதரிப்பான் வாள்விஜயன்
ஆதி சிவனான அரனார் வந்தாலும்
எழுதும் பிரமா எம்பெருமாள் வந்தாலும்
முப்பத்து முக்கோடி முனிவர்கள் வந்தாலும்
ஆர்வந் தெதிர்த்தாலும் ஆரவாரம் பண்ணினாலும்
அர்ச்சுன ராசனவன் யாவரையும் வென்றிடுவான்
வாள்விஜய னருச்சுனனும் வல்லமை யுள்ளவன்காண்
அருச்சுனனை நீகோரி அபயமிட்டுப் போவாயானால்
ஆதரிப்பான் வாள்விஜய னதிவிரைவிற் போய்ச்சேரும்
என்ற வுரைகேட்டு எழுந்தானே கெந்தருவன்
அழுது புலம்பிக்கொண்டு அருச்சுனரைத் தேடிவாறான்
தெய்வலோ கத்தைவிட்டு தேர்விஜய னைத்தேடி
அழுதகண்ணுஞ் சிந்தையுமாய் அலறியே யோடிவாறான்
அபய மபயமென்று அருச்சுனன் முன்னேவந்தான்

---

[1] தர்மருட=தர்மருடைய.

## அர்ச்சுனன் கெந்தருவனுக்கு அபயங்கொடுத்தது.

அபயக் குரல்கேட்டு அருச்சுன னேதுரைப்பான்
ஆரடா கெந்தருவா அழுது புலம்புவானேன்
ஆரெதிர்த்து வந்தாலும் அமாது செய்திடுவேன்
அந்தா தேவதைகள் ஐயன் பிடாரிகள்
ஆகாய வாணிகளென் ஞுத்துமா தானறிய
காக்கிறே னஞ்சாதே என்றல்லோ கைகொடுத்தான்
அருச்சுனன் கைகொடுத்து அஞ்சாதே யென்றுசொல்ல
சற்றே பயந்தெளிந்தான் தார்வேந்தன் கெந்தருவன்
அருச்சுன ராசனவன் அப்போது ஏதுசொல்வான்
ஆர்க்குப் பகையாகி அழுது புலம்பிவந்தாய்
எவரெதிர்த்தா ருன்னோடே இங்கழுது நீவந்தாய்
வந்த கருமமென்ன வாய்திறந்து சொல்லுவென்முன்
அஞ்சிப் பயந்தவனும் அருச்சுனனைப் பார்த்துரைப்பான்
ஆகாய வீதியிலே அழகுரத மேறிவந்தேன்
வாசங்கள் தின்றொருநான் மண்மேலே துப்பிவிட்டேன்
நானுமிழ்ந்த தம்பலந்தான் ராமர்கையில் விழுந்ததுவே
ஆகையால் மாயவரும் அடியேன்மேல் கோபமுடன்
என்னையே கொல்லவென்று எடுத்துவிட்டார் சக்காத்தை
சக்கரம் வருகிறது தலையைத் தறிக்கவென்று
ஆதி சிவனருகில் அபயமிட்டுப் போனேனையா
தம்மாலே யாகாது என்றல்லோ தள்ளிவிட்டார்
[1] அயனு ரிடத்தினிலே அபயமிட்டுப் போனேனையா
ஆதரிப்பா ரென்றொருநான் அபயமிட்டுப் போய்ச்சேர்ந்தேன்
என்னுலே யாகாது என்றல்லோ தள்ளிவிட்டார்
எமதர்ம ராசரைநான் எதிர்கொண் டபயமிட்டேன்
தன்னுலே யாகாது என்றல்லோ தள்ளிவிட்டார்
தேவேந் திரரருகில் சென்றுநான் அபயமிட்டேன்
காத்திடுவா ரென்றொருநான் கடுகியே அபயமிட்டேன்

---

[1] அயனுர்=பிரமதேவர்.

என்னாலே யாகாது என்றல்லோ தள்ளிவிட்டார்
அழகில் மிகுந்தவரே அருச்சுனரே யும்மைநாடி
தேடியே அபயமிட்டுத் தெய்வலோகம் விட்டுவந்தேன்
ஆதரித்தீ ராமானல் அனைவர்க்குங் கீர்த்தியுண்டு
என்ற-இவ்வார்த்தை தான்கேட்டு எழில்விஜய னருச்சுனனும்
எண்ணாது மெண்ணுகிறா னெண்ணிமனங் [1]குண்ணுகிறான்
மாயருக்குப் பகையாகி வந்தவனைக் காத்தாலே
மாயருக்கு மென்தனக்கும் மெத்தபகை யாய்விடுமே
என்னசெய்யப் போறேனென்று ஏங்கி விசாரமிட்டு
ஐவர் சகாயரல்லோ ஆயர் பெருமாளும்
நம்பினே னென்றவரை ரட்சிக்க வேணுமல்லால்
காக்கிறோ மென்றுசொல்லிக் கைவிட லாகாது
ஆயர்பெரு மாள்தமக்கு அன்பான வார்த்தைசொல்லி
எந்த விதத்திலேயும் இவன்றன்னைக் காக்கவேணும்
அல்லவென்று கோபங்கொண்டால் அமராது செய்திடுவோம்
என்று நினைத்தவனும் என்னசொல்வான் வாள்விஜயன்
[2] திங்களுஞ் சூரியனும் தெற்குவடக் கானாலும்
அழகான தாமரையும் [3]அடியிலே பூத்தாலும்
நறுக்கிப் பிழிந்துஎன்னை நரகத்திற் போட்டாலும்
நாவாலே சொன்னசொல்லை நான்தவறப் போறதில்லை
எந்த விதத்திலேயும் இடாகற்றிக் காத்திடுவேன்
என்றல்லோ ஆதரித்தான் இயலான வாள்விஜயன்

## அருச்சுனன் கேந்தருவனுக்கபயம் கொடுக்கப் பெருமாளுக்குக் கோபம்வந்து சக்கரத்தை யனுப்புகிறது.

ஈதறிந்து மாயவனார் அனுப்பிவிட்டார் சக்கரத்தை
வருகிறது சக்கரந்தான் மண்ணும்விண்ணுங் கொள்ளாமல்
கண்கள் பொறிபறக்கக் கடுகி வருகிறதே
அருச்சுன ராசராண்டை அருகேவந்து தெண்டனிட
என்னருகே காரியமென் எங்குவந்தீர் சக்கரமே

---

1 குண்ணுகிறான்=குன்றுகிறான். 3 அடியிலே=தரையிலே.
2 திங்கள்=சந்திரன்.

வந்த கருமமதை வாய்திறந்து சொல்லுமென்றான்
சாமி யனுப்பிவைத்த சக்கரமு மேதுசொல்லும்
மாயனுக்குப் பகையான மாயாவி கெந்தருவன்
அருச்சுனரே உம்மிடத்தில் வந்தா னரும்பாவி
அவனைக் கழுத்தறுக்க அனுப்பினார் மாயவனார்
ஆகையா லனுப்பிவிடும் அருச்சுனரே அவன்தலையை
அறுத்தெறிந்து நான்போறேன் அவனை யனுப்புமென
[1] தனஞ்சயனு மப்போது சக்கரத்துக் கேதுசொல்வான்
அபய மபயமென்று அழுது புலம்பிவந்தான்
அபயக் குரல்கேட்டு ஆதரித்தே னவனை
[2] பாரளந்தா ரானவர்க்குப் பகையானு னென்றறியேன்
அபய மபயமென்று னாதரித்தே னவனை
காக்கிறோ மென்றுசொல்லிக் கைவிட லாகாது
ஆகையால் சக்கரமே ஆயருக்குச் சேதிசொல்லும்
கோடி சாணம்செய்து கும்பிட்டே னென்றுசொல்லும்
ஆயிரந் தெண்டனிட்டேன் அடிபணிந்தே னென்றுசொல்லும்
சக்கரத் தாழ்வாரும் தார்விஜயர்க் கேதுசொல்லும்
ஆனால்போய் வாறேனென்று [3]அப்போ திரும்பிவந்து
மாயவரைக் கண்டவுடன் வணங்கி நமஸ்கரித்து
ஆதி சிவனருகில் அபயமிட்டு ஓடுகையில்
ஆதரிக்க மாட்டோமென்று அவரும் விலக்கிவிட்டார்
அருச்சுனனார் தம்மருகில் போனு னபயமிட்டு
வணங்கி நமஸ்கரித்து மாயாவுன் வார்த்தைசொன்னேன்
உனக்குப் பகையான உண்மையெல்லாம் நானுரைத்தேன்
எத்தனை சொன்னாலும் இரங்காமல் அருச்சுனரும்
ஆண்டவனே வுன்னருகே அனுப்பினன் சொல்லுமென்று
இவ்வார்த்தை கேட்கவுமே எம்பெருமாள் கோபமாகி
ஆங்காரக் கோபமுடன் அரிராம ரென்னசொல்வார்

---

[1] தனஞ்சயன் = அர்ச்சுனன்.
[2] பாரளந்தார் = உலகை அளந்தவர் = விஷ்ணு.
[3] அப்போ = அப்போது = உடனே.

ஐவர்களைக் காப்பதற்கு ஆண்டவனாய் நானிருந்து
இத்தனைநாள் காத்துவந்தேன் இயலான பஞ்சவரை
எனக்குப் பகையாளி தனக்குப் பகையலவோ
ஆதரிக்க ஞாயமுண்டோ அறியானோ யென்சமர்த்தை
மறுகா லொருதரம்நீ வாள்விஜய னருகிற்சென்று
நானுரைத்த வார்த்தையெல்லாம் நல்விஜய னுக்குரைத்து
மாயவற்கு வேண்டாத மாபாவி யானவனை
விட்டுவிட்டா லல்லாது [1]வேணபகை யாகுமென்று
குருகுலம் அடங்கலுமே கூட்டோ டொழியுமென்று
கொல்ல நினைப்பார்காண் குடிகேடு வருமென்று
சொல்லியே வாருமென்று சொன்னாரே மாயவனார்
சக்கரத் தாழ்வாருந் தாம்நடந்தார் அப்போது
காடு செடியுடனே கரியமலை தான்கடந்து
அருச்சுன ராசாண்டை அருகேவந்து தெண்டனிட்டு
மாயவனார் சொல்லிவிட்ட வார்த்தையொன்றுந் தப்பாமல்
காண்டீபர் அருச்சுனர்க்குக் கரியமால் சேதியெல்லாம்
உண்டான வார்த்தையெல்லாம் ஒளியாம லேயுரைத்தார்
காண்டீபர் அருச்சுனரும் கடுகியே யேதுசொல்வார்
ஏதறிவான் கெந்தருவன் ஏழையவன் உன்னடியான்
வாள்விஜய னர்ச்சுனன்மேல் வன்பகை யுன்தனக்கேன்
ஏதுகுற்ற மானாலும் இரங்கி யவற்கருள்வாய்
ஆயிரந் தெண்டனிட்டு அடிபணிந்தா னென்றுசொல்லும்
காக்கிறே னென்றுசொல்லிக் கைவிட ஞாயமில்லை
நறுக்கிப் பிழிந்தவனை நரகத்திற் போட்டாலும்
கைவிடான் விசயனென்று கண்ணருக்கு நீர்உரையும்
ஊழியுள்ள காலமட்டும் உனைமறவா னருச்சுனனும்
வணங்கினா னென்றுரையும் மாயருக்கு நீர்தாமும்
அனேக நமஸ்காரம் அருச்சுனன் செய்தானென்று
தாமோ தான்றனக்குச் சக்கரமே போய்ச்சொல்லும்
சக்கரமே போய்ச்சொல்லுஞ் சரணஞ் சரணமென்று

---

1 வேணபகை = அதிகபகை.

சொல்லித் தொழுதானே சுவாமி பெருமாளை
சக்கரத் தாழ்வார்க்குத் தனஞ்சயன் விடைகொடுக்க
சக்கரத் தாழ்வார் தாமுமங்கே போய்நடந்தார்
காடு செடியுடனே கரியமலை தான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
மாய ரருகில்வந்து வணங்கியே தெண்டனிட்டு
வாள்விஜயன் சொல்லிவிட்ட வார்த்தைகள் தாமுரைக்க
ஆய ரவர்கேட்டு ஆங்காரக் கோபமதாய்
ஐவர்பஞ்ச பாண்டவர்க்கு அனர்த்தம் பிறந்ததென

## சக்கரம் அருச்சுனன் மனமறிந்து பெருமாளுக்குச் சொல்ல பெருமாள் கோபித்து சாத்தகியை அனுப்புகிறது.

சாத்தகியே ஒருசேதி சாற்றுவீர் அருச்சுனற்கு
கொல்ல நினைப்பாரே குடிகேடு வந்திடுமே
வேண்டாங்காண் வாள்விசயா வீண்பகை வேண்டாமென்று
அருச்சுனற்குச் சொல்லிவிட்டு அதிவிரைவி லோடியந்த
கெந்தருவன் தன்தலையை இந்த க்ஷணமறுத்து
ஒருகணப் போதையிலே உத்தரவு கொண்டுவாரும்
என்ற வுரைகேட்டு எழுந்து நடந்தாராம்
காடு செடியுடனே கரியமலை தான்தாண்டி
அருச்சுனன் தானிருக்கும் ஆரணியம் போய்ச்சேர்ந்தார்
அருச்சுனன் தன்னைக்கண்டு அடிபணிந்து தெண்டனிட்டார்
மாய னுரைத்துவிட்ட வார்த்தையொன்றுந் தப்பாமல்
ஒன்று மொளியாமல் உரைத்தாரே சாத்தகிதாம்
அரிராமர் சேதியெல்லாம் அருச்சுனன் தான்கேட்டு
எத்தனை வார்த்தைகளை இரக்கமாய்ச் சொன்னாலும்
இரங்காமல் மாயவரும் எதிர்க்கவும் ஞாயமுண்டோ
ஆயன் பெருமாளும் அறியாரோ என்சமர்த்தை
பெண்டுகள் பேச்சுகளோ பேசுகிறு ரெம்பெருமாள்
கைவலிமை யுண்டானால் கடுகி வரச்சொல்லும்

மூலையிலே தாமிருந்து மொறுமொறுக்க ஞாயமுண்டோ
மைதான வெளியினிலே வரச்சொல்லும் சண்டைபண்ண
காக்கிறே னென்றவனைக் கைவிடப் போறேனோ
மாய ருடனேஅந்த மயேச்சுவரர் வந்தாலும்
பெருமா ளுடனேகூடிப் பிரமதேவர் வந்தாலும்
எவரெதிர்த்து வந்தாலும் இளைப்பேனென்று பாராதே
போவென்று சொன்னானே போர்விஜயன் கோபமதாய்
சாத்தகி யாழ்வாரும் தாநடந்தார் பொக்கெனவே
ஆய ரருகில்வந்து அடிபணிந்து தெண்டனிட்டார்
அருச்சுனன் சமர்த்துகளும் ஆண்மைகள் பேசினதும்
சண்டைக்கு முஸ்தீபாய் தான்வரச் சொன்னதுவும்
அவரெடுத்துச் சொல்லுகையில் ஆயரும் கோபமுற்று
அவ்வலரிக் கண்ணிரண்டும் செவ்வலரி பூத்திடவே

## அருச்சுனன்மேல் பெருமாள் கோபமாகி சண்டைக்குப்போக, துரியோதிரனை வரவழைக்கிறது.

கோபம் பெரிதாச்சு கோபால மாயருக்கு
சாத்தகியைத் தாமழைத்துச் சாமியா ரேதுசொல்வார்
திரியோ திரன்தனக்குச் சேதி யுரையுமென்றார்
மாயவர்க்குப் பகையானார் மன்னர்பஞ்ச பாண்டவர்கள்
ஐவரைக் கொல்லவென்று ஆயர் பயணமிட்டார்
உன்னுடைய சேனைகளும் யுத்தஞ்செய் ராசர்களும்
சேரத் துணையாகச் செப்பிவரச் சொன்னார்காண்
வாருங்க ளென்றுசொல்லி வரவழையுந் திரியனைத்தான்
இப்போதே நற்சமயம் இதோபயணம் [1]வாங்களென்று
நாகக் கொடியுடைய ராசாவை யழையுமென்றார்
சாத்தகி யாழ்வாரும் சரணமிட்டுப் போய்நடந்தார்
அஸ்தினு புரமதனை அடை வுடனே போய்ச்சேர்ந்து
திரியோ திரன்தனக்குச் சேதிகள் சொல்லலுற்றார்
ஐவரைக் கொல்லுகைக்கு ஆயர் மனதாகி

---

[1] வாங்கள்=வாருங்கள்.

அழைத்துவரச் சொன்னார்காண் அரவக் கொடியோரே
வருவீரோ என்றுசொல்லி வாய்மொழி கேட்கலுற்றார்
என்றாழ்வார் சொல்லலுமே அரவக் கொடியோனும்
திரியோ திரன்கேட்டுச் சிந்தை மனங்குளிர்ந்து
ஐவரைக் கொல்லுகைக்கு அதிக மனதாகி
நல்ல சமயமிது நமக்குக் கிடைத்ததென்று

## துரியோதிரன் பெருமாளிடம் வருகிறது.

அங்கேகேட்டான் சண்டாவை அடியுமென்றான் பேரிகையை
இன்றுவெளிக் கூடாரம் இயலுடனே போடுமென்றான்
கானலுக் கெடுத்தார்கள் கறுப்புநல்ல கூடாரம்
வெய்யிலுக் கெடுத்தார்கள் வெள்ளைநல்ல கூடாரம்
யானையின்மேல் டங்காவும் குதிரையின்மேல் டோராவும்
ஒட்டையின்மேல் நகராவும் ஓசை செவிடுபட
யானையுடன் சேனையுடன் அரசுமன்னர் பயணமிட்டார்
துரியோதிரன் தம்பிமார்கள் தொண்ணூற்று ஒன்பதுபேர்
கருணன் சகுனியுடன் காந்தாரி பிள்ளைகளும்
துரோண ரசுவத்தாமன் சொற்பெரிய [1]காங்கேயன்
கிருபன் கிருபாசாரி கீர்த்தியுள்ள மன்னர்களும்
பிள்ளையவன் லக்குணனும் பேர்மிகுந்த மந்திரியும்
மற்றுஞ்சில ராசர்களும் மந்திரிகள் பயணமானார்
அதிரதருஞ் சமரதரும் அர்த்தரத ரானவரும்
கலிங்கர் தெலுங்கர்களும் கன்னடிய ரானவரும்
ஈழத்து வங்கணரும் இளநாட்டுச் சோனகரும்
எண்ணான்கு ஆயுதங்கள் எடுத்தரையிற் கட்டினார்கள்
நாலுபக் கத்திலுள்ள ராசர்கள் சேனையுடன்
கார்மேகம் வருவதுபோல் கறுத்தானைக் கூட்டம்வரும்
மேகத்து மின்னலைப்போல் வெள்ளானைக் கூட்டம் வரும்
வானத்து மின்னலைப்போல் மணித்தே ரசைந்துவரும்
செவ்வானம் இட்டதுபோல் சிவந்த புரவிவரும்
அச்சு கிறுகிறென்ன யானைநெடுந் தேரசைய

---

[1] காங்கேயன் = பீஷ்மாசாரி.

வண்டில் கிறுகிறென்ன மதயானை கோஷ்டமிட
குதிரை கனைக்குமங்கே கொக்கரிக்கும் பாளையங்கள்
செந்தூ ளெழும்புறது தினகரனைக் கப்புறது
கருந்தூ ளெழும்புறது கதிரோனைக் கப்புறது
சண்டைசண்டை யென்றுசொல்லி சண்டை [1]நகர ரடிபடுது
ரணங்கள் ரணங்களென்று ரணபேரி தான்முழங்க
தேர்க ளசைந்துவரச் சிகரக் கொடிபறக்க
மாயவனூர் பட்டணமே வாறூர்க ளெல்லாரும்
அங்கேநட்டார் சண்டாவை அங்கிறங்கிப் பாளையங்கள்
திரியோ திராசன் ஸ்ரீகிருஷ்ண னருகில்வந்து
மாயவரைக் கண்டவுடன் வணங்கியே தெண்டனிட்டான்
ஏழுலகம் உண்டசாமி எம்பெருமா ளேதுசொல்வார்
மாநாகக் கொடியுடைய மகாராசா நீர்கேளும்
காலையில் தானெழுந்து கனிவாய் முகங்கழுவி
தினகரனைத் தோத்தரித்துச் செய்தேன் செபதபங்கள்
ஆகாய வீதியிலே அரும்பாவி கெந்தருவன்
வாசங்கள் தின்றுமென்தன் வலதுகையில் தானுமிழ்ந்தான்
அவனைக் கழுத்தறுக்க அனுப்பினேன் சக்கரத்தை
அபய மபயமென்று அவனழுது புலம்புகையில்
அருச்சுனன் தானவனை ஆதரித்துக் கொண்டானும்
ஆகையா லருச்சுனனை அதமாக்க வேணுமென்று
உன்தனக்குச் சேதிசொல்லி [2]உரகதனே வாருமென்றேன்
என்வார்த்தை தள்ளாமல் இங்குவந்தீர் தயவுடனே

## ஐவரையுங்கொல்ல, திரியோதிரனும் அவன்சேனைகளும் எம்பெருமாளும் அவர்சேனைகளும் சண்டைக்குவருகிறது.

இனி-ஐவரைக் கொல்லுகைக்கு அனைவரும் போவோமென்றார்
பயணம் பயணமென்று பயணபேரி யடியுமென்றார்
அதிரதரும் சமரதரும் அர்த்தரத ரானவரும்

[1] நகர்=நகரா.

[2] உரகதன்=உரக கேதனன்=பாம்புக்கொடியோன்.

கலிங்கர் தெலுங்கர்களும் கன்னடிய ரானவரும்
ஈழத்து வங்கணரும் இளநாட்டுச் சோனகரும்
அத்தண்ட ராணுவமும் அல்லவரும் பயணமென்றார்
துரோண ரசுவத்தாமர் சொல்லரிய வீரர்களும்
கிருபன் கிருபாசாரி கீர்த்திபெற்ற கர்ணனுமே
எண்ணான்கு ஆயுதங்கள் எடுத்தார்க ளெல்லோரும்
போயமர்ந்தார் தேர்மேலே பிடித்தார் நெடுங்குடையை
தோணியு மாவணியும் சேனைத் திரளுடனே
வாற செனங்களென்றால் மட்டு மிதங்களில்லை
காடு செடிதாண்டிக் கரியமலை தான்கடந்து
வனமா வனங்கடந்து வருகிற பாளையங்கள்
தினகரன் வனந்தனிலே சேர்ந்தார் துரைகளெல்லாம்
அன்றுமுகா மங்கிருந்து அப்பால் நடக்கலுற்றார்
முருக்கமகா ரிஷிவனத்தில் முடிமன்னர் வந்தார்கள்
அன்றுமுகா மங்கிருந்து அப்பால் நடக்கலுற்றார்
காளமகா ரிஷிவனத்தில் கடுகிவந்தா ரந்நேரம்
அன்றுமுகா மங்கிருந்து அப்பால் நடக்கலுற்றார்
கெந்தருவ பர்வதமே கிட்டியே [1]வாறார்கள்
கெந்தருவ பர்வதத்தைக் கிட்டியே வந்தவுடன்

## அர்ச்சுனர்க்கு எம்பெருமாள் சண்டைக்குவருகிறேனென்று தூதனிடம் சொல்லியனுப்புதல்.

ஒற்றனை அனுப்பியவர் ஓடியே சொல்லுவென்றார்
திரியோ திரன்படையும் ஸ்ரீகிருஷ்ணன் சேனைகளும்
வருகிறா ரென்றுசொல்லி வாள்விஜய னுக்குரைப்பாய்
என்றுசொல்லி மாயவனார் அனுப்பினார் தூதுவனை
ஓடினான் தூதுவனும் ஒருநொடியிற் போய்ச்சேர்ந்தான்
அருச்சுன ராசருக்கு அடிபணிந்து தெண்டனிட்டு
மாயனும் உரகதனும் வருகிறார் சண்டைபண்ண
எச்சரிக்கை யாகவேநீர் இருமென்றார் எம்பெருமாள்

1 வாறார்கள்=வருகிறார்கள்.

இவ்வார்த்தை தான்கேட்டு எழுந்தா னருச்சுனனும்
தரும ரருகில்வந்து சாஷ்டாங்க தெண்டனிட்டு
ஆகாய வீதியிலே அழகான கெந்தருவன்
மச்சு ரதமேறி வருகிற வேளையிலே
வாசங்கள் தின்றதனை மண்மேலே துப்பினனும்
அவ னுமிழ்ந்த தம்பலங்கள் அரிராமர் கையில்விழ
மாயன் பெருமாளும் மகாகோபங் கொண்டவராய்
சக்கரத்தை விட்டார்காண் தலையைத் தறிக்கவென்று
அபய மபயமென்று அலறிப் புலம்பிவந்தான்
அபயக் குரல்கேட்டு ஆதரித்தே னனவனை
ஆதரித்தே னென்றுசொல்லி அமர்செய்ய வாறாராம்
இவரைக் கொல்லவென்று அரிராமர் வாறாராம்
மாயருடன் சண்டைபண்ண [1]வாறீரோ அண்ணவே
என்றதனைத் தாம்கேட்டு ஏதுரைப்பார் தர்மலிங்கம்
போருக்கு மாயருடன் போகாதே தம்பியென்றார்
வெற்றி மதகரியான் வீமனவ னேதுசொல்வான்
அஞ்சாதீர் தம்பியரே அதமாக்கிப் போட்டிடுவேன்
திரியோ திரன்படையும் ஸ்ரீராமர் சேனைகளும்
எல்லோ ரையுங்கொன்று எமலோகஞ் சேர்த்திடுவேன்

## வீமனும் அருச்சுனனும் சண்டைக்குப் புறப்படுகிறது.

என்று மதவீமன் எழுந்தானே கோபமுடன்
தருமரையும் மனைவியையும் தம்பிமா ரிருவரையும்
அபயமிட்ட கெந்தருவன் அவனையுந் தானழைத்து
உச்சி மலைநடுவே உள்ளே குகையிருக்கும்
அந்தக் குகையிலே அனைவோரும் போயிருங்கள்
வந்த [2]திரளையெல்லாம் மண்ணுக் கிரையிடுவோம்
எம்பெருமாள் சேனைகளை எமலோகஞ் சேர்த்திடுவோம்
எச்சரிக்கை யாகவேநீர் இருமென்று ரப்பொழுது
அப்படியே தருமரவர் அதிவிரைவாய்த் தாமெழுந்து
உச்சி மலைநடுவே ஒருகுகையில் போயிருந்தார்

[1] வாறீரோ=வருகிறீரோ. [2] திரள்=கூட்டம்.

வீம ரருச்சுனரும் விரைவாகத் தாமெழுந்து
நீண்டிடுங் கால்களுக்கு நெரிஞ்சிப்பூச் சல்லடமாம்
மண்டியிடுங் கால்களுக்கு மாதளம்பூச் சல்லடமாம்
குந்தியிடுங் கால்களுக்குக் குறிஞ்சிப்பூச் சல்லடமாம்
தூக்கிவைக்குங் கால்களுக்குத் துத்திப்பூச் சல்லடமாம்
சல்லடங்க ளிட்டுமல்லோ தட்டி வரிந்துகட்டி
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
அம்புவில்லுந் தாமெடுத்து ஆயத்தப் பட்டார்கள்
வடக்கு முனையிலே மதவீமன் வந்துநின்றான்
தெற்கு முனையிலே தேர்விஜயன் வந்துநின்றான்
வருகுது பாளையங்கள் மண்ணும்விண்ணுங் கொள்ளாமல்
ஆனை குதிரைரதம் அளவில்லாச் சேனைகளும்
வருகிற ஜனங்கள்தமை மாயவனார் தாமழைத்து
திரியோ திரனரைச் சேர வரவழைத்து
உன்னுடைய சேனைகளை உரமுள்ள ராசர்களை
சமரது செய்யவந்த சமர்த்துள்ள மன்னர்களை
ஆனை குதிரைகளை அரசுமன்ன ருள்ளவரை
மாவணியைத் தோணியை மற்றுமுள்ள ராணுவத்தை
உன்னுடைய பாளையத்தை ஒன்றாக வேகூட்டி
வடக்கு முகமதனில் மதவீமன் தன்மேலே
சண்டைபோய்ச் செய்யுமென்று தான்சொன்னார் அப்போது
தெற்கு முகமதனில் தேர்விஜயன் றன்னருகே
என்னுடைய சேனைக ளெல்லாரும் போயெதிர்த்து
அருச்சுனன் றன்னுடனே அமரது செய்திடுவோம்
என்று அனுப்பிவைத்தார் இயலான மாயவரும்
சங்கைத் தாமெடுத்து சண்டைக்கு [1]வாறேனென்று
ஊதினார் சின்னமெங்கும் உலகளந்தார் பாளையத்தில்
சண்டைசண்டை யென்றுசொல்லி சண்டைநக ரடிபடுது
ரணங்கள் ரணங்களென்று ரணபேரி யடிபடுது
செந்தூ ளெழும்புவது தினகரனைக் கப்புறது

[1] வாறேனென்று=வருகிறேனென்று.

கருந்தூ ளெழும்புவது கதிரோனைக் கப்புறது
வந்து எதிர்த்தார்கள் வாள்விஜயன் தன்னுடனே
அந்தச் சமயமதில் அரவக் கொடியோனும்
தன்னுடைய சேனையுடன் தான்வடக்குத் திசையதனில்
வந்து எதிர்த்தானே மதவீமன் தன்னுடனே
எண்ணெணுச் சேனையுடன் எச்சரித்துத் தான்வளைத்தான்
சிங்கநா தஞ்செய்து சேனைகளுங் கொக்கரித்தார்
கண்டான் மதவீமன் கண்கொள்ளாச் சேனைகளை
[1] எல்லவரைக் கொல்லவென்று எழுந்தான் மதகரியான்
கோபம் வருகிறது கொற்றவனும் வீமனுக்கு
அவ்வலரிக் கண்ணிரண்டும் செவ்வலரி பூத்திடுது
கண்களை யுருட்டிக்கொண்டு கதும்பினன் சேனைகளை
எட்டினன் கல்மலையை எறிந்துவிட்டான் பாளையத்தில்
மலைகளைத் தான்பிடுங்கி மதவீமன் வீசுகிறன்
குன்றுகளைச் சேர்த்தெடுத்துக் கொப்பெனவே சாடுகிறன்
ஆனை குதிரைகளும் அலறிக் கலங்கிடுமாம்
அச்சுகள் முறிந்ததனல் அனேகாதம் விழுந்திடுமாம்
வண்டில் முறிந்துசில மச்சுத்தேர் தாமொடியும்
ஜெனங்கள் மடிகிறவே செம்புரவி ஓடுறவே
கண்டங்கண்ட மாகிறவே கடுஞ்சேனை யத்தனையும்
அம்மாடி யென்றுசொல்லி அலைகிறவே பாளையங்கள்
செத்த ஜெனங்களென்றல் மட்டு மிதங்களில்லை
இரத்தாறு ஓடுறது ரணமிகக் கொப்புளிக்க
ஐயோ சிவனேயென்று அலையுறவே பாளையங்கள்
பார்த்து முடியாது பாவியவன் ஜனங்கள்
சொல்லி முடியாது துரியோதிரன் பாளையங்கள்
இந்த விதமாக எழில்வீமன் கொல்லுகிறன்
இப்படி யாகவே இவன்சண்டை பண்ணுகையில்
ஆணு லழகுமன்னன் அருச்சுனன் தன்னுடனே
வந்து எதிர்த்தாரே மாயர் பெருமாளும்

---

[1] எல்லவரை = எல்லாரையும்.

வில்வளைத்து நாரிபூட்டி வில்லைக்கு ணத்தொனித்தான்
மார்புரளத் தானெடுத்துத் தோள்புரள வாங்கிவிட்டான்
பாணம் வரும்விதங்கள் பார்க்க முடியாது
சொர்ண மழைபோலே சொரிகிறார் பாணமது
சங்கரன் மாரிபோலே சரமேல் சரம்விடுத்தார்
அருச்சுனன் பின்னிடையான் அகோரச் சரம்பொழிந்தான்
ஆகாயந் தன்னளவாய் அம்பாலே பந்தலிட்டு
சூரியனைத் தான்வளைத்தான் சூராதி சூரனவன்
வில்பிடித்த கைத்தலத்தில் மெத்தச் சிவப்பேறும்
வளைத்தவில் நிமிராமல் மாரிச் சரம்பொழிந்தார்
வாயுவி னஸ்திரமும் வருணாஸ் திரமும்விட்டார்
பின்னையும் அஸ்திரங்கள் பிரளயமாய்த் தாம்தொடுத்தார்
நாலு கடிகைமட்டும் நல்லசண்டை பண்ணினார்கள்
ஒருவருக் கொருவர் உவர்ந்துபின் வாங்காமல்
சண்டை யிடுங்களத்தில் தாக்கிப் பொருதலுற்றார்
விலக்குவா ரில்லையங்கே மிகுத்த சமாதனை
மாயன் பெருமாட்கு வருகுது கோபமெத்த
என்றுமில்லாக் கோபம்அன்று எழும்புது மாயருக்கு
விட்டபல பாணமெல்லாம் மட்டறுத்தான் வாள்விஜயன்
அருச்சுனரைக் கொல்லுதற்கு அரிராமர் கோபமதாய்
சக்கரத்தைத் தாமெடுத்தார் சாமி பெருமாளும்
கொல்ல நினைவுகொண்டார் கோபாலர் அருச்சுனரை
மந்திர தூபமிட்டு மாயவனு ரேதுசொல்வார்
அருச்சுனன் தன்சிரசை அரைநொடியில் வாங்குமென்றார்
சுழற்றி யெறிந்தாரே சுவாமியுஞ் சக்கரத்தை
சக்கரத்தை மந்திரித்து சாமியைக் கொல்லவென்று
எடுத்தானே விடுக்கவெண்ணி இமையோர்கள் தாமறிய
அதை-வாவென் றழைக்க வகையறியா னருச்சுனனும்

## சாமிபெருமாள் சக்கரமெடுக்கத் தனஞ்சயன் பதில்சக்கர மெடுக்க இருவரும் சமாதான மாகிறது.

கண்டார் பெருமாளுங் கனமோசம் வந்ததென்று
நாமல்லோ கற்பித்தோம் நல்விஜய னர்ச்சுனர்க்கு

சக்கரத்தை விட்டாக்கால் தானழைக்க வகையறியான்
சக்கரம் வந்ததானல் தலையைத் தறித்திடுமே
மோசம் [1]வருகுதென்று முகில்வண்ண ரேதுசெய்தார்
தன்னுடைய சக்கரத்தைச் சாமியார் தேரில்வைத்து
தேரைவிட் டிறங்கிவந்தார் ஸ்ரீராமர் பொட்டெனவே
கண்டானே அருச்சுனனும் கடுகி யிறங்கிவந்தான்
தேரைவிட்டுத் தானிறங்கி ஸ்ரீராமர்க் கெதிரானன்
ஒருவருக் கொருவர் உறவாடிக் கொண்டார்கள்

## எம்பெருமாளும் அர்ச்சுனனும் சமாதானமானதை திரியோதிரன்கண்டு பொருமைப்பட்டுச் சொல்லாமல் ஓடுகிறது.

கண்டான் திரியோதிரன் கரியமால் மோசமதை
தனஞ்சயனு மாயனுமே தழுவிவிளை யாடுவதை
எண்ணுது மெண்ணுகிறன் எரிநாகக் கொடியோனும்
மாயன் கெடுத்தானே வஞ்சனைகள் செய்தானே
கொல்ல நினைவுகொண்டு பெருமா ளழைத்துவந்தார்
நம்மையே கொல்லவென்று நாரண ரழைத்துவந்தார்
அறியாமல் வந்துவிட்டோம் அமாது செய்வோமென்று
மாயனை நம்பியிங்கே வந்தது நீதியல்ல
ஐவர் சகாயரென அவனியதிற் கேட்டிருந்தும்
அறிந்து மிருந்துநாம் அசீதமாய் மாளவந்தோம்
கொல்லுகிறே னென்றுவந்து கூடியுற வாடினரே
இனியிருக்க ஞாயமில்லை என்று வழிபிடித்தான்
ஆனையுஞ் சேனைகளும் அண்டவொண்ணப் பாளையமும்
தப்பி யிருந்த தளம்பெரிய சேனைகளை
கூட்டி நடந்தானே கொத்தும்போர் வீரியனும்
காடு செடிகடந்துக் கரியமலை தான்கடந்து
ஆறு சுனைகடந்து அநேகமலை தான்கடந்து
அத்தி நகரதனை அடுத்தான் சுயோதனனும்

[1] வருகுது=வருகிறது.

அந்தச் சமயமதில் ஆயரும் அருச்சுனரும்
ஒருவருக் கொருவர் உறவாடிப் போய்நடந்தார்
மலையேறி உச்சியினில் வாரு ரிருவருமாய்
தருமருந் துரோபதையும் தம்பிமா ரிருவருமாய்
கடுகி யெழுந்திருந்து கார்வண்ண ரைத்தொழுவார்
சாஷ்டாங்க மாகவே சரணமிட்டார் மாயவரும்
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டார்
பெருமாள் மனமகிழ்ந்து பிரியமுடன் வாழ்த்தியபின்
அல்லவரைக் கையமர்த்தி அரிராமர் வீற்றிருந்தார்
தரும ரிடத்தினிலே சாமியா ரேதுசொல்வார்
காலைக் கடன்முடித்துக் கையேந்திச் சபதபங்கள்
செய்துகொண் டிருக்கையிலே தேரேறி அந்தரமாய்
ஆரோஒரு கெந்தருவன் அதிகக் கெருவமதாய்ப்
போகிறவ னெனதுகையிற் பளிச்சென்று தம்பலத்தைத்
துப்பினன் சக்கரத்தைத் துணித்துவா வென்றனுப்ப
1 கிரீடியிடம் அபயமெனக் கெந்தருவ னோடிவர
எனக்குப் பகையான இயலான பாதகனை
ஆதரிக்க ஞாயமுண்டோ அமர்செய்யக் காரியமேன்
என்னோ டமர்பொருத இராசாவே ஞாயமுண்டோ
தக்க புகழுடைய தருமரவ ரேதுசொல்வார்
அறியாதான் செய்தபிழை ஆண்டவரே மனம்பொறுப்பீர்
தெரியாதான் செய்தபிழை தேவரீர் மனம்பொறுப்பீர்
இரவும் பகலுமே எப்போது முந்தமைத்தான்
நினையாத நேரமுண்டோ நீலவண்ண மேனியரே
உம்மைத் தொழுதல்லோ உலகாள வென்றிருந்தோம்
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
எவரைச் சதமென்பேன் இனியாரைத் தஞ்சமென்பேன்
உம்மையே தெய்வமென்று உயிர்கொண் டுலாவுகிறோம்
என்று வணங்கினர் இயலான தருமரவர்
உள்ளங் குளிர்ந்ததனல் உலகளந்தா ரேதுசொல்வார்

1 கிரீடி = அர்ச்சுனன்.

அருச்சுனரைத் தாம்பார்த்து அரிராம ரேதுசொல்வார்
சென்றது உன்சபதம் தேவேந் திரன்மகனும்
அபயமிட்ட பேர்களைத்தா னுதரிக்க வல்லபிரான்
செப்பியது தான்தவருன் தேவேந் திரன்மகனும்
மார்க்கண்ட னுக்காக மயேச்வரர் சொல்லிவிட்டார்
நிலையறியார் பரமசிவன் நிலையறிந்தான் நாமறியோம்
உன்னிலும் வல்லபிரான் உலகத்தி லாருமில்லை
சந்தோஷ மாச்சுது தர்மர்பஞ்ச பாண்டவரே
இந்த வனத்தைவிட்டு இனியவனம் போயிருங்க
ஏதுவினை வந்தாலும் என்னை நினைத்திடுங்கள்
போய்வாறே னென்றுசொல்லிப் பெருமா ளெழுந்திருந்தார்

## எம்பெருமாள் விடைபெற்றுத் தன்னிருப்பிடம் செல்லுகிறது.

ஐவரை வாழ்த்திவிட்டு அரிராமர் போய்நடந்தார்
காடு செடியுடனே கரியமலை தான்தாண்டி
மாயவனார் போனபின்பு வாள்விஜய னேதுசொல்வான்
வாராய்நீ கெந்தருவா வார்த்தையொன்று நீகேளு
உன்-ஆபத்துத் தீர்ந்தது ஆண்மையுள்ள கெந்தருவா
உன்த னரண்மனைக்கே உளமகிழ்ந்து போய்ச்சேரு
என்று விடைகொடுத்தார் எழில்விஜய ரருச்சுனரும்

## கெந்தருவன் அருச்சுனரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தன்னிருப்பிடம்போய்ச் சேருகிறது.

அப்போது கெந்தருவன் அருச்சுனர்க்குத் தெண்டனிட்டு
நான்செய்த பாவத்தை இராசாவே தீர்த்துவிட்டீர்
ஆபத்தைத் தான்தீர்த்து ஆதரித்தீர் அருச்சுனரே
உமக்கேது நான்தருவேன் உயிர்க்கொத்த ராஜாவே
பாராசாரி வெண்புரவி பஞ்சவர்ண நற்புரவி
சாகாப் புரவிநான் தருகிறேன்காண் அருச்சுனரே
உம்தம் ரதத்திற்கு உற்ற புரவியென்றான்

ஆணு லழகுமன்னன் அருச்சுன னேதுசொல்வான்
வனவாசந் தீர்ந்துநாங்கள் வந்த பிறகாக
அப்போது வேணுமென்று லப்புரவி தானனுப்பு
என்தன்மேல் தயவைநீ என்றும் மறவாதே
போய்வா வென்றுசொல்லிப் புண்ணியரும் விடைகொடுத்தார்
மாயனென்னும் கெந்தருவன் வணங்கியே தெண்டனிட்டு
போதச் சரணமென்று போய்நடந்தான் கெந்தருவன்
ஏழாம் வருஷமது முடிந்தது பஞ்சவர்க்கு
இந்தக் கதைதன்னில் இடறுக ளுண்டானல்
ஜகத்தினி லுள்ளவர்கள் சரியாக விக்கதையை
இகழ்ச்சியா யுள்ளவெல்லாம் புகழ்ச்சியாய்த் தாம்திருத்தி
அகத்தினிற் றன்பொருந்தி அன்பாகப் படித்துவந்தால்
சுகத்துடன் தாம்வாழ்ந்து சுவர்க்கபதி சேர்வார்கள்
இந்தப் படியாக வெப்போதும் வாழ்ந்திடுவார்
என்று-வாழ்த்தி விடைகொடுத்தார் மாயவனு ரப்போது
வாழிவாழி யென்றுசொல்லி வரமளித்தா ரீச்வரனுர்

ஏழாவது கேந்தர்வ பர்வதம்
முற்றிற்று.

---

# அ-வது குருபாரிஷி வனம்.



எட்டாம் வருஷம் பிறந்தது பஞ்சவர்க்கு
கூடை தலைமேலே குடிவாழ்க்கைக் கானகத்தில்
கோலிவைத்த சும்மாடு கூடைதலை மேலேவைத்தார்
மன்னிவைத்த சும்மாடு வனவாசம் போகிறுர்கள்
குருபா ரிஷிவனத்தில் குடித்தனமாய்ப் போகிறுர்கள்
அந்த வனத்தினிலே ஐவர் குடித்தனமாய்
ஐந்தடுக்குப் பர்ணசாலை அழகாக [1]வுண்டுபண்ணுர்

---

[1] உண்டுபண்ணுர்=உண்டாக்கினுர்.

எழுடிக்குப் பர்ணசாலை எழிலாக வுண்டுபண்ணர்
பர்ணசாலை மேலாகப் பஞ்சவர்கள் வீற்றிருந்தார்
அந்த வனத்தினிலே அநேகநாட் சென்றபின்பு

## துரோபதை வனசாரிவந்து பாரிசாத புஷ்பம் கேட்கிறது.

தோரா வடிவழகி துரோபதை நாயகியும்
ஒற்றை யொருநாளில் ஒன்றியாய்த் துரோபதையாள்
அந்த வனத்திலுள்ள அதிசயத்தைப் பார்த்துவா
வாத்திற் பெரியவராம் மகாரிஷி யானவராம்
யோகத்திற் பெரியவராம் உத்ரகுரு பாரிஷியும்
சாமியிலும் பெரியவராம் தவத்தில் மிகுந்தவராம்
அவர்-பூசைபண்ணுந் தீர்த்தமெல்லாம் [1]பொய்கைபோ லாகிறவே
ஓடுகிற தண்ணீரில் ஒதுங்கிவரும் பூமலரும்
[2] பாரிசாத பூமலரும் பரிமளமாய் [3]வீசுறது
ஆற்றி லடித்துக்கொண்டு அலைந்து வருகிறது
கண்டாளே துரோபதையாள் கடுகி மனதுகொண்டாள்
[4] மெத்தாசைப் பட்டாளே [5]வேல்பொருதுங் கண்ணளும்
எண்ணது மெண்ணுகிறு ளெண்ணித் துரோபதையும்
ஆரோடே சொன்னலே ஆகுமிந்த காரியங்கள்
எவரோடே சொன்னலே எடுத்தளிப்பா ரிம்மலரை
வெற்றி மதயானை வீமருடன் சொன்னேமானல்
பறித்துத் தருவார்காண் பரிமளத்தை நாமடைய
என்று நடந்தாளே இளங்கொடி துரோபதையும்
பர்ணசாலை மேலாகப் பாஞ்சாலி யோடிவந்து

---

1 பொய்கை=குளம்.

2 பாரிசாதம்=தெய்வ லோகத்திலுள்ள ஐந்து வித பூ மரங்களில் ஒன்று; பவள மல்லிகை.

3 வீசுறது=வீசுகிறது.

4 மெத்தாசை=மெத்த+ஆசை=அதிக ஆசை.

5 வேல் பொருதும் கண்ணள்=வேலாயுதத்தோடு, கூர்மைக்கும் உருவத்துக்கும் இணையாகாதென்று சண்டையிடுங் கண்களையுடையவள்.

## துரோபதை வீமனைப் புஷ்பங்கேட்கிறது.

வெற்றி மதயானை வீமனைத் தான்பார்த்து
ஏலப் பசுங்கிளியாள் இளங்கொடியா ளேதுசொல்வாள்
ஆண்டவனே ஐயாவே அடியே னொருவார்த்தை
காணாது கண்டேன்காண் கண்டாசைப் பட்டுவந்தேன்
பாராது பார்த்துவந்தேன் பார்த்தாசைப் பட்டுவந்தேன்
என்மனதுக் கேற்றபடி எனக்கு விடைதாரும்
வெற்றி மதயானை வீமரவ ரேதுசொல்வார்
பாஞ்சாலன் பெற்றபெண்ணே பச்சைப் பசுங்கிளியே
ஏது நினைத்துவந்தாய் எனக்கறியச் சொல்லுமென்றான்
தோரா வடிவழகி துரோபதையா ளேதுசொல்வாள்
1 அகிலாண்ட காவேரி ஆறொன்று வருகிறது
ஆற்றங் கரையருகில் அங்கொன்று வருகிறது
பரிமளத்தோ டிருக்கிறது பார்த்துவந்தேன் பாரிசாதம்

## வீமன் பாரிசாத புஷ்பம் கொண்டுவரப்போகிறது

வெற்றி மதயானை வீம னெழுந்திருந்து
இங்கே யிருபெண்ணே என்றெழுந்து நடந்தானே
நீண்டிடுங் கால்களுக்கு நெரிஞ்சிப்பூச் சல்லடமாம்
மண்டியிடுங் கால்களுக்கு மாதளம்பூச் சல்லடமாம்
குந்தியிடுங் கால்களுக்குக் குறிஞ்சிப்பூச் சல்லடமாம்
தூக்கிவைக்குங் கால்களுக்குத் துத்திப்பூச் சல்லடமாம்
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
தெண்டா யுதமெடுத்துச் சிலைவீமன் வாறானே
ஆற்றங் கரையோரம் அங்குவீமன் வாறானே
பூமரத்தைத் தேடிக்கொண்டு போறானும் வீமனவன்
ஓர்யோ சனைதூரம் உயரமுள்ள பூமரமாம்
இதுவென்ன சின்னமரம் இக்ஷணமே கொண்டுவாறேன்
ஏழுசுற்று வேலிகளாம் இருபக்கம் மாமலையாம்
மாமலை தன்மேலே வல்லனுமார் காவலதாம்

1 அகிலாண்டகாவேரி=அகண்ட காவேரி=பரந்த காவேரி.

பூவனத்திற் போவென்று போகையிலே வீமனவன்
வாசற் படிதனிலே வல்லனுமார் படுத்திருந்தார்
கண்டா ரனுமாரும் கரிவீ மனைப்பார்த்து

## வீமனுக்கும் அனுமாருக்கும் சண்டையாகிப் பின்பு சமாதானப்படுதல்

ஆரடா ராக்ஷதனே அஞ்சாமற் போகவந்தாய்
இந்த வனத்தினிலே ஏதுக்கு போறுயென்றார்
போகவிடே னென்றாரே போரனுமா ரப்போது
வெற்றி மதயானை வீமனுந் தான்கேட்டான்
கோபம் வருகிறது [1]கோலாகல வீமனுக்கு
சாணுண்டு இக்குரங்கு தடைப்படுத்து தென்றுசொல்லி
கையிரண்டு நீட்டிக்கொண்டு கட்டழகன் வீமனவன்
கோடை யிடிபோலே குத்தினான் நடுமுதுகில்
அவ்வடியின் ஓசையினால் அந்தவனம் கிடுகிடென்ன
அந்த வனத்திருந்த மிருகங்க ளத்தனையும்
மற்றும் ஒருவனத்தே மருண்டோடு கின்றனவே
அனுமார் மயிர்களெல்லாம் அயர்ந்து கொடுத்தனகாண்
கோபம் வருகிறது கோபாலர் தூதுவர்க்கு
என்னை யடித்தவனை இக்ஷணமே கொன்றிடுவேன்
என்றுசொல்லித் தானெழுந்து நின்றாரே நல்லனுமார்
அடித்தாரே வீமனையும் அடிவானத் திடிபோலே
கோடை யிடிபோலே குத்தினார் மார்கலங்க
அந்தஅடி பட்டவுடன் அங்கே களைத்தானும்
மண்மேல் விழுந்தானும் மல்லாந்த பாவனையாய்
விழிகள் பிதுங்கினவே விழுந்தானே மூர்ச்சையதாய்
மாண்டவன் போலவே மண்மேலே விழுந்தானே
அநேக நெடுநேரம் ஆன பிறகாக
மூர்ச்சை தெளிந்ததனால் முடிமன்னன் தானெழுந்தான்
கண்டாரே நல்லனுமார் கடிகியவ ரேதுரைப்பார்

[1] கோலாகலம் = ஆரவாரம் = பேரொலி.

என்னுடைய சண்டையிலே எவரும் பிழைத்ததில்லை
இவன்-ஆரோ தெரியாது ஆங்கார முள்ளவன்காண்
அடித்த அடியோடே அவனியில் விழுந்தாலும்
தவறி யெழுந்தானே தப்பிப் பிழைத்தானே
என்று மனதிலெண்ணி இயலனுமா ரேதுரைப்பார்
ஆரடா ராக்ஷதனே ஆங்கார முள்ளவனே
ஆரென் றிருந்தாய்நான் அரிராமர் தூதனல்லோ
இலங்கை யழித்தவன்நான் ராவணனை வென்றவன்நான்
அஞ்சனா தேவிபெற்ற அனுமந்தன் நானலவோ
என்னோ டெதிர்த்தொருநீ இனிப்பிழைக்கப் போருயோ
என்ற வுரைகேட்டு இயலான வீமனவன்
உற்றது கேட்டவுடன் மெத்தப் பயந்தவனும்
அண்ணலென் றறியாமல் அமரது செய்தோமே
என்று-பச்சைத் தழையுருவிப் பாதத்திற் றன்போட்டு
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டான்
ஐங்கால் வலம்வந்து அடிவணங்கித் தெண்டனிட்டான்
சரணஞ் சரணமென்று சாஷ்டாங்கத் தெண்டனிட்டான்
கண்டந்த நல்லனுமார் கடுகியே யேதுரைப்பார்
ஆரடா தம்பிநீ அறிய வுரையுமென்றார்
உன்-ஊரேது பேரேது உற்றார் பெற்றார்
ஆருடைய புத்திரன்காண் அறிய வுரையுமென்றார்
வெற்றி மதயானை வீமனவ னேதுசொல்வான்
என்தகப்பன் வாயுதேவர் என்தாயார் குந்தியம்மாள்
மந்தாரக் குந்தியம்மாள் பெற்றெடுத்த மகாராசர்
குந்தியம்மாள் பெற்றெடுத்த குலமணிக ளைவருண்டு
தருமர்க்குப் பின்பிறந்த தாக்குடைய வீமனென்பேர்
என்ற-இவ்வார்த்தை தான்கேட்டு ஏதுசொல்வார் நல்லனுமார்
உத்தமனே நாமிருவர் ஒன்றாய்ப் பிறந்ததனால்
என்னுடைய சண்டையிலே எவரும் பிழைத்ததில்லை
தம்பிநீ ஆகையினால் தப்பிப் பிழைத்தாயே
மாளாமல் நீ பிழைத்தாய் மதவீம னாகையினால்

என்று-ஒருவ ருடனொருவர் உறவாடித் தாம்பேசி
ஏது வகையாக இங்குவந்தாய் தம்பியேநீ
வந்த கருமமதை வாய்திறந்து சொல்லுவென்றார்
வெற்றி மதயானை வீமரவ ரேதுசொல்வார்
இந்த வனமதனில் வந்தோம் வனவாசம்
பாஞ்சாலன் பெற்றமகள் பஞ்சவன்ன நற்கிளியாள்
பாரிசாதப் பூமலரைப் பார்த்தாசைப் பட்டாளாம்
காணாத பூமலரைக் கண்டாசைப் பட்டாளாம்
அவட்குப்-பாரிசாதப் பூமலரைப் பறிக்கவென் றிங்குவந்தேன்
வேண்டிவந்த பூமலரை வேல்வேந்தா தாருமென்றார்
அவ்வார்த்தை தான்கேட்டு அனுமந்த ரேதுசொல்வார்
குருபர ரிஷிவனத்தில் கோடியுண்டு காவலர்கள்
ஏழுலக்ஷங் [1]கிங்கிலியர் இவ்வனத்தில் காவலுண்டு
இத்தனை காவலிலே எப்படிக்குப் போய்வருவாய்
அந்த ரிஷியறிந்தால் ஆக்கினை செய்திடுவார்
கொல்ல நினைப்பாரே குடிகேடு வந்திடுமே
ஆரு மறியார்கள் அவருடைய புட்பவனம்
என்னசெய்வேன் இளையவனே எப்படிப்போய் நீவருவாய்
உன்னை-வாள்முனையில் வைத்துக்கட்டி வனத்திலே விட்டிடுவேன்
ஆரு மறியாமல் அம்மலரை நீபறித்து
வாலை யசக்கிவிட்டால் எடுத்துநான் வந்திடுவேன்

## வீமன் அனுமார் வாலின்வழியாகச் சென்று ராக்ஷதரையெல்லாங் கொல்லுகிறது.

என்னவே-வாலிலே கட்டிக்கொண்டார் வல்லனுமார் வீமனைத்தான்
வாலைக் கிளப்பிமெள்ள வனத்திலே போகவிட்டார்
அசக்கிவிட்டா னென்றுவாலை அனுமாரும் [2]வாங்கினரே
வீமனைக் காணாமல் மெத்த மனந்தளர்ந்தார்
ஆயாசப் பட்டுக்கொண்டு அனுமந்தர் தாமிருந்தார்
வெற்றி மதயானை வீமனவ னேதுசெய்வான்

---

[1] கிங்கிலியர் = குற்றேவல் செய்வோர்.

[2] வாங்கினர் = இழுத்துக்கொண்டார்.

அந்த வனத்தினிலே அதிசயம் பார்க்கவென்று
சுற்றி வருகிறானே சுந்தரமா யவ்வனத்தை
மல்லிகை முல்லை மணமுள்ள சண்பகமும்
பாரிசாத புஷ்பமங்கே பரிமளம் வீசுறது
விரிகின்ற புஷ்பமரம் வேருடனே தான்பிடுங்கி
படுத்துப் புரண்டானே பரிமளத்தைத் தானறிந்து
அந்த வனமெல்லாம் அதம்பண்ணி வந்தானே

## பூமரங்களை வீமன் அதம்பண்ண, காவலர்கண்டு சண்டைபண்ணியதில், இறந்தவர்போக மற்றவர் ரிஷிக்குச் சொல்லல்.

அந்த வனத்திலே அநேகம்பேர் ராக்ஷதரும்
எல்லவருந் தாம்வந்து எட்டினார் வீமனண்டை
வந்து வளைத்தார்கள் மதகரியான் வீமனுடன்
எட்டினார் சண்டை எழும்புது சமருமப்போ
ஒருவருக் கொருவர் யுத்தங்க ளாகுது
வெற்றி மதயானை வீமன் வெகுண்டெழுந்து
அடிப்பான் கதையாலே அனேகம்பேர் கீழேவிழ
அனந்தம்பேர் ராக்ஷதரை அதமாக்கிக் கொன்றானே
இந்த விதமாக எண்கோடி ராக்ஷதரை
கொன்று வதைத்தானே கோடான கோடிகளை
கொன்றவர் தாம்போக நின்றசில ராக்ஷதர்கள்
குருபா ரிஷியருகே கொப்பெனவே ஓடிவந்தார்
அபய மபயமென்று அடிபணிந்து தெண்டனிட்டார்
ஏதுக் கபயமுமக் கென்ன கருமமென்றார்
ஆரோ அரக்கனவன் ஆங்கார முள்ளவன்காண்
சிங்காரப் பூவனத்தைச் சிரழித்தான் பாவியவன்
மரங்களைத் தான்பிடுங்கி வனமெல்லாம் அதமாக்கி
ஏழுலக்ஷம் ராக்ஷதரைத் துண்டுதுண்டாப் போட்டுவிட்டான்
இவ்வார்த்தை தாங்கேட்டு எரிக்குங் கதிரவன்போல்
காயுங் கதிரவன்போல் கண்சிவந்தார் குருரிஷியும்
கோபம் வருகிறது கொடுங்கால ருத்திரன்போல்

தேவர் முனிவர்களும் தீண்டொணுப் பூவனத்தே
என்னுடைய பூவனத்தில் எவரொருவர் வருவதில்லை
ஆரடா தூதுவரே ஆயிரம்பேர் போங்களென்ருர்
கைப்பிடியாய்ப் பிடித்தவனைக் கடுகெனவே கொண்டுவாருங்கள்
என்றசத்தங் கேட்டவுடன் எழுந்தார்க ளாயிரம்பேர்
வாயுவேக மாகவேதாம் வனத்திலே போயிறங்கி
ஆரடா ராக்ஷதனே ஆங்காரக் கோபமுடன்
வனத்தை அதமாக்கி வந்தவரைக் கொன்றவனை
எங்களையர் உன்னையிப்போ திட்டுவரச் சொன்னூரே
குலத்திற் பெரியவர்காண் குருபா மகாரிஷியும்
உன்னை-அழைத்துவரச் சொன்னுர்காண் ஐயரு மிப்போது
கடுகெனவே வாருமென்று கையைப் பிடித்திழுத்தார்
கையோடே கைபிடித்தான் கடியவே கையைவிட்டார்
ஆயிரந் தூதுவரை அரைக்ஷணத்தில் தட்டிவிட்டான்
அத்தண்ட பேர்களையும் அவனொருவன் கொன்றுவிட்டான்
நானொருவன் தப்பிவந்தேன் நல்வார்த்தை சேதிசொல்ல
என்றவன் கூறலுமே எழின்மா முனிகேட்டு
கோவைப் பழம்போலே கூர்விழிகள் தாம்சிவக்க
சவுரிப் பழம்போலே தன்னிரண்டு கண்சிவக்க
நெருப்புப்போல் கண்சிவக்க நெறுநெறென்று பல்கடித்து
சுவாச மனலெழும்பச் சுரணையொன்றுந் தோன்ருமல்
தானுக நேரில்வந்து சபிக்க மனத்திலெண்ணி
ஏறினுர் [1]கனகதண்டி யெழின்மா முனியவரும்
பார வனத்திருக்கும் பங்களா தன்னருகே

## புஷ்பவனத்தை யழித்தவனை சபிப்பதற்காக, குருபர முனிவருகிறதை எம்பெருமா ளறிந்து அனை வரையும் சமாதானப்படுத்துதல்.

வருகிற வேளையிலே மாய னிதுவறிந்தார்
காவலர்கள் பஞ்சவர்க்குக் கைமோசம் வந்ததுவே
மோசங்கள் வந்து முடிந்தவே பஞ்சவர்க்கு

[1] கனகதண்டி = பொன்முலாம் பூசின சிவிகை.

பொல்லாத காலம்வந்து புகுந்ததே பஞ்சவர்க்கு
ஆகாத காலம்வந்து அடைந்ததே ஐவருக்கு
உள்ளங்கை நெல்லிக்கனி உருக்குலைந்து போகுதையோ
தோளில் செபமாலை தொண்டழிந்து போகுதையோ
பெட்டியிலே ஆபரணம் பெருமை குலையுதையோ
குருபர ரிஷியுடனே எதிர்ப்பா ரொருவரில்லை
மாமாக்கிக் கல்லாக்கி வனத்திலே கொன்றிடுவார்
ஐவரைக் கொன்றிடுவார் அனர்த்தம்வர நாளாச்சே
காத்தது காத்தோமே கடைபோகக் காப்போமென்று
வட்டமாங் கருடனேறி வாருரே மாயவனுர்
ஐவ ரிருக்கின்ற ஆரணியம் வந்துவிட்டார்
சாயாம்பு மன்னவனுர் தருமருங் கண்டாராம்
கடுகி யெழுந்திருந்து கார்வண்ண ரைத்தொழுது
சரண மடைந்தார்கள் தர்மமுடி ராஜாக்கள்
சிங்கா தனங்களிட்டார் ஸ்ரீராமர் வீற்றிருக்க
இட்டசிங் காதனத்தில் ஏறி யிருந்தாராம்
சாயாம்பு மன்னவனுர் தருமரவ ரேதுரைப்பார்
இன்னேர வேளையிலே எம்பெருமா ளெங்குவந்தீர்
அடியாரைத் தேடிக்கொண்டு ஆண்டவரே வந்ததென்ன
வந்த கருமமதை வாய்திறந்து சொல்லுமென்ருர்
அடியளந்த மாயவனுர் ஆதிமூல மேதுசொல்வார்
நால்வரிருக்கையிலே நல்லதம்பி யெங்கே யென்ருர்
வெற்றி மதயானை வீமராஜ னெங்கேயென்ருர்
தரும ரறியேனென்ருர் தம்பியரைக் காணேனென்ருர்
தோரா வடிவழகித் துரோபதையா ளேதுசொல்வாள்
பாரிசாத பூமலரைப் பார்த்தாசைப் பட்டேனையா
பிரியமாய் வேண்டுமென்று பிணங்கினேன் வீமாசர்
பூபறித்து வாறேனென்று போய்விட்டார் வீமாசர்
மாயன் பெருமாளும் வார்த்தையங் கேதுசொல்வார்
கைமோசம் வந்ததுகாண் கபடமில்லாத் தருமாயர்
ஐவர்பஞ்ச பாண்டவரே அனர்த்தம் வரலாச்சே

குருபா ரிஷிவனத்திற் கொப்பெனவே போய்ப்புகுந்தான்
மரத்தைப் பிடுங்கியவன் வனநாச மாக்கிவிட்டான்
ஏழுலக்ஷம் ராக்ஷதரை துண்டுதுண்டாய்ப் போட்டுவிட்டான்
அந்த வனமதனை அதமாக் கினபடியால்
கொல்ல வருகிறுரே கொப்பெனவே மாமுனியும்
தவத்திற் பெரியவர்காண் சகலகலை வல்லவர்காண்
வரத்திற் பெரியவர்காண் வல்லகுரு பாமுனியும்
அதிகசாபம் தானிடுவார் ஐவரைக் கொன்றிடுவார்
என்னசெய்யப் போறேனென எம்பெருமாள் கூறுகையில்
அஞ்சிப் பயந்துமல்லோ ஆண்டவருக் கேதுசொல்வார்
இத்தனைநாள் காத்தீரே இன்றுகை விடலாமோ
அரக்குமா மாளிகையில் ஐவரைக்காத்தீரே
அம்பல வாசலிலே அபிமானங் காத்தீரே
ஆபத்தைத் தீர்க்கவந்த ஆண்டவரும் நீரலவோ
உம்மைவிட வேறுதுணை உற்றதுணை தானுமுண்டோ
காக்கக் கடனுமக்கு என்றுமவர் கைதொழுதார்
மாயன் பெருமாளும் வார்த்தையங் கேதுசொல்வார்
குருபா ரிஷியுடனே பேசிக்கொண்டு நானிருப்பேன்
அப்போது நாலுபேரும் அந்தவழி வந்திடுங்கள்
தருமரே யும்மைநானும் தாழ்ந்து வணங்குகிறேன்
உம்மை வணங்கும்போது உபசார வார்த்தை சொல்லும்
ஆரென்று கேட்பாரே அந்தகுரு பாமுனியும்
உம்மிலும் வல்லவர்காண் உண்மையுள்ள மாமுனிவர்
என்று உரைத்தாலே எழுந்து வணங்கிடுவார்
வணங்கி நமஸ்கரிப்பார் வாழ்த்தி யெடுத்தணைப்பீர்
வெற்றி மதயானை வீமனெதிர் வந்தாலும்
அடிபணிந்து தெண்டனிட்டு அவனைவணங்கி நிற்பேன்
அந்த ரிஷியாரும் ஆரென்று தாம் கேட்பார்
உம்மிலும் வல்லபிரான் உண்மையுள்ள மாமுனிவர்
என்றுசொல்லி நானிருப்பே னிவ்விதமா செய்யாவிட்டால்
அந்தகுரு பாமுனியும் அனர்த்தம்பண்ணிப் போட்டிடுவார்

ஆகையால் நான்போறேன் ஐவரே பின்புவாரும்
என்றுசொல்லித் தாமெழுந்தார் இயலான மாயவரும்
வாரூர் மெருமாளும் வனத்தூடு தாம்நடந்து
குருபா முனியெதிரே கொப்பெனவே வருகையிலே
மாயவரைக் காணுகையில் வணங்கினர் அம்முனிவர்
ஒருவர்க் கொருவர் உறவாடிப் பேசினர்கள்
மாயன் பெருமாளே வனத்திலே யெங்குவந்தீர்
இந்த வனமதனி லேதுவகை யாகவந்தீர்
வந்த வகையதனை வாய்திறந்து சொல்லுமென
மாயன் பெருமாளும் வார்த்தையங் கேதுசொல்வார்
வனசாரி யாகவந்தேன் குருபா மாமுனியே
வந்த இடத்திலிந்த வனத்திலும்மைக் கண்டேனே
இந்நேர வேளையிலே எங்குவந்தீர் சொல்லுமென்றார்
ஆரோ தெரியாது ஆங்கார முள்ளவன்காண்
வனத்திலே போய்ப்புகுந்து மாங்களைத் தான்பிடுங்கி
ஏழுலக்ஷந் தூதுவர்கள் யாவரையுங் கொன்றுவிட்டான்
பொல்லாத பாவியைநான் கொல்லவென்று போறேனென்றார்
அவ்வார்த்தை தாங்கேட்டு அரிராம ரேதுசொல்வார்
உம்முடைய வனத்தினிலே ஒருவர்வரப் போறதில்லை
தெய்வலோகத் துள்ளவரும் தீண்டாத பூவனத்தை
அமரர் சித்தர் முனிவராலும் அழிக்கவே யாகாது
ஐயரே உம்வனத்தை அதமாக்கும் பாதகனை
இக்ஷணமே கொல்லுகிறே னிட்டுவரச் சொல்லுமென்றார்
இருவரு மாகவேதாம் ஏகமாய்க் கொல்லவென்று
ஆரடா தூதுவனே அழைத்துவா ராக்ஷதனை
என்றவர் பேசுகையில் இயலான தருமாவர்
நகுலனைத் தாமனுப்பி நல்வீமற் கேதுரைப்பார்
அண்ணனும் தம்பியரும் ஆதிநா ராயணரும்
குருபா ருஷியருகே கூடிப்பேசி யேயிருப்பார்
கொல்லவென்று தூதுவரைக் கூட்டிவரச் சொல்வார்கள்
அப்போது தூதுவர்க ளழைத்தும்மைத் தாம்வருவார்

வந்தவுட னும்மையவர் வணங்கி நமஸ்கரிப்பார்
அப்போது அண்ணுவேநீர் ஆசிர் வதிப்பீரென்று
சொல்லிவரச் சொன்னூர்காண் துரிதமுட னேயென்று
தரும ரிவையுரைக்கத் தார்வேந்தன் நகுலனுமே
வாயுவேக மாகவந்து வீமனைக் கண்டானே
அண்ணு மதவீமா அண்ணல்கண்ணர் இருவர்களும்
இப்படிக்குச் சொல்லச்சொன்னூர் என்னையென்று மற்றதனை
வீமனுக்குச் சொல்லிவந்து விட்டான் நகுலனுமே
வனத்தில தருமரிடம் வந்துவிட்டான் நகுலனுமே
தம்பிமார் புடைசூழத் தருமர் வருகையிலே
அருகே வரப்பார்த்து அரிராமர் தாமெழுந்து
அடிபணிந்து தெண்டனிட்டு அவரை வணங்கிநிற்க
பார்த்தார் குருபாரும் பயந்தவரு மேதுசொல்வார்
எந்தவூர் எந்நாடு இவர்பேச்சைச் சொல்லுமென்றூர்
மாயன் பெருமாளும் வார்த்தையங் கேதுசொல்வார்
ஜெபத்திலும் தபத்தினிலும் செய்திடுமோர் நிஷ்டையிலும்
அதிக முடையவர்காண் அழகான தருமருஷி
ஆதி கயிலாசம் ஆனு ரிடந்தனிலே
உன்னுடைய பேர்விளங்க ஒருமணி அடிபடுது
முனிவரிவர் பேராலே மூன்றுமணி யடிபடுது
அன்னதா னங்களிலே அதிக முடையவர்காண்
யோகத்திற் பெரியவர்காண் உம்மிலும் வல்லபிரான்
ஏறெடுத்துப் பார்த்தாலே எரிந்துவிடும் லோகமெல்லாம்
பொய்வசனஞ் சொல்லாதார் புகழான தருமருஷி
என்று-தருமருஷி யாமவரைத் தழுவி யணைத்துக்கொண்டு
சிங்கா தனத்தின்மேல் சீராக வீற்றிருந்தார்
தக்க புகழுடைய தருமருஷி யேதுசொல்வார்
சாமி பெருமாளே சந்நியாசி யானவரே
இருவரு மாகவேநீர் இங்குவந்த வாறேது
என்றுதாம் சொல்லுகையில் ஏதுசொல்வார் மாமுனிவர்
தரும ருஷியாரே சாமியே நீர்கேளும்

என்னுடைய தோட்டமிதில் யாருமே வந்ததில்லை
அந்தா லோகத்து அமாரும் வந்ததில்லை
ஆரோவோர் அரக்கனவன் ஆங்கார முள்ளவன்காண்
வந்து புகுந்தானே வனத்தைப்பா ழாக்கிவிட்டான்
ஏழுலக்ஷம் ராக்ஷதரை துண்டுதுண்டாய்ப் போட்டுவிட்டான்
ஆகையா லிங்குவந்தே னவனை அத மாக்கவென்று
இவ்வார்த்தை கேட்டவுடன் ஏதுசொல்வார் தருமருஷி
உம்முடைய தோட்டமிதை அழிப்பா ரொருவரில்லை
இங்கே யழைப்பியுங்கள் இக்ஷணமே சபித்திடுவேன்
என்றவர் சொல்லுகையில் இட்டுவந்தார் வீமனையும்
சிக்கெனவே தாமெழுந்து ஸ்ரீராமர் மாயவரும்
சாஷ்டாங்க மாகஅங்கே சரணமிட்டார் வீமருக்கு
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டார்
கண்டார்குரு பாரிஷியும் கடுகியே யேதுரைப்பார்
அவன்-யாரென்று தெண்டனிட்டீர் ஆயன்பெருமாளே
என்றவர் கேட்கவுமே ஏதுரைப்பார் மாயாவர்
ஆனாலுங் கேளுமையா அரிய ருஷியாரே
ஆதி கயிலாசம் அரனரிடந்தனிலே
உம்முடைய பேராலே ஒருமணி யடிபடுது
தருமர்தம் பேராலே மூன்றுமணி யடிபடுது
இந்தருஷி பேராலே ஐந்துமணி யடிபடுது
யோகத்திற் பெரியவர்காண் உத்தம ரிஷியாரும்
ஆதி சிவனைவிட அதிக முடையவர்காண்
தினமூன்று வேளையிலே சிவனை மறவாதார்
அவரிருக்கு மிடங்களிலே அன்னக் களஞ்சியங்கள்
ஆரோ எவரோ அறியாமல் கொல்லவந்தேன்
இன்றவர் நினைத்தாரானால் யாவரையுங் கொன்றிடுவார்
என்றுசொல்லக் கேட்டவுடன் எழுந்தார் தருமருஷி
தருமருஷி யெழுந்திருந்து சாஷ்டாங்கத் தெண்டனிட்டார்
குருபா மாமுனியும் கொப்பெனவே தெண்டனிட்டார்
அடியார்கள் செய்ததெல்லாம் அய்யா மனம்பொறுத்து

தெரியாதார் செய்ததெல்லாம் தேவர் மனம்பொறுத்து
வனத்தை யழித்ததொரு மகிமையைச் சொல்லுமென்றார்
ஆசனம் போட்டார்கள் அமர்ந்து கொலுவிருந்தார்
அப்போது [1]ராமருஷி அங்கவர்க்கு யேதுசொல்வார்
குருபா ரிஷிபெருமை குவலயத்திற் சொன்னார்கள்
அந்தப்பேர் சொல்லுகையில் அதிசயப் பட்டிருந்தேன்
பார்க்க மனதாகிப் பார்தலத்தில் நான்திரிந்தேன்
அந்த வனந்தனிலே அனந்தங்கோடி ராக்ஷதர்கள்
என்தனைக் கொல்லஎன்று எழுந்தார்கள் தூதுவர்கள்
ஆரென்றுங் கேளாமல் அல்லவருங் கொல்லவந்தார்
[2] ஆக்ருஷம் வந்ததினால் அல்லவரைக் கொன்றுவிட்டேன்
இதுவே கருமமென்றான் இயலான வீமரிஷி
குருபா முனியவரும் கொப்பெனவே தெண்டனிட்டு
அடியார்கள் செய்ததெல்லாம் ஐயா பொறுமென்றார்
பாக்கியஞ் செய்ததினாலும் பாதங் கிடைத்ததுகாண்
கருதிதவஞ் செய்ததினால் காணக் கிடைத்ததுகாண்
பார்த்த படியாலே பாவந் தொலைத்துவிட்டேன்
வாராத தேவர்கள் வந்த படியாலே
என்னுடைய ஆச்சிரமம் எல்லாரும் வாங்களையா
பாலடிசி லுண்டபின்பு பழவர்க்கந் தான்புசித்து
போசனஞ் செய்துநீங்கள் போவீர்கள் வாங்களென்று
குருபா ரிஷியாரும் கொப்பெனவே தெண்டனிட்டு
பட்டுரத்னப் பாய்போட்டுப் பாய்மேலே அமருமென்றார்
மாயவருந் தருமரிஷி [3]மதம்பெரிய ராமரிஷி
தம்பிமார் நால்வருடன் தாமுங்கொலுவிருந்தார்
குருபா ரிஷியுமங்கே கொப்பெனவே தாமெழுந்து
தூதுவரைத் தாமழைத்துச் சொல்லுவா ரோர்வார்த்தை
ஆயிரக் கலஅரிசி அடிசில் சமையுமென்றார்

---

[1] ராமருஷி=பீமனுக்கிட்டமாறுபெயர்.

[2] ஆக்ருஷம்=கடுங்கோபம்.

3 மதம் பெரிய ராமருஷி=வீமன் முதலிய தம்பிமார் நால்வர்.

காய்கனியுங் கிழங்கும் கடுகச் சமையுமென்றார்
நல்ல பொரிக்கறியும் ராசாக்கள் போசனமும்
[1] அடிசில் சமைத்தோமென அடிவணங்கித் தெண்டனிட்டார்
குருபர முனிகேட்டுக் கொப்பெனவே தாமெழுந்து
கடுகச் சரணமென்று கைக்குச் சலங்கொடுத்தார்
பலாவின் இலைதைத்துப் படைத்தார்க ளன்னமதை
படைத்திட்ட சாதமுடன் கறிகளையும் புசித்தார்கள்
உபசாரம் பண்ணியவர் உண்ணுங்கள் சாமியென்றார்
அத்தண்ட பேர்களுந்தான் அமுது புசித்தார்கள்
சந்தனம் புட்பமுடன் தாம்பூலம் வாங்கிக்கொண்டார்
அத்தண்ட பேர்களுந்தாம் ஆலிங்கனஞ் செய்துகொண்டார்

## பஞ்சவரும் பெருமாளு மவரவரிடஞ் செல்லுகிறது.

போய்வாறே மென்றுசொல்லிப் போத நடந்தார்கள்
பர்ணசாலை தன்னருகே பஞ்சவர்கள் வந்தார்கள்
ஏழுலகை யாண்டவராம் எம்பெருமா ளேதுசொல்வார்
வெற்றி மதயானை வீமன்செய்த காரியத்தை
நாமிருந்த படியாலே நாடியும்மைக் காக்கவந்தோம்
அல்லாதே யாமானல் அனைவரு மாண்டிடுவீர்
எங்கே யிருந்தாலும் இடறல்லோ செய்கின்றான்
ஆகாத காரியங்கள் அழும்புகள் செய்கின்றான்
இந்த வனத்தைவிட்டு ஏகுங்க ளடுத்தவனம்
அந்த வனத்தினிலே ஐவரும் போயிருங்கள்
ஆண்டு கழிந்ததனல் அவ்வனத்தில் வீற்றிருங்கள்
போய்வாறே மென்றுசொல்லிப் போகலுற்றா ரெம்பெருமாள்
எட்டாம் வருஷமது முடிந்தது பஞ்சவர்க்கு

## எட்டாவது குருபரமுனிவனம்

## முற்றிற்று.

---

[1] அடிசில்=சோறு.

## ௬ - வது ரோமரிஷிவனம்.

அந்த வனத்தைவிட்டு அப்புறம் போகிறார்கள்
கூடை தலைமேலே குடிவாழ்க்கைக் கானகத்தில்
கோவிவைத்த சும்மாடு கூடைதலை மேலேவைத்தார்
மன்னிவைத்த சும்மாடு வனமே குடியிருப்பு
சுபரோம ருஷிவனத்தில் துரிதமுடன் வந்தார்கள்
ஐந்தடுக்குப் பர்ணசாலை அழகாக வுண்டுபண்ணார்
ஏழடுக்குப் பர்ணசாலை எழிலாக வுண்டுபண்ணார்
அந்த வனத்தினிலே ஐவர் குடியிருந்தார்
இப்படியாக இவரிருக்கும் வேளையிலே
ரோம மஹாரிஷியை நினைத்தாரே தருமாசர்

### ஐவரிடத்துக்கு ரோமரிஷிவரத் தருமர் தமது துன்பத்தை அவரிடத்தில் சொல்ல அவர் அதற்கு வழிமானஞ் சொல்லுகிறது.

ஆசனம் போட்டு அடிபணிந்தார் தருமாசர்
எந்தவூர் எந்தநாடு எங்கிருந்து இங்குவந்தீர்
ஊரேது பேரேது உத்தமரே சொல்லுமென்றார்
வந்த வயணமதை வகையாகச் சொல்லுமென்றார்
அப்போ தருமலிங்கம் ஆண்டவருக் கேதுரைப்பார்
குருகுல வமிசத்தில் குந்திமைந்த ரைந்துபேர்கள்
தருமன்நான் வீமனவன் தம்பி தனஞ்சயனும்
நகுலசகாதேவர் ராஜாக்களை வரையா
தருமா புரமென்னுந் தாரணியை ஆண்டிருந்தோம்
பங்குப் பகையாளிப் பாதிநாள் தாயாதி
சென்மப் பகையாளி சேனைநாள் தாயாதி
பெரியதந்தை பிள்ளையவன் போரான திரியோதிரன்
ஐவரைக் கொல்லவென்று ஆலோசனைகள் செய்து
விருந்துண்ண வாருமென்று விருந்தோலை தானனுப்ப
மெய்யான ஓலையென்று விரைவாகப் போனேனையா

வாற வழிதனிலே வைத்தானே தண்ணீர்ப்பந்தல்
வசநாபித் தண்ணீர்ப்பந்தல் வைத்தானே பாவியவன்
கொல்ல நினைத்தானே கொப்பெனவே யெங்களைத்தான்
தப்பிப் பிழைத்தோமே சாமியின் புண்ணியத்தால்
பின்னுமோர் யோசனையும் செய்தான் பெரும்பாவி
வருகிற வழியினிலே வசிகளை நாட்டிவைத்தான்
உருக்கூசி செப்பூசி ஒருகோடி நாட்டிவைத்தான்
எழுகூசி யனேகமொடு இருப்பூசி தான்புதைத்தான்
கோடிமுள்ளுங் கத்திகளும் குறுக்கே புதைத்துவைத்தான்
மாண்டு மடிவாரென்று வசிகளை நாட்டிவைத்தான்
தப்பிப் பிழைத்தோமே சாமியின் புண்ணியத்தால்
பின்னுமோர் யோசனை செய்தான் பெரும்பாவி
பொய்க்குழியை வெட்டிமேலே போட்டுவைத்தான் சிம்மாதனம்
ஆழக் குழியதனில் ஆட்களை யுள்நிறுத்தி
ஆயுதந் தன்னுடனே அவர்களை வைத்தானே
கொல்ல நினைத்தானே குருடன்மகன் [1]சத்ராதி
தப்பிப் பிழைத்தோமே சாமியின் புண்ணியத்தால்
பின்னுமோர் யோசனை செய்தான் பெரும்பாவி
எண்ணெயிட்டுக் கொள்ளுமென்று எங்களுக்குச் சொல்லியவன்
ஏழுலக்ஷம் மல்லர்களை எங்களிடந் தானனுப்பி
எண்ணெ யிடும்பொழுது எம்முயிரை வாங்குமென்றான்
அதற்கும் பிழைத்தோமே ஆண்டவனார் புண்ணியத்தால்
பின்னுமோர் யோசனையைச் செய்தான் பெரும்பாவி
அரைப்புக்கிண்ணங் கைகொடுத்து அபிஷேக மாடுமென்றான்
நீரில் வசிநாட்டி வைத்தானே நிர்மூடன்
பார வசிகள்தமைப் பர்வதம்போல் நாட்டிவைத்தான்
தப்பிப் பிழைத்தோமே சாமியின் புண்ணியத்தால்
பின்னுமோர் யோசனை செய்தான் பெரும்பாவி
உண்ணுகிற சோற்றினிலே ஒருகாய் மருந்தையிட்டான்
குடிக்கிற தண்ணீரில் கொலைகாரன் நஞ்சையிட்டான்

---

1 சத்ராதி=சத்துராதி=சத்துரு=பகையாளி.

தப்பிப் பிழைத்தோமே சாமியின் புண்ணியத்தால்
பின்னுமோர் யோசனையைச் செய்தான் பெரும்பாவி
சோழி விளையாடி [1]சொக்கட்டான் சூதாடி
நாடு தனைப்பறித்து ராச்சியத்தைக் கொள்ளைகொண்டான்
சீமைத் துரைத்தனமுந் தேசமுங் கொள்ளைகொண்டான்
ஐவரையுங் கெலித்தான் ஆஸ்தான முங்கெலித்தான்
காற்று நுழையாத கல்லறைக் கிடங்கில்வைத்தான்
ஐவருக்குந் தேவியரை அம்பலத்திற் கொண்டுவந்து
தமையன்தன் பெண்சாதி தாயென்று நினையாமல்
மூலையி லிருந்தபெண்ணை முற்றத்தி லிழுத்துவந்து
அம்பல மேற்றியவன் அவமானத் தாழ்வுசெய்தான்
வாடியென்றும் போடியென்றும் வம்புகள் பேசினனே
அரசர் சபைநடுவே அம்பலத்துத் துரைகள்முன்னே
சொல்லாதுஞ் சொல்லியவன் துகிலு முரிந்தானே
பார வனவாசம் பரதேசம் போனபின்பு
பன்னிரு வருஷங்கள் பாரவனந் திரிந்தபின்பு
[2] அக்கியாத வாசமல்லோ ஆரணிய மொருவருஷம்
வேஷம்விட்டு வேஷமாறி வீற்றிருங்க ளென்றுசொன்னன்
பதின்மூன்று வருஷஞ்சென்று பட்டணத்தில் வந்தாக்கால்
பங்குள்ள பிரகாரம் பாதிநாடு தாறேனென்றான்
ஆகையா லாண்டவரே ஆரணியம் வந்துவிட்டோம்
வருஷமொன் பதும்பிறக்க வந்தோமிவ் வனந்தனிலே
உங்கள் வனத்தினிலே ஒருவருஷம் வனவாசம்
இந்த வனத்தினிலே இருக்கச் செலவருளும்
உம்மை வருந்திநின்றேன் உண்மையுள்ள ருஷியாரே
என்றல்லோ தருமரவர் இரங்கியே தெண்டனிட்டார்
தவத்திற் பெரியவர்காண் சந்நியாசி யானவரும்
உற்றுற்றுக் கேட்டாரே உரோம ரிஷியாரும்
ஆயாசப் பட்டுமவர் அறவே மனஞ்சலித்து

---

[1] சொக்கட்டான்=சொற்கேட்டான்=ஒருவகைச் சூதாட்டம்.
[2] அக்கியாதவாசம்=மறைந்திருத்தல்.

இத்தனை வஞ்சனையாய் இடறுசெய்த பாவியவன்
கொல்ல நினைத்தானே கொடும்பாவி திரியோதரன்
நாடு கொடுப்பதில்லை ராச்சியந் தருவதில்லை
சீமை கொடுப்பதில்லை சிங்காதனம் தருவதில்லை
ஐவர்தம்மி லேயொருவர் அரன்பதியே போனீரானல்
ஆதிசிவன் கையில் அஸ்திரப் பேறுபெற்றல்
மாற்றானைக் கொன்றிடலாம் வையகத்தை ஆண்டிடலாம்
அல்லாதே யாமானல் அரசுனக்குக் கிடையாது
என்றது சொல்லுகையில் ஏதுசொல்வார் தருமராயர்
ஐவர்தம்மி லேயொருவர் அவ்விதியை யடையவென்றல்
ஆயர்சொல் லல்லாது ஆகா தொருகாலும்
மாயன்சொல் லல்லாது மற்றொன்று மாகாது
என்ற-அவ்வார்த்தை கேட்டதற்கு அரியரிஷி யேதுசொல்வார்
மாயன் பெருமாளை வாவழையு மிங்கேயென்றார்

## தருமர் எம்பெருமாளை நினைத்துத் தோத்திரம் பண்ணுகிறது.

சாயாம்பு மன்னவனர் தருமரவ ரேதுசொல்வார்
அடியளந்த மாயவரே ஆண்டவரே வாருமென்றார்
ஏழுலகை யாண்டவரே எம்பெருமாள் வாருமென்றார்
மச்ச வடிவுகொண்டு மறிகடலிற் பள்ளிகொண்டாய்
ஆலிலையிற் பள்ளிகொண்ட ஆண்டவரே வாருமென்றார்
தருமர் வருந்துகையில் சாமி யவாறிந்து

## தருமர் தோத்திரம் பண்ணினதை பெருமாளறிந்து தருமரிடம் வருதல்.

ஏழுலகை யாண்டவனர் எம்பெருமாள் வாராராம்
வட்டமாங் கருடனேறி மாயவனர் வந்துவிட்டார்
ஆயரைக் கண்டவுடன் ஐவருந் தாமெழுந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டார்
தேடித்தும்பை மலரெடுத்துச் சிங்காதனம் போட்டார்கள்
சிங்கா தனத்தின்மேலே ஸ்ரீராமர் வீற்றிருந்தார்
என்னை யழைத்ததற்கு ஏது கருமமென்றார்

மனதி லிருக்கின்ற மர்மமுரையு மென்றார்
சாயாம்பு மன்னவனார் தருமாவ ரேதுசொல்வார்
மற்றொன்று மில்லையையா மாயவரே நீர்கேளும்
இந்த வனத்திலே யிருக்கிற ரோமரிஷி
தம்மைத் தெரிசித்து வணங்கி யடிபணிந்தோம்
ஆரென் றெனைக்கேட்டார் அரிய மஹாமுனியும்
வந்த கருமத்தை விவரமாய் நானுரைத்தேன்
திரியோ திரன்செய்த சேதியெல்லாம் நானுரைத்தேன்
அத்தனையுங் கேட்டவுடன் ஆயாசப் பட்டார்காண்
திரியோ திரன்றன்னைச் செயிக்கவே வேணுமென்று
ஐவரி லேயொருவன் அரன்பதியே போகவென்றார்
பஞ்சவரி லேயொருவன் பரமன்பதி போகவென்றார்
ஆதி சிவனிடத்தில் அஸ்திரம் பெற்றுவந்தால்
மாற்றானை வென்றிடலாம் வையகத்தை ஆண்டிடலாம்
போங்க ளெனவுரைத்தார் புனித மகாமுனியும்
ஆகையா லும்மையிப்போ தழையுமென்றார் அந்தரிஷி
நான்-மயங்குகின்ற வேளையிலே வந்தீரே மாயவரே
இனிநடக்குங் காரியங்கள் எம்பெருமாள் சொல்லுமென
ஆயன் பெருமாளும் அவருமங் கேதுசொல்வார்
வாரும் பெரியவரே வனம்வாழ் தபோதனரே
ஐவர் களின்வார்த்தை அதிகார மென்தனக்கேன்
பஞ்சவர்கள் தங்களுக்குப் பாட்ட னிருக்கிறார்காண்
அவரையு மிவ்விடத்தில் அழைத்தாற் றெரியுமென்றார்
வேத வியாசர்தமை வேண்டி யழையுமென்றார்

## ஐவரும் வியாச பகவானை நினைத்து வணங்க வியாசர் வருதல்.

ஐவர்பஞ்ச பாண்டவர்கள் அப்பொழுதே வணக்கமுடன்
வேண்டி நமஸ்கரித்து வியாசரைக் கைதொழுது
வாருமென்று தாநினைக்க வந்தாரே வியாசரிஷி
சடையுஞ் சடையழகும் தம்பிரான் போலவாரார்
ஐவ ரிருக்குமந்த அடவியில் வந்தாரே

ஏழுலகை யாண்டவரும் எதிர்கொண்டார் வியாசருக்கு
ஐவ ரெழுந்திருந்து அடிபணிந்தார் இருவருக்கும்
ஆயரும் வியாசருமே ஆலிங்கனம் பண்ணிக்கொண்டார்
ஆசனத்து மேலாக அனைவோரும் வீற்றிருந்தார்
வேத வியாசருமே வேந்தரைப் பார்த்துரைப்பார்
என்ன கருமமாக என்னை யழைத்தீர்கள்
மனதி லிருக்கின்ற மருமத்தைச் சொல்லுமென்றார்
மாயன் பெருமாளும் வார்த்தையங் கேதுசொல்வார்
பரமன் பதம்நோக்கிப் பாரதவஞ் செய்யவென்று
பாசுபதப் பேறுபெற்றுப் பாரதத்தை வெல்லவென்று
ஆரைநாம் போகச்சொல்வோம் அரன்பாதம் காணுதற்கு
தருமரைப் போகவிட்டால் சாமிபதந் தானறியார்
வெற்றி மதயானை வீமனு லாகாது
நகுல சகாதேவ ராஜரா லாகாது
அர்ச்சுனனைப் போகவிட்டா லானுரைக் காணவல்லான்
பரம சிவனருகில் பாசுபதப் பேறுபெற்று
வேண வரம்வாங்கி விஜயன்வர வல்லவன்காண்
என்றுமவர் யோசனையாய் எழில்விஜய னைப்பார்த்து
பார்த்திபா அர்ச்சுனனே பரமன் பதிநோக்கி
ஆதிசிவன் பதிக்கு அர்ச்சுனநீ போறாயோ
கைலாச பதியிலே கர்த்தாவை நீகண்டு
அதிக வரப்பேறுபெற்று அர்ச்சுனநீ வாவென்னக்
காண்டீப ருச்சுனனுங் கடுங்காலை யேதுசொல்வான்
அடியேனை அனுப்பிவைத்தால் அவசியம் போய்வாறேன்
என்றனுமே எம்பெருமாள் அர்ச்சுனர்க்கு மேதுசொல்வார்
கைலாசம் போனாலே கட்டழகா சொல்வேன்கேள்
ஏகும் வழிதனிலே இருப்பார்கள் வேணபெண்கள்
மின்னரம்பை யூர்வசியும் மேனகை திலோத்தமையும்
அழகில் மிகுந்தபெண்கள் அனேகம்பேர் தாமிருப்பார்
கண்டால் விடுவதில்லைக் கடுகியே மோகங்கொள்வார்
பார்த்தாசைப் பட்டாலே பார்த்திபா விடுவதில்லை

கண்மூன் றுடையவரைக் காண அரிதாகும்
அல்லாதே யாமானல் அருச்சுன வுன்தனக்கு
போகிற வழியினிலே பெண்கள் தொடர்ந்தாலும்
தங்கை தமக்கையென்று தள்ளிவிட்டுப் போங்காணும்
பார்த்தாசைப் பட்டாக்கால் பரம சிவன்பாதம்
எத்தனை காலமாக இருந்துதவம் பண்ணலும்
பாரதவஞ் செய்தாலும் பரமசிவன் வந்தருளார்
பயபக்தி யாயிருந்தால் பரமசிவன் வந்தருள்வார்
அந்தியிலும் பகலிலும் அரையிரவு வேளையிலும்
நினைவு மறவாதே சிவனை நிலைநிறுத்து
மோனத் துடனறிவை மூட்டியே தவஞ்செய்தால்
சிவனர் மனமகிழ்ந்து சேனை வரந்தருவார்
முப்பத்து முக்கோடி முனிவரெல்லாம் கூத்தாட
நாற்பத்தெண் ணுயிரம்பேர் ரிஷிகள் நடம்புரிய
பார்வதி சமேதராய்ப் பரமசிவன் வந்திடுவார்
கோரும் வரங்களெல்லாங் கொடுப்பார் பரமசிவன்
அப்படிக்குப் போகவுன்ன லாகுமோ வாள்விஜயா
மாய னுரைகேட்டு வாள்விஜய னேதுசொல்வான்
ஆதி சிவனைநான் அரைநாழி மறந்திருக்கேன்
நேசமாய்ப் பெண்களென்மே லாசைமிகக் கொண்டாலும்
வார வழிமறித்து வார்த்தைகள் பேசினலும்
தாயென்பேன் தங்கையென்பேன் சாமியே நீயுமென்பேன்
கர்த்தாவைக் கண்டொருநான் கடுகிவரம் வாங்கிவாறேன்
போகச் செலவருளும் போய்வாறேன் சாமியென்றான்
அதுவுமே யல்லாம லாண்டவனே யென்தனக்கு
போற வழிதனிலே புதுமை நடந்தாலும்
சிவனர் பதியதனில் செய்யுந் தவமழிக்க
மழுவேந்துஞ் சிவனரும் வஞ்சனைகள் செய்தாலும்
ஏதுவினை வந்தாலும் என்தனக்குத் துணைவாரும்
மகாதேவ ரைக்கண்டு வாங்கிவாறேன் வரங்களென்றான்
அப்போது மாயவரும் அவ்வார்த்தைக் கேதுசொல்வார்

போற வழியினிலே பொற்கொடியா ளேலகன்னி
ஆதி சிவனைநோக்கி அருந்தபசு செய்பவள்காண்
அம்பல மான்போலே அழகில் மிகுந்தவள்காண்
அர்ச்சுனு வுனையணைய அதிகவரம் பெற்றவள்காண்
உன்னைக்-கலியாணம் பண்ணிக்கொள்ளக் கருதி யிருக்கிறாள்காண்
அவள்-வந்து வழிமறிப்பாள் வாள்விஜய மன்னவனே
மாதரைக் கண்டொருநீ வார்த்தையொன் றுஞ் சொல்லாதே
தாயென்றும் தங்கையென்றும் தார்வேந்தா சொல்லாதே
வரும்போது பெண்ணையுனை மாலையிட்டுக் கொள்வேனென்று
காயாம்பு மேனியனே கண்டங் கறுப்பழகா
தக்கது சொல்லிப்போ சாமியின் திருப்பதிக்கு
அதிகவரப் பேறுபெற்று அர்ச்சுனநீ வரும்போது
ஏலகன்னி மாதரசை இளங்கொடி நாயகியை
வடிவழகா அர்ச்சுனநீ மாலையிட்டு வந்துவிடு
மற்றொரு வினைவந்தால் வந்துநான் காத்திடுவேன்
போய்வருவா யென்றுசொல்லிப் பெருமாள் செலவுதந்தார்

## அர்ச்சுனன் சிவனைக்காணப் போவதற்குச் சோடித்தல்.

சூலபாணி தீபம்போற் சோடித்தா னர்ச்சுனனும்
எங்கெந்த முஸ்தீபு இளவிஜயன் தான்தரிப்பான்
ஐந்துசடை கொஞ்சிவா அழகுசடை மார்புரள
குத்துச் சடையங்கே குலுங்கவே அர்ச்சுனர்க்கு
உள்ளமெலா மிலிங்கம் உடம்பெல்லாம் வெண்ணீறு
ஆவியெல்லா மிலிங்கம் அங்கமெல்லாம் வெண்ணீறு
காவிகா சாம்பரமுங் கட்டினான் அரைதனிலே
அன்றுரித்த மான்தோலும் அழகான புலித்தோலும்
கன்று புலித்தோலும் கயிலாச மான்தோலும்
காதிலே குண்டலமுங் கையிற் கமண்டலமும்
ஏகவேஷ்டி தானணிந்தான் இயலான அர்ச்சுனனும்
பிரமமுடித் தாழ்வடங்கள் பெரியருத்தி ராக்ஷமணி
பஞ்சமணித் தாழ்வடமாம் பலவித மாலைகளாம்
நாகமணிக் கங்கணமாம் லாடமிகச் சங்கிலியாம்

வேலாயுதம் சூலாயுதம் வெண்புலித்தோ லாசனமாம்
அரைசுற்றிக் கிண்கிணியாம் அழகுமயில் தாழ்வடமாம்
குருயோக புத்தகமாம் சுரையோடு கமண்டலமாம்
கஞ்சாக் குடுக்கைகளாம் கௌதமர் சோளிகளாம்
சங்குஜெய கண்டிகையும் தாமணிந்தா ரருச்சுனரும்
கணுக்கால் சிலம்புகளாம் காலில் மிதியடியாம்
அஷ்டா பரணமெல்லாம் அருச்சுனர் தான்தரித்தார்
வியாசரும் மாயவரும் மிக்கவர மொன்றுதந்தார்
ஒருவன் சிவனேயென்ன உலகம் சிவனேயென்னும்
ஐவரு முன்தனக்கு அனுக்கிரகந் தந்தோமென்றார்
போய்வாரும் அருச்சுனரே பொன்னுலகந் தான்தேடி

## அருச்சுனன் ஈசுவரரைக் காணப்போகிறது.

அந்தச் சமயமதில் அருச்சுனனுந் தானெழுந்தான்
எல்லா ரையும்பணிந்து எழுந்தா னருச்சுனனும்
போய்வாறே னென்றுசொல்லிப் போனா னருச்சுனனும்
அருச்சுனன் போனபின்பு அங்கு வியாசருமே
பஞ்சவரை வாழ்த்திப் புறப்பட்டுப் போய்நடந்தார்
மாயன் பெருமாளும் வாழ்கருடன் மேலேறி
ஐவரை வாழ்த்திவிட்டு அரிராமர் போய்நடந்தார்
எல்லா ரையும்வாழ்த்தி யிருவருமே போய்நடந்தார்
வில்வேந்த னருச்சுனனும் விரைவாய் வனந்தேடி
காடு செடிதாண்டிக் கடுகியே வாறானே
ஆணையவன் காணவென்று அதிதுரித மாகவாறான்
சிவசிவா வென்றுசொல்லிச் சீக்கிரமாய் வாறானே

## எம்பெருமாள் பெண்வேஷமாய் வருகிறது.

அர்ச்சுனன் நினைவறிய அரிராம ரேதுசெய்வார்
மோககன்னிப் பெண்ணைப்போல முடிமன்னர் வடிவுகொண்டார்
சின்னஞ் சிறியபெண்ணாய் ஸ்ரீராமர் வடிவுகொண்டார்
மின்ன லொளிபோல மேகவண்ணர் வடிவெடுத்தார்
[1] அல்லார் தலைமயிரும் ஐந்துமுழம் ஆறுமுழம்

[1] அல் + ஆர் = இருள்போலக் கறுத்த.

காசாம் பழத்தினிலும் கறுத்த கறுப்பழகு
ஈச்சம் பழத்தினிலும் இருண்ட கறுப்பழகு
வாரிக் குழல்முடித்து மயிர்வாரி யுட்சொருகி
கொண்டைக்குக் குப்பியிட்டுக் கொலுசுமுத்துத் தொங்கலிட்டு
கம்மல் ஜிமிக்கைகளும் காதிலே யிட்டாராம்
கழுத்தி லணிந்தாராம் கனகமணித் தாழ்வடமும்
நல்லதொரு பொன்காறை நடுக்கழுத்தி லேதரித்தார்
ஒற்றைச் சரடுகளாம் ஒருபுறமாம் பொன்சரிகை
இரட்டைச் சரடுகளாம் இராஜாங்கப் பொன்சரிகை
முத்துச் சரப்பளியாம் மோகன மாலைகளாம்
அரைக்கிசைந்த ஒட்டியாணம் ஆடைமேற் றரித்தாராம்
காலுக்குத் தண்டைகளாம் கனத்த கொலுசுகளாம்
காலாழி பீலிகளும் கல்லணையும் புல்லணையும்
அழகு பணிகளெல்லாம் அலங்காரம் பண்ணிக்கொண்டார்
கதம்பமுஞ் சந்தனமும் கஸ்தூரி மணங்கள்வர
அன்னம்போ லேநடந்து ஆண்டவனார் வாறாரே
அருச்சுனன் போனதொரு அடவியிலே வந்துவிட்டார்
அருச்சுனனைத் தாம்பார்த்து ஆண்டவனா ரேதுசொல்வார்
ஐயா பெரியவரே அறிவுள்ள சங்கமரே
தீரப் படித்தவரே தெளிவுள்ள சங்கமரே
புதிய தவசுபண்ணப் புத்திமெத்தக் கற்றவரே
எங்கிருந்து போறீர்காண் இயலான சங்கமரே
கோடி சரணமையா கும்பிட்டேன் சுவாமியென்றார்
உம்மழகும் பாவனையும் உலகத்தில் கண்டறியேன்
உம்மைநான் கண்டவுடன் உருகுது தேகமெல்லாம்
என்றைக்கும் இல்லாத இச்சை வளர்கிறதே
காளை உமைமணக்கக் காதல் வளர்கிறதே
என்னைப்போ லுமக்கும் இச்சை வளராதோ
அரிவையென்னைப் போலுமக்கும் ஆசை வளராதோ
காத லதிகரித்துக் கன்னிமனம் வாடுகிறேன்
ஆசை அதிகரித்து அரிவைமனம் வாடுகிறேன்
என்மேல் மனமிரங்கி இச்சைவைக்க லாகாதோ
கன்னி யெனைமணக்கக் காதல்வைக்க லாகாதோ

மார்பழகும் தோளழகும் வண்ண முகத்தழகும்
என்னழகும் பாவனையும் ஏறெடுத்துப் பாருமையா
என்னைப்போல் பெண்களுமக் கெங்கே கிடைப்பார்கள்
தேடக் கிடையாது தேசத்திற் கிட்டாது
காணக் கிடையாது கலியுகத்திற் கிட்டாது
மங்கை யெனைவிரும்பி மணஞ்செய்து கொள்ளுமையா
கன்னி யெனைவிரும்பிக் கலியாணஞ் செய்யுமையா
மெல்லி யெனைவிரும்பி விவாகம் புரியுமையா
வாருமையா சங்கமரே என்று வழிமறித்தாள்

## அருச்சுனன் மோகினியைப் பார்த்துச் சொல்லுகிறது.

ஏறெடுத்துப் பார்த்தானே எழிலான அருச்சுனனும்
எண்ணாது மெண்ணுகிறான் இளவிஜய னப்போது
மாயவனார் சொல்லியுள்ள வார்த்தையெல்லாம் மெய்யாச்சு
என்றல்லோ வாள்விஜயன் ஏதுரைப்பான் கன்னிகைக்கு
ஆதிகை லாசமலை அரன்பதியே போறேனம்மா
கர்த்தாவைக் காணவென்று கைலாசம் போறேனம்மா
வம்புகளைச் சொல்லாதே வழிதனைநீ மறிக்காதே
பெற்று வளர்த்ததொரு பேர்பெரிய தாயலவோ
கூடப் பிறந்தவள்நீ கூட்டுப்பா லுண்டவள்காண்
தங்கை தமக்கையுநீ தாயாரு நீயலவோ
தூரநில்லும் ஆய்ச்சியரே தொடர்ந்துநீர் வாராதீர்
இடையநில்லும் ஆய்ச்சியரே என்னருகே வாராதீர்
என்று நடந்தானே ஏறெடுத்துப் பாராமல்
மற்றுமந்தக் கன்னிகையும் வார்த்தைக ளேதுசொல்வாள்
மணமென்று வந்தேனே மறுத்துநீ பேசலாமோ
பெண்சாதி யென்றுவந்தால் பெற்றதா யென்னலாமோ
ஆத்தா ளென்றெண்ணலாமோ அடுத்தமுறை வந்தாலே
தாயென்றுற் றூன்போமோ தனித்தமுறை வந்தாக்கால்
ஆண்டிக்கு முறையுமில்லை அரிவாளுக் குறையுமில்லை
எருதுக்குப் பேச்சுமில்லை இடையனுக்கு முறையுமில்லை
கன்னி யெனைமணந்தென் காதல்நோய் தீருமையா
காந்தர்வ மணஞ்செய்து கொண்டநோய் தீருமையா

தின்னப் பழமிருக்கச் சேனைதூரம் போவானேன்
கானலிலும் வெய்யிலிலும் காட்டுவழி போவானேன்
கட்டிலுண்டு மெத்தையுண்டுக் கால்பிடிக்கத் தாதியுண்டு
சோழிசதுரங்கமுடன் சொக்கட்டா னுடலாமே
தின்னநல்ல பாக்குமுண்டுச் செலவழிக்க ரொக்கமுண்டு
வாருமையா சங்கமரே மனைக்குநாம் போயிருப்போம்
[1] தானாக வந்தபெண்ணைத் தள்ளிவிட்டுப் போகலாமோ
போனாற் பலனுமில்லை [2]பித்தனைக் காணரிது
விளையாடிப் போனாலே [3]வித்தகரைக் கண்டிடலாம்
மனதைக் கரைத்தாளே வழிமறித்தாள் மோககன்னி
இவளுடைய வார்த்தைகளை இளவிஜயன் தான்கேட்டு
கோபம் பெருகியவன் கொல்ல மனந்துணிந்தான்
வில்லெடுத்துக் கைப்பிடித்து வில்நாரி பூட்டிவிட்டு
அம்பறாத் தூணியிலே அலகம்பைத் தானெடுத்து
கொல்ல நினைத்தானே கோதை மறைந்தாளே

## அருச்சுனன் பாணமெடுக்க பெண்மறைந்து பெருமாள் வருதல்.

கோபால கிருஷ்ணரவர் கொப்பெனவே தாம்மறைந்தார்
கண்டானே வாள்விஜயன் கர்த்தாவின் மாயையென்று
இளவிஜயன் அருச்சுனனு மினியவனம் போகையிலே
மாயன் பெருமாளும் வாறாரே யந்தவழி
வட்டமாங் கருடனேறி வாறாரே யந்தவழி
கண்டானே அருச்சுனனுங் கடுகியவன் தெண்டனிட்டான்
மாயன் பெருமாளும் வார்த்தையங் கேதுசொல்வார்
இந்நேர மெங்கிருந்தாய் இயலான வாள்விஜயா
என்னவே-காளையந்த அருச்சுனனுங் கடுகியே ஏதுசொல்வான்
மாயவரே சொன்னதுநீர் வனத்திலே மெய்யாச்சு

---

1 அர்ச்சுனனுடைய மனவுறுதியைச் சோதிக்க விரும்பிய கண்ணபிரான் இங்ஙனம் கூறினது பிசகல்ல.

2 பித்தன் = சிவபெருமான், இஃது, சுந்தரமூர்த்திசுவாமிகள் பாடிய "பித்தாபிறைசூடீ" என்னும்தேவாரத்தால் விளங்கும்.

3 வித்தகர் = ஞானசொரூபி = சிவபிரான்.

ஆரோ ஒரு தெய்வகன்னி அநேகநேர மெனமறித்தாள்
வந்து வழிமறித்து வார்த்தைக ளாடினளே
சொல்லாதுஞ் சொல்லியென்னைத் [1]தோதகங்கள் பண்ணினளே
என்றுசொல்லி அருச்சுனனும் ஏறெடுத்துப் பார்த்தானே
கன்னி இளமயில்போற் கழுத்திலே கருமணியும்
கண்டானே வாள்விஜயன் கடுகி நகைத்தானே
அனைத்துங் கலைத்தீரே ஆயன் பெருமாளே
மையைக் கலைப்பதற்கு மறந்திரோ மாயவரே
மணியை யவிழ்ப்பதற்கு மறந்தீரோ மாயவரே
பொட்டைக் கலைப்பதற்குப் புண்ணியரே மறந்திரோ
ஆபரணந் தான்கழற்ற அச்சுதரே மறந்தீரோ
என்னகோலம் கொண்டாலும் ஏற்குமையா உம்தமக்கு
என்றலுமே மாயவரும் அருளாளரேதுசொல்வார்
ஆயன் பெருமாளும் அங்கெனவே ஏதுசொல்வார்
மைத்துன உன்னுடைய மனவலிமை யென்னசொல்வேன்
அருச்சுன உன்னுடைய ஆண்மையு மென்னசொல்வேன்
வாள்விஜயா உன்னுடைய மனதறிய வந்தேன்காண்
[2] கர்த்தாவைக் காணவல்லாய் கடுகிவரம் வாங்கவல்லாய்
பாமனைக் காணவல்லாய் [3]பாசுபதம் வாங்கவல்லாய்
போய்வாரு மென்றுசொல்லிப் பெருமா ளனுப்பிவைத்தார்
ஆண லழகுமன்னன் அருச்சுன ராஜதுரை
விடைபெற்றுக் கொண்டானே வேந்த னருச்சுனனும்
அருச்சுனன் போனபின்பு அரிராம ரேதுசெய்வார்
வட்டமாங் கருடனேறி வந்துவிட்டா ரெம்பெருமாள்
காடு செடிதாண்டிக் கரியமலை தான்தாண்டி
ஓங்கி வளர்ந்ததொரு மூங்கில் வனந்தாண்டி
சில்லென்று பூத்ததொரு செடியும் வனந்தாண்டி
துவாரகா புரிதனக்குச் சுவாமியும் போய்ச்சேர்ந்தார்

ஒன்பதாவது ரோமரிஷிவனம்
முற்றிற்று.

---

[1] தோதகம்=வஞ்சனை. [2] கர்த்தா=சிவபெருமான்.
3 பாசுபதம்=பசுபதி பாணம்=சிவனார் கைப்பாணம்.

## ௧0-வது பேரண்டவனம்.

பத்தாம் வருஷம் பிறந்தது பஞ்சவர்க்கு
கூடை தலைமேலே குடிவாழ்க்கைக் கானகத்தில்
கோலிவைத்த சும்மாடு கூடைதலை மேலேவைத்தார்
மன்னிவைத்த சும்மாடு வனவாசம் போகிறார்கள்
அந்த வனத்தைவிட்டு அப்பாலே போகிறார்கள்
காடு செடிதாண்டிக் கரியமலை தான்தாண்டி
ஆறு சுனைதாண்டி அதிக வனந்தாண்டி
பேரண்ட வனத்திலேதான் பிரியமாய்ப் பஞ்சவர்கள்
வந்தார் குடித்தனமாய் வனத்திலே வாசம்பண்ண
ஐந்தடுக்குப் பர்ணசாலை அழகாக வுண்டுபண்ணார்
ஏழடுக்குப் பர்ணசாலை எழிலாக வுண்டுபண்ணார்
பர்ணசாலை மேலாகப் பஞ்சவர்கள் வீற்றிருந்தார்
இப்படி யாக இவரிருக்கும் வேளையிலே
[1] பூதநா தனைத்தேடிப்போறானே வாள்விஜயன்
அரகரா வென்றுசொல்லி அடித்தானே செயகண்டிகை
ஓம்சிவா வென்றுசொல்லி ஒலித்தானே சங்குதனை
ஒருவன் அரனேயென்ன உலகம் அரனேயென்னும்
ஒருவன் சிவனேயென்ன உலகம் சிவனேயென்னும்
இருண்ட வனத்தினிலே இருக்கிற பேரண்டன்
அனேகதூரம் போயிருந்தா னுகாரந் தேடிவா

### பேரண்டச்சி அருச்சுனனைக்கண்டு மோகித்தல்.

பேரண்ட ராட்சதன்றன் பெண்சாதி யானவளும்
தன்னந் தனியளாகத் தானிருந்தாள் மண்டபத்தில்
அரகரா வென்றசத்தம் ஆரணங்கு தான்கேட்டு
2 கொத்தளம்போல் மூக்கழகும் கோட்டைவழி போல்வாயும்

---

1 பூதநாதன்=சிவபிரான். 2 கொத்தளம்=புறமதில்.

[1] ஊண்மூஞ்சிக் குரங்குதலை ஒணான்போல் முதுகழகாம்
செம்பட்ட மயிரழகாம் சிங்கத்தின் பல்லழகாம்
பனைமரம்போற் பல்லழகாம் பருவதம்போற் கண்ணழகாம்
கழுத்தைச்சுற்றிக் கண்டமாலை இடுப்பைச்சுற்றி அரைக்கடுவன்
துடையைச்சுற்றிப் புண்ணிரத்தம் தோளைச்சுற்றிப் பெருஞ்சிரங்கு
பல்லில் படர்ந்திருக்கும் பாசிபடர் தாமரைபோல்
சீயுஞ் சிலைநீரும் தேகமெல்லாம் நாற்றம்வரும்
காயத்திற் படிந்தழுக்கு கற்றாழை நாற்றம்வரும்
அருகேவந்து நின்றாலே அசங்கித நாற்றம்வரும்
மரவுரியைத் தானுடுத்தி வாறாளே பேரண்டச்சி
ஆண்டி பெரியவர்தம் அருகில்வந்தாள் ராட்சசியும்
பண்டாரம் பெரியவரைப் பார்த்தாசைப் பட்டாளாம்
வாயைத் திறந்துமவள் வார்த்தைக ளேதுசொல்வாள்
நில்லுமையா சங்கமரே நெடுந்தூரம் போகாதீர்
உம்மாசைப் பட்டதல்லால் உலகில்வே றாசையில்லை
என்னழகும் பாவனையும் ஏறெடுத்துப் பாருமையா
அரைநாழி என்னுடனே உரையாடிப் போங்காணும்
வருவீர் வருவீரென்று வழிபார்த்துக் காத்திருந்தேன்
ஆசை அதிகரித்து அறிவு மயங்குதையா
என்மேல் மனமிரங்கி இச்சைவைக்க லாகாதோ
என்னைப்போல் பெண்ணுமக்கு எங்கே கிடைப்பாள்காண்
தேடிப் புறப்பட்டாலுந் தேசத்திற் கிட்டாது
அரிவை யெனைமணக்க ஆசைவைக்க லாகாதோ
என்னை மணந்திருந்தென் இச்சையைத் தீருமையா
காந்தர்வ மணஞ்செய்து களித்திருப்போம் வாருமென்றாள்
ஏறெடுத்துப் பாரானே என்னென்றுங் கேளானே
அரகரா அரனேயென்று ஆண்டியுந் தானடந்தான்
ஆசை அதிகரித்து [2]அரக்கியவள் ஏதுசொல்வாள்
பேரண்ட ராட்சசியும் பின்னேது வார்த்தைசொல்வாள்

---

[1] ஊண்மூஞ்சி=முரட்டுமூஞ்சி.

[2] அரக்கி=இராக்ஷசி.

கண்டாசைப் பட்டுவந்தேன் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை
என்னென்று கேட்கவில்லை ஏறமுகம் பார்க்கவில்லை
என்னைப்-பாராமல் போறீரே பாதக ராகையினால்

## பேரண்டச்சி அருச்சுனனுடன் சபதங்கூறல்.

என்புருஷன் வந்தபின்பு உம்மை வரவழைத்து
எனது மனதின்படி உம்மை மணம்புரிவேன்
என்று சபதமிட்டு இயலான ராட்சசியும்
ஆசை அதிகரித்து அப்பாலே தானடந்தாள்
காத லதிகரித்துக் கருத்தழிந்து போனாளே
வளையலைத் தானுடைத்து மார்பெல்லாந் தான்கிழித்தாள்
முகத்தி லறைந்துகொண்டு மோதிப் புலம்புகிறாள்

## பேரண்டச்சி யழுதகுரல் கேட்டு பேரண்டன்வருதல்.

அழுதகுரல் ஓசைதனை அறிந்தான் அவள்புருஷன்
ஏதுக் கழுகிறாள் என்னுடைய தேவியவள்
வயிறு பசியாகி வாய்விட் டழுதாளோ
என்று-ஐம்பது யானைகளை அவன்கையில் தானெடுத்து
சினந்து எறிந்தானே தேவி யருகில்விழ
பின்னும் புலம்புகிறாள் பேரண்ட ராட்சசியும்
ஏதுக் கழுகிறாள் இளங்கொடியா ளென்தேவி
இத்தனைநா ளில்லாதே இன்று புலம்புவதேன்
அறிந்து வருவோமென்று ஆங்கார முள்ளவனும்
ஏதுக் கழுகிறாய்நீ என்னுடைய தேவியரே

## பேரண்டச்சி தன்புருஷனுடன் தன்வரலாறு கூறிச் சண்டைக்குப் போகச்சொல்ல, பேரண்டன் சண்டைக்குப் போகிறது.

பேரண்ட ராட்சசியாள் பிரியமுட னேதுசொல்வாள்
மாலையிட்ட நாள்முதலாய் மனதுகுறை வந்ததில்லை
நான்-பெண்பிறந்த பாவமது போதுமையா என்றனக்கு
என்-பாவி தலையினிலே பத்தெழுத்தை யெழுதிவிட்டான்

செல்வத் தலையினிலே செப்போ டெழுதினது
அல்லல் படும்படியோ அமைத்துவிட்டார் பிரமதேவர்
ஐயையோ பெண்பிறப்பு ஆகாது என்னசெய்வேன்
நான்-புத்தியில்லா வாசியல்லோ போண்ட ராட்சசனே
வாற வழிதனிலே வைத்தீர் சமுசாரம்
என்னைத் தனியேவிட்டு இனிப்போக ஞாயமுண்டோ
உன்தேவி யாயிருந்தும் ஆருக்குப் பெண்டாவேன்
சுந்தரப் பெண் நானல்லோ சொரூப முடையவள்காண்
அழகில் மிகுந்தவளை ஆரோ ஒருவனவன்
பத்தினியா ளென்றெனையே பாராம லிங்கொருவன்
உத்தமியா ளென்றெனையே உணராம லிங்கொருவன்
ஆண்டி பெரியவன்காண் அரண்மனையில் வந்தான்காண்
வந்த பெரியவரை வணங்கியே தெண்டனிட்டேன்
கஞ்சாக் குடுக்கைக்குத் தண்ணீர்கொண்டு வாருமென்றான்
தண்ணீரும் நான்கொடுத்தேன் சரணங்கள் செய்தேனையா
நெருப்பெடுத்து வாவென்றான் நெருப்பைக் கொடுத்தேனே
அள்ளியே நீறுதந்தா னணிந்துகொண்டே னெற்றியிலே
வாடிநீ போடியென்றான் வலதுதொடை யேறுமென்றான்
கையைப் பிடித்திழுத்துக் கெடுதிசெய்யத் துணிந்தானே
பொல்லாங்கு செய்துவிட்டுப் போய்நடந்தான் சங்கமனும்
அவனைக்-கையும் பிடியுமாகக் கடிகியே கொண்டுவாரும்
அல்லாதே யாமானால் அநீதமாய் மாண்டிடுவேன்
என்று-பெண்டாட்டி யழுகையிலே போண்டன் தானெழுந்தான்
எழுந்தானே ராட்சதனும் என்றுமில்லாக் கோபமுடன்
ஆல மரம்பிடுங்கித் தோளிலே வைத்தவனும்
கோபித்துக் கண்சிவந்து கொப்பெனவே யோடிவந்தான்
நில்லுநில்லு சங்கமனே நெடுந்தூரம் போகாதே
ஆடா பண்டாரம் அறிவுகெட்ட சங்கமனே
என்தன்பெண் டாட்டிதனை என்தனிரு கண்மணியை
அழகில் மிகுந்தபெண்ணை [1] ஆகடியஞ் செய்ததென்ன

[1] ஆகடியம்=கொடுமை.

வழியிலே வீடுகட்டி வனத்திற் குடியிருந்தால்
பிச்சை யெடுக்கிறவன் பெண்டோ பிடிக்கிறவன்

## பேரண்டனுக்கும் அருச்சுனனுக்குஞ் சண்டை.

அரைநாழிக் கொள்ளையிலே அவசியங் கொன்றிடுவேன்
இக்ஷணப் போதையிலே எமபுரஞ் சேர்த்திடுவேன்
என்றே உருமிநின்றான் இயலான ராட்சதனும்
ஆண லழகுமன்னன் அருச்சுன னேதுசொல்வான்
வாடாநீ ராட்சதனே வார்த்தையொன்று நீகேளாய்
ஆதி சிவன்பாதம் அரன்பாதங் காணவென்று
பாரத் தவசுபண்ணப் பாமர்பதி போகையிலே
வாற வழிதனிலே வழிமறித்தா ளுன்தேவி
கண்டாசைப் பட்டேனென்றாள் கடுகிமையல் தீருமென்றாள்
பொல்லாதாள் தன்னையணைந்து போவென்று ளுன்தேவி
நான்-வாயைத் திறக்கவில்லை வண்ணமுகம் பார்க்கவில்லை
வீணான வார்த்தையிது மேல்போட்டு வாராதே
அநியாயச் சண்டையிது அமர்செய்து மாளாதே
என்னோ டெதிர்த்தையானால் இருதுண்டாய்ப் போட்டிடுவேன்
பெண்சாதி வார்த்தையினால் பிராண னொழிக்காதே
மாளுவது தருமமல்ல மன்னா நடவுமென்றான்
எத்தனை சொன்னாலும் இரங்காமல் ராட்சதனும்
எதிர்த்தா னமர்பொருத இருண்ட வனம்நடுங்க
கண்டா னருச்சுனனுங் கண்கள் சிவப்பேற
கோபம் பெரிதாகிக் கொல்ல மனந்துணிந்தான்
வில்வளைத்து நாரிபூட்டி வில்லைக் குணத்தொனித்து
காதுமட்டாய்த் தானிழுத்துக் கைக்கணையை வாங்கிவிட்டான்
பேரண்ட ராட்சதன்றன் பிராணனைப் போக்கவென்று
அலகம்பைத் தானெடுத்து அஸ்திரத்தைப் பூட்டிவிட்டான்
மந்த்ரவுப தேசஞ்செய்து மார்புரள வாங்கிவிட்டான்
மேலிட்டு ராட்சதன்மேல் விழுந்தது அஸ்திரந்தான்
பேரண்டன் தன்தலையை பிடரிவிட்டுத் தானறுத்தே

1 கொள்ளை=வழிமறிச்சண்டை.

## அருச்சுனன்பாணத்தால் பேரண்டன் தலைவிழ பேரண்டச்சி புலம்பல்.

அறுந்ததலை கீழேவிழ வாகாசமா யெழும்ப
மற்றொரு கணைதொடுத்தான் வாள்விஜய னருச்சுனனும்
அறுந்த தலையையுமே அவன்தேவி வாசலிலே
கொண்டுபோய்ப் போடுமென்றான் கொப்பெனவே வாள்விசயன்
அது-தள்ளி நடந்ததே சண்டாளன் தன்தலையை
அவனிறந்த பிற்பாடு அருச்சுனனுந் தானடந்தான்
அந்தச் சமயமதில் பேரண்ட ராக்ஷசியும்
தலைதனைத் தான்பார்த்துத் தன் புருஷன் தலையெனவே
கண்ணீரைச் சோரவிட்டுக் கதறிப் புலம்புகிறாள்
விழுந்தா ளெழுந்துநின்றாள் மண்மேலே புரண்டழுதாள்
மாரடித்துத் தோளடித்து மண்தூற்றித் தானழுதாள்
கோவென்ற சத்தமுடன் குமுறிப் புலம்புகிறாள்
மலையே பருவதமே மண்மேலே சாய்ந்தாயோ
மேரு மலையேநீ விண்ணுலகம் சேர்ந்தாயோ
நீமடியுங் காரியங்கள் நிண்ணயத்தை நானறியேன்
வச்சிரத் தூணேநீ மண்ணோ டொளித்தாயோ
இரும்பான தூணேநீ இற்று விழுந்தாயோ
எங்கேயோ வானம் இடித்தது என்றிருந்தேன்
தப்பாமலே வானந் தலையி லிடித்ததையோ
தெருவிலே கையைவிட்டுத் தினகரனைச் சாக்ஷியென்றாள்
சந்தியிலே கையைவிட்டுச் சந்திரனைச் சாக்ஷிவைத்தாள்
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
எவரைச் சதமென்பேன் இனியாரைத் தஞ்சமென்பேன்
பார்த்த முகங்களெல்லாம் வேற்றுமுக மாகுதையோ
மலையே பருவதமே மாண்டு மடிந்தாயோ
செம்மலையே பருவதமே செத்துமடிந்தாயோ
செத்து மடிந்தாயோ சிவலோகஞ் சேர்ந்தாயோ
மாண்டு மடிந்தாயோ வைகுந்தஞ் சேர்ந்தாயோ

நீமடியுங் காரியத்தின் நிண்ணயங்கள் நானறியேன்
சந்தன மிருபுஜத்தைச் சரியவெட்டிப் போட்டாரோ
குங்கும மிருபுஜத்தைக் குளிரவெட்டிப் போட்டாரோ
கொண்டை பறிகொடுத்த கோழியைப்போ லானேனே
[1] செட்டைப் பறிகொடுத்த செம்பருந்து போலானேன்
உன்னைப் பறிகொடுத்து [2]ஊதாரி போலானேன்
என்று-அடிவானத் திடிபோலே அழுதுபுலம்புகிறாள்

## பேரண்டைச்சி யழுகிறதுகேட்டுத் தெய்வகன்னிகள் வருதல்.

அந்தச் சமயமதில் அழகான தெய்வகன்னி
ஏழுபேர் கன்னியர்கள் இளங்கொடி மாதர்களும்
தீர்த்தங்க ளாடவென்று தெய்வகன்னி வாறார்கள்
அழுத குரல்கேட்டு ஆயாசப் பட்டார்கள்
ஒருவர்க் கொருவர் ஒற்றுமையாய்ப் பேசுகிறார்
ஆரோ தெரியாது அழுது புலம்புகிறாள்
இத்தனை நாள்வரையில் இவ்வோசை கேட்டதில்லை
அழுத குரல்கேட்டு அப்புறம் [3]போகொணாது
அழுத விடத்தினிலே யாவரும் போவோமென்று
புலம்பு மிடத்தினிலே பொக்கெனவே வந்தார்கள்
ஆரடி மங்கையரே அழுவதேன் உரையென்றார்
பேரண்ட ராட்சசியும் புரண்டழுது சொல்லலுற்றாள்
[4] ஆரைக் கழுத்தி அரைக்கழுத்தி யானேனே
[5] கோரைக் கழுத்திக் குறைக்கழுத்தி யானேனே
மஞ்ச ளிழந்தேன் மணமிழந்தேன் பூவிழந்தேன்
தாலிச் சரடிழந்து தலைவிரிக்க நாளாச்சே

---

1 செட்டை=சிறகு=செப்பட்டை.

2 ஊதாரி=அழிப்பவன்.

3 போகொணாது=போக+ஒண்ணாது=போகக்கூடாது.

4 ஆரைக்கழுத்தி=ஆர்+ஐ+கழுத்தி=தாலிச்சரடு நிறைந்த கழுத்தி.

5 கோரைக் கழுத்தி=கோர்வைக் கழுத்தி=பவளம் முத்துமுதலியவை கோர்த்த மாலை அணிந்த கழுத்தி.

ஏதென்று நானுரைப்பேன் என்னுடைய அக்கமாரே
ஆரோவொரு பண்டாரம் அரன்பதிக்குப் போறுன்காண்
வாடியென்றும் போடியென்றும் வம்பாகப் பேசினுனே
சொல்லாதும் சொல்லியென்னைச் சூதா யழைக்கவந்தான்
புருஷ னுடனுரைத்தேன் போய்க்கேட்டார் சங்கமனை
என்-கணவனைக் கொன்றுவிட்டுக் கடுகியே போனுன்காண்
மங்கிலியப் பிச்சை வாங்கொடுத்து போங்களம்மா
என்ற வுரைகேட்டு இயலான கன்னியர்கள்
ஆயாசப் பட்டுமல்லோ அதிக மனஞ்சலித்து

## தெய்வகன்னியர் அருச்சுனனைக்கண்டு இரங்கச் சொல்லல்.

சங்கமரைத் தேடிக்கொண்டு நடந்தார்கள் தையலர்கள்
ஐயா பெரியவரே அறிவைப் படைத்தவரே
தீரப் படித்தவரே தெளிவறிந்த சங்கமரே
புதிதாய்த் தவசுபண்ணப் புத்திமெத்தக் கற்றவரே
நில்லும்நில்லும் சங்கமரே நெடுந்தூரம் போகாதீர்
போற வழிதனிலே பொல்லாங்கு செய்யலாமோ
சீவ வதைகள்பண்ணிச் சிவன்பதியே போகலாமோ
ஆதி சிவன்வாழும் அரன்பதிக்குப் போனுலும்
கோரும் வரமுமக்குக் கொடுப்பாரோ பரமசிவன்
ஏனையா சங்கமரே இப்படிக்குச் செய்யலாமோ
ஆகாத காரியங்கள் அழிவுதேடிப் போகலாமோ
என்று மறித்தார்கள் இளங்கொடிமார் கன்னியர்கள்
ஆணு லழகுமன்னன் அருச்சுன னுமேதுசொல்வான்
சிவனுர் திருப்பதியைத் தெரிசிக்கப் போறேனென்னை
அவள்-வந்து வழிமறித்து வார்த்தைகள் பேசினுளே
சொல்லாதுஞ் சொல்லியென்னைத் தொடர்ந்து மறித்தாளே
அவள்புருஷன் தேடியென்னை அநீதமாய்க் கொல்லவந்தான்
எத்தனை சொன்னுலும் இரங்காமல் கொல்லவந்தான்
ஆயுதந் தன்னுலே அறுத்தேனே யவன்றலையை

என்மேலே குற்றமுண்டோ ஏனோ தடுக்கிறீர்கள்
என்னவே-இருவர் விசேஷமெல்லாம் எதிராகக் கேட்டிடுவோம்
வாருமையா வென்றுசொல்லி வாவழைத்தார் சங்கமரை
போண்ட ராட்சசியாள் புரண்டுருண்டு அழுமிடத்தே
அருச்சுன ராசாவை அழைத்துவந்து விட்டார்கள்
தெய்வலோகக் கன்னியர்கள் தேன்மொழியா ரேதுசொல்வார்
இருவர்தம் வார்த்தைதனை யெல்லா மிவர்கேட்டு
ஐயா பெரியவரே அறிவைப் படைத்தவரே
புதிதாய்த் தவசுபண்ணப் புத்திமெத்தக் கற்றவரே
பெண்ணின் பெரும்பிழையைப் பொறுத்தருளும் புண்ணியரே
அடியார்கள் செய்தபிழை ஆண்டவரே நீர்பொறுத்து
மங்கிலியப் பிச்சைதந்து மகாதேவர் பதிபோனால்
ஆதி சிவபெருமான் அதிக வரமருள்வார்
எங்கள் முகம்பார்த்து இவனை யெழுப்பிவிடும்
என்று வணங்கியவர் இரங்கியே தெண்டனிட்டார்
அருச்சுன ராஜாவும் அதிக மனமகிழ்ந்து

## தெய்வகன்னியர் அருச்சுனனைக்கேட்க அருச்சுனன் மகிழ்ந்து தேவேந்திரனுக்கு ஓலையெழுதி அனுப்புதல்.

சேமக் குருத்தோலை சிக்கெனவே தான்வாரி
வாரிய வோலையிலே வக்கணைகள் வைத்தெழுதி
என்னவென்று பச்சோலை எழுதுகிறு னர்ச்சுனனும்
அமரா பதியாளும் அன்புள்ள அப்பாவே
தெய்வலோக மாளுகின்ற தேவேந்த்ரா நமஸ்காரம்
மந்தாரக் குந்திபெற்ற வாள்விஜய னர்ச்சுனன்நான்
ஆதி சிவன்பாதம் அடியேனுங் காணவென்று
வாற வழிதனிலே போண்ட னைவதைத்தேன்
அமாது செய்தான்காண் அறுத்தே னவன்றலையை
போண்டன் தன்னுயிரைப் பிர்மலோகத் திருந்தாலும்
இங்கே யிருந்தவுயிர் எமலோகம் போனாலும்

அவனுடைய உயிர்தன்னை அனுப்பிவையும் ஐயாவே
என்தன் முகம்பார்த்து இக்ஷணம் அனுப்பிவையும்
அல்லாதே யாமானல் அமரா புரம்வருவேன்
தேவேந் திரன்பதியைச் சிதறவே கொள்ளைகொள்வேன்
ஆடுகொள்ளை மாடுகொள்ளை அழகான வீடுகொள்ளை
ஐயாவுன் பட்டணங்கள் அனைத்துமே கொள்ளைகொள்வேன்
என்றே எழுதினன் இயலான வோலையிலே
ஓலைச் சுருள்மடித்து உகந்து [1]செந்தி ரிக்கையிட்டு
வில்வளைத்து நாரிபூட்டி வில்லைக் குணத்தொனித்து
அந்தச்சுரு ளோலைதனை அம்புவாயில் தான்கொடுத்து
ஐந்து மணியசைக்கி அம்பேநீர் பாயுமென்று
மந்திர தூபமிட்டு வாங்கிவிட்டா னஸ்திரத்தை
மார்புரளத் தானெடுத்து தோள்புரள வாங்கிவிட்டான்
வருகுது அஸ்திரந்தான் வானுலகந் தான்தேடி
தேவேந் திரனுடைய தேசுமணிக் கம்பமதில்
வாள்விஜய னஸ்திரத்தால் மணியசைந் தாடினது
மணிக்கூண் டருகேவந்து வாங்கினன் அஸ்திரத்தை

## அருச்சுனனுடைய ஓலையைத் தேவேந்திரன்பார்த்து எமனிடத்தில் சென்று கேண்டபேரண்டன் உயிரைமீட்டு அனுப்புதல்.

செந்திரிக்கை ஓலைச்சுருள் தேவேந் திரன்விரித்து
எழுதிய வாசகத்தை இந்திரனுந் தான்படித்தான்
அதிலிருக்கும் லட்சணத்தை யாவு மறிந்துகொண்டான்
திக்கெனவே தானெழுந்து தேவேந்திரன் வருவான்
எமபுரந் தேடிக்கொண்டு எமனருகிற் போய்ச்சேர்ந்தான்
கண்டானே ஏமனவன் கடுகி யெழுந்திருந்து
எதிர்கொண் டழைத்தானே இட்டுவந்தான் மாளிகையில்
என்னகா ரணத்தாலே இங்குவந்தீர் ராசாவே

---

[1] செந்திரிக்கை=ஓலைச்சுருள்மூடி.

அத்திமரம் பூத்ததுபோல் அதிசயமாய்த் தோன்றுதுகாண்
என்ற பொழுதேயவ ரேதுசொல்வா ரிந்திரரும்
எல்லாருயிர்வாங்கும் எமதர்மா நீர்கேளும்
பொல்லாத பாவியவன் புகலும்பே ரண்டனுயிர்
இங்குவந்த துண்டானால் என்தனக்காத் தயவுபண்ணும்
என்று உபசாரணை இரக்கமாய்த் தாமுரைத்தார்
செக்கிலே போட்டவனைத் திருப்புறு ரன்னேரம்
எண்ணெய்யும் பிண்ணாக்கா யேற்படுத்தும் போதையிலே
பேரண்டன் தன்னுயிரைப் பொட்டெனத் தான்கொடுத்தார்
மாபா தகனுயிரை மைச்சிமிளி லேயடக்கி
அம்புவாய் தனிலடக்கி அனுப்பினா ரிந்திரரும்
அது-வாயுவின் வேகமாக வந்தது அருச்சுனர்முன்

## அர்ச்சுனன் பேரண்டனுக்கு உயிரளித்தல்.

மைச்சிமிளைத் தான்திறந்து வல்லுயிரை வெளியில்விட்டான்
வெண்ணீறு தான்போட்டு வேறுபட்ட தலையெடுத்து
அறுந்ததலை முண்டமுடன் அணைத்துத்தண் ணீர்தெளித்தான்
தட்டி யெழுப்பினனே தன்னுடைய பொற்பிரம்பால்
தூங்கி விழித்தவன்போல் திடுக்கிட் டெழுந்திருந்தான்
ஆரடா பண்டாரம் அறிவுகெட்ட சங்கமனே
என்று எழுந்தானே இயலான ராக்ஷதனும்
ஏழுபேர் கன்னியர்கள் இளங்கொடிமா ரேதுசொல்வார்
ஆங்கார ராட்சதனே ஐயரைச் சரணம்பண்ணு
அபசார முன்மேலே அநேககுற்றம் வந்திருக்க
உந்த னுயிர்கொடுத்தார் [1]உம்பர்பிரா னுக்குமடா
சாஷ்டாங்க மாகவே ஐயருக்குச் சரணம்பண்ணு
என்றுசொன்ன போதையிலே யிறங்கியே தெண்டனிட்டான்
சரணஞ் சரணமென்று சரணமிட்டான் பேரண்டனும்
இறந்துவிட்ட என்னுயிரை எழுப்பிவிட்டீ ராண்டவனே
உமக்கு-ஏது தரப்போறேன் இயலான சங்கமரே

---

1 உம்பர்பிரான்=தேவேந்திரன்.

ஆபத்து வேளையிலே அழைத்தால் வருகின்றேன்
உன்தனக் குதவியாக ஒத்தாசை பண்ணுகிறேன்
என்று உபசரித்தான் இயலான ராட்சதனும்
அனைவரையுங் கையமர்த்தி அர்ச்சுனனும் போய்நடந்தான்
அரகரா அரனேயென்று அரன்மேலே தியானமானன்
சிவசிவா சிவனே யென்று சிவன்மேலே தியானமானன்
ஒருவன் அரனேயென்ன உலகம் அரனேயென்னும்
ஒருவன் சிவனேயென்றால் உலகம் சிவனேயென்னும்
அடித்தானே செயகண்டிகை தொனித்தானே சங்குதனை
ஏலகன்னி தன்வனத்தில் எழில்விஜயன் போகலுற்றான்

## ஏலகன்னி அருச்சுனனைப்பார்த்து அழைத்தல்.

அரகரா வென்றசத்தம் அறிந்தாளே ஏலகன்னி
ஆரடி தாதிகளே அலங்காரத் தோழிகளே
[1] வாரவ ரார்காணும் மயிலனையீர் பாருமென்றாள்
திக்கெனவே தாமெழுந்துத் தெருவீதி வந்தார்கள்
வருகிற சங்கமனே மாதர்கள் தாமறிந்து
ஓட்டம் நடையுமாக ஓடிவந்தார் தாதியர்கள்
என்தாயே ஏலகன்னி எவரோ தெரியாது
ஆதிசிவன் போலே அழகு படைத்தவர்காண்
ஒருகாலும் வந்ததில்லை உச்சிதமாய் வாறார்காண்
என்றசத்தந் தான்கேட்டு எழுந்தாளே யேலகன்னி
தண்டை யசைந்திடவே தார்குழலாள் தானடந்தாள்
அருச்சுனரைக் கண்டவுடன் அதிக மயலானாள்
கண்டாசைப் பட்டாளே கட்டழகி யேலகன்னி
வடிவழகும் [2]ஒப்பனையும் வாள்விஜயன் சீரழகும்
உற்றுற்றுப் பார்த்துமவள் உள்ள முருகுகிறாள்
காத லதிகரித்துக் கட்டழகி யேதுசொல்வாள்
ஐயா பெரியவரே அறிவைப் படைத்தவரே

[1] வாரவர் = வருகிறவர். [2] ஒப்பனை = அலங்காரம்.

தீரப் படித்தவரே தெளிவறிந்த சங்கமரே
புதிதாய்த் தவசுபண்ணிப் புத்திமெத்தக் கற்றவரே
வருவீர் வருவீரென்று வழிபார்த்து நானிருந்தேன்
[1] எப்போ வருவீரென்று இந்தவனங் காத்திருந்தேன்
உன்னுசைப் பட்டிருந்தேன் உலகில்லே ருசையில்லே
காத லதிகரித்துக் களைப்பட்டுப் [2]போறேனையா
ஆசை அதிகரித்து அறிவு மயங்குதையா
இச்சை அதிகரித்து இதயம் உருகுதையா
கன்னி யெனைமணக்கக் காதல் உமக்கிலையா
வஞ்சி யெந்தனுட வண்ணமுகம் நீர்பாரும்
என்னிலும் அழகுடையாள் எங்குங் கிடையாது
தேடக் கிடையாது தேசத்திற் கிட்டாது
காணக்கிடையாது கருதினுற் கிட்டாது
அரிவை யெனைமணக்க ஆசை யுமக்கிலையோ
இளையாள் எனைமணக்க இச்சை யுமக்கிலையோ
கட்டிலுண்டு மெத்தையுண்டு கால்பிடிக்கத் தாதியுண்டு
பொன்னும் பொருளுமுண்டு பொக்கிஷங்கள் மெத்தவுண்டு
தின்னநல்ல பாக்குமுண்டு செலவழிக்க ரொக்கமுண்டு
ஆடவென்று ஊஞ்சலுண்டு அமர்ந்திருக்க மேடையுண்டு
பத்தி யுலாவுதற்குப் பர்ணசாலை மெத்தவுண்டு
மகிழ்ந்து விளையாடி மன்மதரே வீற்றிருப்போம்
வாருமையா வென்றுசொல்லி வருந்தியே தெண்டனிட்டாள்
ஏறெடுத்துப் பாரானும் இளவிஜய னருச்சுனனும்
ஏலகன்னி மங்கையவள் இளங்கொடியா ளேதுசொல்வாள்
ஏன்காணு மர்ச்சுனரே என்தன்முகம் [3]பார்க்கொணுதோ
முத்தான வாய்திறந்து உத்தாரஞ் [4]சொல்லொணுதோ
வாயைத் திறந்தாலே வச்சிர முதிர்ந்திடுமோ
வச்சிர முதிர்ந்தாலே வாரி யெடுக்கேனே

---

1 எப்போ = எப்போது. 2 போறேனையா = போகிறேனையா.
3 பார்க்கொணுதோ = பார்க்கவொண்ணுதோ.
4 சொல்லொணுதோ = சொல்லவொண்ணுதோ

தாளைத் திறந்தாலே தங்கம் உதிர்ந்திடுமோ
தங்க முதிர்ந்தாலே தடவி யெடுக்கேனோ
என்னோடு வார்த்தைசொன்னால் ஏது குறையுமக்கு
கல்லுங் கரைந்திடுமே கட்டை துளிர்த்திடுமே
இரும்புங் கரைந்திடுமே [1]இரங்கலையோ வும்மனது
மங்கை யென்னழகை முகந்திரும்பிப் பாருமையா
என்னை மணந்திரானால் இச்சை தெளிந்திருப்பேன்
கன்னி யெனைமணந்தால் காதல் தெளிந்திருப்பேன்
அரிவை யெனைமணந்தால் ஆசை தெளிந்திருப்பேன்
வாருமென்று சொல்லியங்கே மறித்தாளே ஏலகன்னி
வாயைத் திறவானும் வண்ணமுகம் பாரானும்
என்னென்று கேளாமல் ஏறமுகம் பாராமல்
சிவனை மறவாமல் சிவன்மேலே நினைவானன்
அரனை மறவாமல் அரன்மேலே நினைவானன்

## ஏலகன்னி அருச்சுனனைக் கோடுகிழித்து நிறுத்தல்.

ஏலகன்னி மாதரசி இளங்கொடியாள் கோபமுற்றாள்
ஏழுகோ டிழுத்தாளே இங்கேநீர் நில்லுமென்றாள்
உம்-குருவின்மே லாணையையா கோடுவிட்டுப் போகாதீர்
ஐவர்மே லாணைகண்டீர் அடிவிட்டுப் போகாதீர்
என்றாள்-தம்பி தமையன்மார் தாய்மேலே ஆணையிட்டாள்
ஆணையிட்டாள் ஏலகன்னி அரண்மனைக்குப் போய்ச்சேர்ந்தாள்
மாளிகை வாசலுக்குள் மண்டபத்தில் வீற்றிருந்தாள்
அவள்-வருவதற் குள்ளாக வாள்விஜயன் தன்மனதில்
எண்ணுதும் எண்ணுகிறான் ஏதேதோ நினைக்கின்றான்
ஆராரை யோநினைத்தான் அளவற்ற சிந்தையிலே
எவரெவரை யோநினைந்தான் எண்ணமற்ற சிந்தையிலே
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
எவரைச் சதமென்பேன் இனியாரைத் தஞ்சமென்பேன்
பார்த்த முகமெல்லாம் வேற்றுமுக மாவதனால்

---

1 இரங்கலையோ = இரங்கவில்லையோ.

யாரை நினைத்தாலும் இப்போது காப்பவரார்
ஆபத்தைக் காப்பதற்கு யாராலே ஆகுமென்று

## கோட்டில் நிற்கும் அருச்சுனன் காளியைத் தோத்திரம் செய்தல்.

அந்தவனக் கன்னியரை அருச்சுனன் தானினைந்தான்
சூலிக பாலியம்மா சுந்தரி ஓங்காளி
சண்டிப் பிடாரியம்மா சங்கரி ஏகவல்லி
மண்ணுப் பிடாரியம்மா வழக்காடும் மாகாளி
இந்த-ஆபத்து வேளையிலே ஆதரிக்க வேண்டுமம்மா

## அருச்சுனன் காளியை நினைத்ததனுல் காளிவந்து வரலாறு வினவல்.

என்று நினைத்தானே எழில்விஜயன் காளிதனை
வாள்விஜயன் வருந்துகையில் மாகாளி வருகின்ருள்
1 டேகையொரு கைம்மேலே டம்மானம் ஒருகையில்
வாளொரு கையினிலே வளைதடி ஒருகையில்
அம்புவில்லும் கைப்பிடித்தே ஆயத்த மாகவந்தாள்
ஆரடா தம்பிநீ அடவியிலே எனைநினைந்தாய்
ஊரேது பேரேதுன் வண்மை யெனக்குரைப்பாய்
என்றவள் கேட்கையிலே இரங்கிச் சரணமிட்டான்
ஆரென்று கேட்டாயே ஆய்ச்சியரே சொல்லுவன்கேள்
பாண்டுமன்னன் பெற்றெடுத்த பாண்டவர்கள் ஐவருண்டு
குந்திமா தேவிபெற்ற குலமணிகள் பஞ்சவர்கள்
ஐவரந்த பாண்டவரில் அருச்சுன ராஜனென்பேர்
மாயவனுர் மைத்துனனுன் வாள்விஜயன் என்போம்
ஆதிகை லாசமலே அரன்பதியே போகின்றேன்
அரனை நினைந்தொருநான் அருந்தவம் செய்வதற்குப்
போகிற வழிதனிலே பொற்கொடியாள் ஏலகன்னி
கலியாணம் பண்ணவென்று கடுகியெனை மறித்தாள்

1 டேகை=ஒருவிதபட்சி.

கோடு கிழித்தாளே குறுக்கே தடுத்தாளே
ஆணையிட் டெனைநிறுத்தி அரண்மனைக்குப் போனாளே
திரும்பிவரு வேனென்று தேன்மொழியாள் சென்றாளே
ஆகையால் என்தாயே அபயமிட் டுனையழைத்தேன்
என்றதைக் கேட்டவுடன் ஈசுவரி சொல்லுகின்றாள்

## காளியம்மை அருச்சுனனை ஆணைவிடுவித்து அனுப்புதல்.

அஞ்சாதே என்மகனே ஆணைவிட்டேன் தோஷமில்லை
முக்காலும் தோஷமில்லை முத்திரையை நீயகற்றி
நீதரித்த முத்திரையை நிலத்தினிலே வைத்துவிடு
இந்தவனங் கடந்தவுடன் என்தனைநீ நினைந்தாயேல்
உன்னுடைய முத்திரையை உனக்கே கொடுக்கின்றேன்
என்றுசொன்னாள் காளியம்மை ஈந்துவிட்டான் வாள்விஜயன்
தரித்திருந்த முத்திரையைக் கொடுத்துவிட்டுப் போனானே

## காளி அருச்சுனன்போல நிற்பதை ஏலகன்னி கண்டு, தான் அலங்காரம் செய்து கொள்ளுதல்.

வாள்விஜயன் போனபின்பு மாகாளி அம்மையந்த
அருச்சுனன்போல் ஆண்வடிவம் அழகாகக் கொண்டாளே
காவிகா சாம்பரத்தைக் கட்டினாள் அரைதனிலே
ஐந்துசடை கொஞ்சிவிழ அழகுசடை மார்புரள
இப்படிக்குக் காளியம்மை இருக்கின்ற வேளையிலே
ஏலகன்னி மாதரசி இளங்கொடியாள் அவசரமாய்
மஞ்சள் குளித்தாளே மையெழுதிப் பொட்டுமிட்டாள்
கூந்தலை-வாரி முடித்தாளே மான்சவுரி மயிர்சொருகி
கொண்டைக் கழகாகக் கொண்டைமயிர் தான்முடித்தாள்
சந்த்ரபிறை சூர்யபிறை தலையில் அணிந்தாளே
ஆண்மயிலும் பெண்மயிலும் அழகாகத் தான்முடித்தாள்
முத்தாலே சுட்டிகட்டி முன்னாலே தொங்கவிட்டாள்

காதுக்குப் பொன்னோலை கைக்கு வளையலிட்டாள்
சண்பகப்பூ நாசியிலே மூக்குத்தி சேர்த்தணிந்தாள்
தொடுத்தாள் ரவிக்கைதனைத் தோள்வங்கி அணிந்துகொண்டாள்
கண்ட சரங்களுடன் கல்லிழைத்த மோதிரமாம்
கொத்துச் சரப்பளியாம் கொத்துமுத்துத் தாழ்வடமாம்
முத்துச் சரப்பளியாம் மோகன மாலைகளாம்
1 தாயித்துக் கோத்தசன்னல் பின்னல்தாழ் வடமுடனே
கடகம் சரிபவளம் கைந்நிறையப் பொன்வளையல்
தண்டை கொலுசுகளாம் பாடகம் சதங்கைகளாம்
காலாழி பீலிகளாம் கல்லணையாம் புல்லணையாம்
அரையிலொட்டி யாணமிட்டாள் அலங்காரம் செய்துகொண்டாள்
பொன்னிழைத்த பட்டாடை பூவாடை தான்தரித்தாள்
சாந்துசவ் வாதுடனே சந்தனம்பூ சிக்கொண்டாள்
மருவு மருக்கொழுந்து மல்லிகைப் பூமுடித்தாள்
வாசனை குமுகுமென்று வனமெல்லாம் சூழ்ந்துகொள்ள
2 சங்கமரைக் காண்பதற்குத் தையலந்த ஏலகன்னி
மெத்த அவசரமாய் வெளியே புறப்பட்டாள்
தாதிகளே தோழிகளே தாழ்க்காமல் இப்போழுதே
3 கனகதண்டி எடுத்தொருநீர் கடுகவா வேண்டுமென்றாள்
தாதிமார் ஓடிவந்தார் 4தண்டிகை ஏந்திநின்றார்
மாதரசி-ஏறினாள் தண்டிகையில் எடுத்தார் நெடுங்குடையை
சங்கமர் தானிருக்கும் 5தாவுதேடி வருகின்றார்
வந்து-பல்லக்கை விட்டிறங்கிப் பாதஞ் சரணமென்றாள்
ஆணைவிட்டேன் தோஷமில்லை ஆண்டவனே வாருமென்றாள்
ஏறினார் தண்டிகையில் இயலான சங்கமரும்

---

1 தாயித்து (தெலுங்கு) - பொன்னால் கல்லிழைத்தும் இழைக்காமலும் ப்ாவக்காய் தமர்த்தங்காய் வடிவமாகவும் செய்துகொள்ளும் ஓர் ஆபரணம்.

2 சங்கமர் = அருச்சுன சந்நியாசி.

3 கனகதண்டி = பொன்முலாம்பூசிய பல்லக்கு.

4 தண்டிகை = சிவிகை = பல்லக்கு.

5 தாவு (தெலுங்கு) = இடம்.

இருவரையும் தண்டிகையில் எடுத்துவந்தார் தாதியர்கள்
இருவரும்-மாளிகை வாசலிலே வந்திறங்கி யுள்நுழைத்தார்
ஏலகன்னி-பட்டுரத்நப் பாய்போட்டாள் பண்டாரம் வீற்றிருந்தார்
தானுமோர் ஆசனத்தில் தங்கினுள் ஏலகன்னி

## ஏலகன்னி அருச்சுனனுக்கு விருந்திடச் சமையல்செய்தல்.

இளங்கொடிபோல் மங்கையரை ஏலகன்னி தானழைத்தாள்
அடிசில் சமையுமென்றுள் அரண்மனையில் எல்லார்க்கும்
சர்க்கரைப்பால் போஜனங்கள் சமையுங்கள் மாதர்களே
பஞ்சணை மெத்தையுடன் பள்ளியறை ஜோடியுங்கள்
என்றுள் அதுகேட்டார் எழுந்தார்கள் தாதியர்கள்
நித்தமுறை செய்கின்ற சித்தினித் தாதியர்கள்
பகல்முறை செய்கின்ற பத்தினித் தாதியர்கள்
இராமுறை செய்கின்ற இருபது தாதியர்கள்
எல்லாருஞ் சேர்ந்தார்கள் உல்லாச மாய்ச்சமைக்க
அடுப்புமெ முகுவார்கள் அருங்கோல மிடுவார்கள்
அம்மியைக்க முவுவார்கள் அக்ஷதைக்காப் பிடுவார்கள்
வெண்கலப் பானையிலே வெந்நீர் உலைசாய்ப்பார்
மண்கலப் பானையிலே தண்ணீர் உலைவைப்பார்
பால்சம்பாப் பச்சரிசி பதின்கலம் களைந்ததனை
உலையிலே போட்டார்கள் ஒருபக்கம் பொங்கியது
வழியாமல் இருப்பதற்கு வகையாகத் துடுப்பெடுத்து
துழாவிச் சமைத்தார்கள் சுத்தமாய் வடித்தார்கள்
கஞ்சி வடிந்தபின்பு கருத்துடனே மூடிவைத்தார்
வாழைக்காய் கொய்வார்கள் வழுதலங்காய்க் காம்பறிவார்
ஈழப் பலாக்காயை இளமுள் கழிப்பார்கள்
கொத்தவரைக் காய்தனைக் கூட்டி அரிவார்கள்
அவரைக்காய் ஒருகூடை அரிந்தார்கள் பக்குவமாய்
புடலங்காய் பொரியலுக்குப் பீர்க்கங்காய்ப் பச்சடிக்குப்
பறங்கிக்காய் அரிந்தார்கள் தப்பளம் பண்ணுதற்கு

[1] பாவற்காய் வறுவலுக்கு பருஞ்சுரைக்காய்ப் பொரியலுக்கு
எலுமிச்சை யூறுகாய்க் கிஞ்சித் துவையலுக்கு
பக்குவமாய் அரிந்தார்கள் பயற்றங்காய் கிள்ளிவைத்தார்
தேங்காய்த் துருவினார்கள் மாங்கா யரிந்தார்கள்
பிஞ்சு முருங்கைக்காய் பீர்க்கங்காய் சுண்டைக்காய்
காராக் கருணையுடன் காரை பிரண்டைகளும்
சிறுவள்ளி பெருவள்ளி சிறப்பான சேம்புடனே
அறுகீரை சிறுகீரை அகத்திவா ழைத்தண்டு
முன்னை முசுட்டையுடன் தூதுளை மூக்குரட்டை
எல்லாம் சமைத்தார்கள் எத்தனையோ கறிவகைகள்
கடலை உளுந்துபச்சை காரா மணிப்பருப்பு
அவரை துவரைமொச்சை அழகான சிறுபருப்பு
கொள்ளெள்ளு புட்டாசி கோதுமை யுங்கலந்து
பத்துவகை தப்பளமும் எட்டுவகைக் கூட்டமுதும்
ஆறுவகைப் பச்சடியும் அஞ்சுவகைப் பொரிக்கறியும்
நாலுவகைப் புளிக்கீரை நலமாகச் சமைத்தார்கள்
கீரைபுரட் டினார்கள் கீரைத்துவட் டினார்கள்
கீரை கடைந்தார்கள் கீரைதா ளித்தார்கள்
நீரைக் கருக்கிவைத்தார் மோரைப் பெருக்கிவைத்தார்
நெய்யை உருக்கிவைத்தார் நீலவிழிக் கண்மடவார்
சட்டிநன்றாய்க் காய்ந்தபின்பு சரியான நெய்யைவிட்டு
வெந்தயஞ்சீ ரகங்கடுகு வெடிக்கவிட்டார் வாசனைக்குக்
கருவேப்பி லையெடுத்துக் கறிக்களவாய்ப் போட்டார்கள்
சையுஞ்சை யும்மென்று தாளித்தார் தனித்தனியே
அந்த-மணங்கள் கமகமென்று மங்கையர்க்குப் புரையேற
எட்ட விருந்தவர்கள் தும்மினா ரெல்லாரும்
இருமினார் சிலபேர்கள் என்னவிது என்றார்கள்
இத்தனைவை போகமுடன் தாளித் தெடுத்தார்கள்
செம்பொன் புரிமணைமேல் சேரவடுக் கிவைத்தார்

[1] பாவற்காய்=பாகற்காய்.

ஊறிய காய்ச்சேர்ந்த உவமைகளை என்னசொல்வேன்
இஞ்சி எலுமிச்சை இயலான தமர்த்தைகளும்
நாரத்தை கிச்சிலியும் நல்லகடுக் காயுடனே
மூங்கிற் குருத்துகளும் முற்றுவள்ளிக் கிழங்குகளும்
அத்திக்காய் மாவிலிங்கம் அழகான தூதுவளை
வில்வக்காய் நெல்லியுடன் விளாம்பிஞ்சு புளியங்காய்
இஞ்சிவேர் களாக்காயும் இளம்பச்சை முட்கருணை
மாங்காய் மரியங்காய் மற்றும் பலவகைகள்
வற்றல் வகைசேர்ந்த வகைமானங் கேளுங்கள்
ஆதொண்டைக் காய்களுடன் அரிதான சுக்கங்காய்
பாவற்காய் கோவைக்காய் பச்சைமிள காய்மிளகு
தூதுளை கொத்தவரை சுகமான தக்காளி
பாவட்டை விதுகங்காய் பண்பான அவரைக்காய்
வற்றல் வகைதனைநான் எத்தனை என்றுசொல்வேன்
பழவகைகள் தாஞ்சேர்ந்த பலவகையைச் சொல்லுகிறேன்
மாம்பழம்வா ழைப்பழமா துளம்பழம்ப லாப்பழமும்
செவ்வாழைக் கருவாழைத் திரண்டகொட்டை வாழையுடன்
ஒட்டுமாங் கனியுடனே உருண்டகிச் சிலிப்பழமும்
அத்தி அருநெல்லி அழகுகொய்யாப் பழமும்
தமர்த்தம் பழங்களுடன் தலைவிரித்த தாழையுடன்
மற்றுமுள்ள பழவகைகள் தாதியர்கள் சேர்த்தார்கள்

## ஏலகன்னிக்குத் தாதிகள் பள்ளியறை ஜோடித்தல்.

அவர்களில் ஒருதாதி ஆரணங்கு தானெழுந்து
பள்ளியறை தாள்திறந்து பைங்கிளியாள் சுத்திபண்ணி
சாந்தால் தரைமெழுகி சந்தனத்தால் கோலமிட்டு
குங்குமந் தன்னாலே குளிரச் சுவர்பூசி
கண்மூன் றுடையவொரு கனவயிரக் கட்டிலிட்டு
மெத்தை விரித்ததற்கு மேலே யணைகோலி
காம்பரிந்த மல்லிகையைக் கட்டிலின் மேல்பரப்பி

கண்ணாடி சல்லிகட்டிக் கவரிமான் சுங்குவிட்டு
மாவிலைத் தோரணம்வெண் மல்லிகை மாலைகட்டி
எங்கு மலங்கரித்தாள் ஏலகன்னி முன்னாலே
வந்து பணிந்துநின்றார் மற்றவரும் வந்தார்கள்
அடிசில் சமைந்ததென்றார் அடிபணிந்து தெண்டனிட்டார்
கெண்டி நிறைதீர்த்தம் கொண்டுவந்து வைத்தார்கள்
ஏலகன்னி எழுந்திருந்தாள் ஜங்கமரும் எழுந்திருந்தார்
கைகழுவிக் கொண்டார்கள் கடுகியே வந்தமர்ந்தார்
வாழை யிலைபோட்டு வரிசையுடன் நீர்தெளித்தார்
இட்டாரே போஜனங்கள் அழகா யிருவருக்கும்
பச்சென்ற பழவகையும் பச்சடியும் வைத்தார்கள்
பொரித்த பொரிக்கறியும் பொன்போல் சிறுபருப்பும்
காராவின் நெய்வார்த்துக் கடுகிப் புசியுமென்றார்
சிமிட்டி முழிப்பதற்குள் செகமாதா காளியம்மை
வைத்திருந்த சாதமெல்லாம் மாயையாய் உண்டுவிட்டாள்
மற்றொருகால் சோறுகறி வட்டித்தார் தாதியர்கள்
மறுபடியும் போஜனத்தை மாயையாய் உண்டுவிட்டாள்
ஆயிரம் பேர்களுக்கு சமைத்த அடிசிலெல்லாம்
ஐயர் ஒருவருக்கே அன்புடனே வட்டியென்றாள்
கடுகளவு நாழிகையில் காளியம்மை உண்டுவிட்டாள்
இன்னஞ்சோ றில்லையோதான் என்பசி ஆறுகைக்கு
வயிறுபசி ஆறாமல் மாலையிட்டுக் கொள்வேனோ
மேதினியில் எப்படிநான் விவாகம்செய் வேனென்றான்
இவ்வார்த்தை தான்கேட்டு ஏலகன்னி ஏதுசொல்வாள்
ஏரியோ உம்வயிறு ஜங்கமரே என்னசொல்வேன்
மடுவோ குளமோவும் வயிறாகும் ஜங்கமரே
பெண்டுபிள்ளை யில்லாமல் பிழைத்தீரோ ஊர்திரிந்து
இன்றைய தினத்தினிலே போஜனம் இட்டாச்சு
நாளைய தினத்தினிலே நன்றாய்ப் புசித்திடுவீர்
வாருமென்று சொல்லியவள் வருந்தியே நீர்கொடுத்தாள்

வாய்கழுவிக் கைகழுவி மாளிகைக்குப் போய்நடந்தார்
இருவரும்-பள்ளியறை வீட்டினிலே பஞ்சணையில் வந்தார்கள்
ஏலகன்னி-ஜங்கமர் மனமகிழத் தம்புருவைத் தான்தொனித்தாள்
கின்னர வாத்தியங்கள் கோஷ்டமுடன் தான்படித்தாள்
காதாரக் கேட்டவுடன் காளியம்மை தான்மகிழ்ந்தாள்

## ஏலகன்னி தான் அறியாமையால் அருச்சுனன் என்று பேசப்போக காளி நான் அருச்சுனன் அல்ல என்று சொல்லல்.

காளியென் றறியாமல் காதலுடன் ஏலகன்னி
களிப்பாக வார்த்தைசொல்லிக் கலியாணம் செய்யுமென்றாள்
அவளைக்-காளியென் றறிந்துகொண்டு கைவிட்டாள் ஏலகன்னி
ஜங்கமரே-என்னைக் கெடுத்தீரோ என்பாவங் கொண்டீரோ
ஆணையிட்டு வந்தேனே அடிவைக்க ஞாயமுண்டோ
என்று-அருச்சுன ராசாவை அப்போதே போய்மறித்தாள்
நில்லும்நில்லும் ஜங்கமரே நெடுந்தூரம் போகாதீர்
ஆணையிட்டு வந்தேனே அடிவைக்க ஞாயமுண்டோ
என்னைக்-கலியாணம் செய்தபின்பு கடுக நடவுமென்றாள்
ஆனால முகுமன்னன் அருச்சுனன் ஏதுசொல்வான்
ஆதிகை லாசமலை அரன்பதிக்குப் போகின்றேன்
சிவனார்தம் கையாலே சேனைவரம் பெற்றொருநான்
திரும்பி-வருகிற போதுமண மாலையிட்டுக் கொள்ளுகிறேன்
என்னை மறுக்காதே ஏலகன்னிப் பெண்மயிலே
போகச்செ லவுதந்தால் போய்வருவேன் என்றானே
அவள்-ஆணையிட்டா லல்லாமல் அடியேன் செலவுகொடேன்
என்றது கேட்டவுடன் எழில்விஜயன் அப்படியே
ஆணையிட்டுத் தந்தானே ஆரணங்கை மணஞ்செய்ய
அப்போது-மாது செலவுதந்தாள் வாள்விஜயன் போய்நடந்தான்
அந்த வனங்கடந் தப்புறம் போகலுற்றான்
பத்தாம் வருஷம் முடிந்தது பஞ்சவர்க்கு

பத்தாவது பேரண்டவனம்
முற்றிற்று.

## கக - வது சபாமிருகவனம்.

அந்த வனத்தைவிட் டைவாந்த பாண்டவர்கள்
கூடை தலைமேலே குடிவாழ்க்கைக் கானகத்தில்
கோலிவைத்த சும்மாடு கூடைதலை மேல்வைத்தார்
மன்னிவைத்த சும்மாடு வனமே குடிபுகுந்து
காடு கடந்து கரியமலை தான்கடந்து
சபாமிருகந் தானிருக்குந் தனிவனத்திற் போனார்கள்
ஐந்தடுக்கு-அழகுபர்ண சாலையொன்றை அவர்க ளமைத்தார்கள்
ஏழடுக்கு- எழில்பர்ண சாலையொன்றை இசைவாய் அமைத்தார்கள்
இப்படி யாகவவர் சிலநா ளிருக்கையிலே
சபாமிருக வனந்தனிலே தனஞ்சயனும் அப்போது
வெள்ளானை வனந்தனிலே வில்விஜயன் வருகின்றான்
உலக மதிர்ந்திடவே உத்தமனும் வருகின்றான்
ஒருவனா னேயென்ன உலகமா னேயென்னும்
ஒருவன் சிவாவென்ன உலகம் சிவாவென்னும்
அரகரா என்றுசொல்லி அடித்தானே ஜெயகண்டி
சிவசிவா என்றுசொல்லி தொனித்தானே சங்கதனை
சங்குதொனி கேட்டவுடன் சபாமிருகந் தானெழுந்து
வால்கிளப்பிக் [1]கும்மாளமிட்டு வருகிறது விரைவாக
தன்னிழலைத் தான்பார்த்துத் தானோடும் அவ்வானை
கொமபினால் மலையையது குத்திக் கிளப்பிவிடும்
அருச்சுனனைக் கொல்லவென் றவ்வானை வருகையிலே

### அருச்சுனன் யானையைக் கொல்லுகிறது.

கண்டானே வாள்விஜயன் கண்கொள்ளாக் கோபமுடன்
வில்வளைத்து நாரியினால் குணத்தொனி செய்தானே
அர்த்தசந்த்ர பாணமெடுத் தஸ்திரத்தை வுச்சரித்தான்
மதகரியைக் கொல்லவென்று மார்புாள வாங்கிவிட்டான்

[1] கும்மாளம்=குமானம்.

அருச்சுனன் எய்தவந்த அர்த்தசந்த்ர பாணமது
மதயானை தன்னையங்கே வகுத்த திருபிளவாய்
வீரிட்டு விழுந்ததது வில்விஜயன் தன்கையால்

## அருச்சுனன் கையால் விழுந்தயானை ஒரு பிராமணனாக வருதல்.

ஆனை மடிந்திடவே அதிலொரு பிராமணன்தான்
பஞ்சாங்கப் பிராமணனாய்ப் பார்ப்பான் வெளியானான்
கண்டானே அர்ச்சுனனும் கடுகிப் பிராமணனை
வாரும் பிராமணரே மதயானை விழுங்கியதோ
என்றான் அதுகேட்டான் இயம்புகின்றான் பிராமணன்தான்
ஜங்கமரே கேளுமையா சிலவார்த்தை சொல்லுகிறேன்
தெய்வலோகத்திருக்கும் சிவனுடைய பூந்தோட்டம்
ஐயர்பூங் காவனத்தில் அதிகாரம் என்னதுகாண்
அம்மைபூங் காவனத்தில் அலங்காரப் பெண்களுண்டு
அம்மைவனத் தாரையர் வனம்போக வொண்ணாது
ஐயரின் வனத்தரம்மை வனம்போக வொண்ணாது
நான்- [1]ஒற்றை ஒருநாளில் உச்சிதத்தைப் பார்ப்பேனென்று
அம்மை வனங்களிலே அதிகாலை போகையிலே
ஆயிரம் பெண்களிலே அழகான பெண்ணொருத்தி
கண்ணுக் கினியபெண்ணைக் கண்டாசைப் பட்டேனே
பார்த்தாசைப் பட்டேனே பைங்கிளியைக் கைப்பிடித்தேன்
என்னைத் திமிறிவிட்டுச் சென்றாள் அம்மையிடம்
ஈச்வரியாம் அம்மையுடன் இச்சேதி உரைத்தாள்காண்
அம்மையது கேட்டவுடன் ஆதிசிவன் அருகேபோய்
உம்பர் பிரானிடத்தில் உரைக்கின்றாள் மனம்வருந்தி
ஐயரே உம்வனத்தில் அதிகாரஞ் செய்கிறவன்
என்வனக் கன்னிதனைக் கைப்பிடிக்க ஞாயமுண்டோ
என்றவள் சொல்லியதை ஈச்வரனார் கேட்டவுடன்
என்னை வாவழைத்தே ஈந்தார் பெருஞ்சாபம்

---

[1] ஒற்றை ஒருநாளில்=ஒருகாலத்தில்.

எப்போது சாபமிது தொலையு மெனக்கேட்டேன்
ஆதிகை லாசமலைக் கருச்சுனன் வரும்பொழுது
அவனைநீ கொல்வதற்கே அகங்கரித்துப் போகையிலே
அவனுமிகக் கோபமுற்றுக் கொன்றிடுவான் அம்பாலே
என்று ரதுபோல்நீர் என்சாபம் போக்கிவிட்டீர்
வாருமென்று னிருவருமாய் வனத்திலே போகின்றார்
போகையிலே பிராமணனும் புதுமையொன்று சொல்லலுற்றான்

## அருச்சுனனுக்குப் பிராமணன் குயவன் வரலாறு கூறுதல்.

வெகுமானம் பெற்றவவன் வீதி வருகையிலே
அந்திவந்து நெருங்கியதால் ஆதித்தன் போய்மறைந்தான்
காற்று மழையிடியுங் கடுகியே வந்ததனுல்
தேவடியாள் தெருவிலொரு திண்ணையோ ரந்தனிலே
வந்துதங்கி யிருந்தானே வான்மழை போமளவும்
அந்தச் சமயமதில் அவ்வீட்டுத் தேவடியாள்
போஜன முண்டபின்பு பொற்கலத்தைத் தான்கழுவி
ஜன்னற் கதவையவள் தாள்திறந் தூற்றினளே
மண்ணுடையான் தன்மேலே வந்து விழுந்ததது
சம்போ சிவனேயிச் சலந்தெளித்தார் ஆரென்றான்
அவ்வார்த்தை கேட்டவுடன் ஆரணங்கு தாசியவள்
அஞ்சிப் பயந்தவளாய் ஆரென்று கேட்கலுற்றாள்
மண்ணுடையான் நான்கண்டாய் மாதரசே இவ்வழியாய்
வந்தநான் இவ்விடத்தில் வான்மழைக்கா ஒதுங்கிநின்றேன்
ஆரோ தெரியவில்லை அள்ளி ஜலந்தெளித்தார்
என்றான் அதுகேட்டாள் எழுந்திருந் தோடிவந்தாள்
மெத்தப் பயந்தவனை வீட்டுக்குள் கொண்டுசென்றே
அபிஷேக மாட்டிவைத்தாள் அவனுக்கு மனமகிழ்ந்தே
ஈரமு லர்த்தியபின் இழைசேர்ந்த பட்டுடுத்தி
ஆபா ணந்தரித்தாள் அலங்காரம் செய்தாளே

போஜன மிட்டபின்பு புஷ்பமும் தான்கொடுத்தாள்
சந்தன தாம்பூலங்கள் தான்கொடுத்தாள் தையலவள்
அன்றிரவு விடியுமட்டும் அங்கிருந்து குயவனவன்
மறுநாட் காலையிலே வந்தானே வாழ்மனைக்கு

## குயவன் மனையாளுக்கும் குயவனுக்கும் தர்க்கம்.

குயவன் மனைவியவள் கொம்பனையாள் கண்டாளாம்
கணவனைக் கண்டவுடன் கண்ணீரைத் தானுகுத்தாள்
கோவென்ற சத்தமுடன் குமரி யழுதாளாம்
ஆரோ டுறவாக அமர்ந்திருந்தீர் மன்னவரே
என்னைவிட்டுப் பிரிவதற் கெப்படித் துணிந்தீரோ
வேசியர்கள் வீட்டினிலே விளையாடி வந்தீரோ
உம்முடனே பேசேனே உம்முகத்தைப் பாரேனே
இனியும்மை-பெற்ற தகப்பனைப்போல் பிரியமுடன் பார்த்திருப்பேன்
குருக்கள் உடைமைதனைக் கொள்ளைகொண்டு போனவர்கள்
தாயில்லாப் பிள்ளைகளைத் தலையில் அடித்தவர்கள்
சிசுவதை செய்தவர்கள் ஸ்திரீவதை செய்தவர்கள்
பாவிகள் சேருகின்ற பாழ்நரகில் சேர்ந்திடுவேன்
என்று சபதமிட்டாள் இளங்கொடியாள் அச்குயத்தி
இவ்வார்த்தை கேட்டவுடன் எரிபரந்தான் நீலகண்டன்
கண்கள் சிவந்தானும் காந்தாளப் பட்டானும்
மெய்யான வார்த்தைதனைத் தெரியாமற் சொல்லிவிட்டேன்
அதனைக்-கேட்டவுட னேயிந்தக் கிளிமொழியாள் புலம்புகிறுள்
என்று மனஞ்சலித்தான் இல்லாள் முகநோக்கி
இன்று முதலாக இனியுள்ள நாள்வரைக்கும்
உன்னுடனே பேசினுல் உனக்குத் தகப்பனென்றுன்
இவ்வார்த்தை தப்பிவிட்டால் எனக்கு வருங்கதிகள்
என்னவென்றுல்-அபயமென்று வந்தவனை அநியாயம் செய்தவனும்
குருநிந்தை செய்தவனும் கோநிந்தை செய்தவனும்
சேருங்க திகளாகும் தேன்மொழியே தெரிந்துசெய்வாய்
என்றுன்-இந்தப் படியாக இவர்கள் இருந்தார்கள்

## ஆதிசிவனும் பார்வதியும் பண்டாரவேஷமாக வந்து இருவரையும் ஒருமைப்படுத்தி மோக்ஷம் கொடுத்தல்.

ஆதி சிவனுக்கும் ஆதிபா மேச்வரிக்கும்
பொறுத்து முடியவில்லைப் பொல்லாச் சபதமது
இருவரையும் பேசுவிக்க ஈசுவரனுர் வருகின்முர்
மெத்தப் பெரியவராய் மேல்நாட்டுச் சங்கமாய்
ஐயர் பெரியவராய் ஆண்டி வடிவெடுத்தார்
அம்மை யுமையவளும் ஆண்டிச்சி வடிவெடுத்தாள்
விநாயகன் வீரபத்ரன் வேலேந்துங் கையனுடன்
அன்றுரித்த மான்தோலும் அழகான புலித்தோலும்
கன்று புலித்தோலும் கைலாச மான்தோலும்
சடையும் சடைமுடியும் தான்தரித்து வருகின்முர்
கதிரோனுேர் பாத்திரமாய்க் கையிலே வந்தமர்ந்தான்
வருகிறுர் பரமசிவன் வனமா வனங்கடந்து
காடு செடிகளுடன் கரியமலை தான்கடந்து
நீலகண்டன் வாசலுக்கு நிமலரும் வந்துவிட்டார்
அறிவுள்ள புண்ணியனே அன்புள்ள நீலகண்டா
என்பிள்ளை பெண்சாதி இங்கிவர்கள் எல்லோரும்
பசியோ டிருக்கின்றேம் பசியாற்றி நீயனுப்பு
பிள்ளை பசியாற்றில் புண்ணியமாம் உன்தனுக்கு
குழந்தைபசி யாற்றிவிட்டால் குமாரனைப் பெற்றிடுவாய்
உன்றனுற வின்முறையார் உன்னுடைய பெண்சாதி
எல்லாரும் சுகமாவீர் ஈச்வான் புண்ணியத்தால்
அனைவரும் சுகமாவீர் ஆதிசிவன் புண்ணியத்தால்
என்றுவெண் ணீறெடுத்தார் ஈந்தார் அவன்கையில்
வாங்கி யணிந்துகொண்டான் வணங்கியே தெண்டனிட்டான்
நான்செய்த பாக்கியத்தால் நீர்வந்தீர் ஜங்கமரே
நீர்வந்த காரணத்தால் நான்வாழ்ந்து சுகமானேன்
பத்துநா ழிகைப்பொழுதில் பண்புடனே நீங்களெல்லாம்

புசிப்பதற் கிங்குவந்தால் பசிப்பிணி ஒழித்திடலாம்
நீங்கள்-போஜனம் உண்பீர்கள் போய்வாரும் ஜங்கமரே
என்றான் அதுகேட்டார் ஜங்கமர் இயம்புகின்றார்

## ஈசுவரர் நீலகண்டன் மனஞ்சோதித்தல்.

போஜனம் பண்ணுகிற பொன்னான திருவோட்டை
நான்-இங்குவைத்துச் செல்கின்றேன் எடுத்துவை மறவாமல்
ஊர் திரிந்து நான்வருவேன் உன்வச மிருக்கவென்றார்
என்-பாட்டனார் நாளையிலே பண்ணின திருவோடு
பத்திரம்-பாத்திரம் கெட்டுவிட்டால் பழிவந்து நேருமென்றார்
என்றது கேட்டவுடன் இயம்புகின்றான் நீலகண்டன்
ஆனால் இதுகேளீர் ஐயா பெரியவரே
என்னுடைய தேவியுடன் இவ்வார்த்தை நீருரைத்து
சாதங் கறிவகைகள் சமைக்கவே சொல்லுமையா
பாகற் பந்தலின்மேல் பாத்திரத்தை வைத்துவையும்
என்றான்-மண்ணுடையான் வார்த்தைதனை யாதுடன் சொல்வதற்கு
ஜங்கமர்-மனைக்குள்ளே நுழைந்து மங்கைக் கறிவித்தார்
பந்தலின் மேலந்தப் பாத்திரத்தை வைத்தபின்பு
பாத்திரத்தைப் பார்த்திரென்று பக்குவமாய் நடந்துவிட்டார்
செப்பி நடந்தாரே திருநீல கண்டன்வாழ்
அத்தெருவு தான்கடந்தார் அடுத்ததெரு வுக்குவந்தார்
ஆத்தி மாநிழலில் ஆதிசிவன் அமர்ந்திருந்தார்
அந்தச் சமயமதில் ஆதித்தன் போய்மறைந்தான்
சுக்கலா தேவிமகன் சூரியன் போய்மறைந்தான்
குயவன் மனைவியவள் குடிவாழ்க்கை செய்திருந்தாள்
நேரங் கழிந்தபின்பு நீலகண்டன் எழுந்திருந்தான்
மண்ணுடையான் தானெழுந்து வாசலிலே வந்துநின்று
பாகற்பந் தலைப்பார்த்தான் பாத்திரமும் அங்கில்லை
தேவியெ திரில்வந்து திகைத்தாற்போல் நின்றுவிட்டான்
கைகாட்டி நீலகண்டன் கண்காட்டிக் கேட்டானே
அதற்குத்-தானறியேன் என்றந்தத் தையலும் ஜாடைசெய்தாள்

மனதுசஞ் சலமாகி மற்றொரு திருவோடு
மெத்த மனம்வருந்தி வேறொரு திருவோடு
பனிநீர் தெளித்துமண்ணைப் பக்குவமாய்ப் பிசைந்தெடுத்துப்
பத்தன்-ஆத்திரம் அவசரமாய்ப் பாத்திரம் செய்ததனைக்
கடுகியே சூளைபோட்டுக் கவிழ்த்துவைத்தான் பந்தலிலே
ஐயரும் அம்மையுமாய் அவசரமாய் வருகின்றார்
பரிவாரம் சூழவவர் பத்தனிடம் வருகின்றார்
திருநீலன் மாளிகையில் சிவசிவா வென்றுவந்தார்
கடுகியே நீலகண்டன் கைக்குச் சலங்கொடுத்தான்
கைகழுவிக் கொண்டுமவர் கடுகியே உள்நுழைந்தார்
பத்தன்-பாத்திரம் கொண்டுவந்தான் பண்டாரம் பார்த்துவிட்டார்
என்னுடைய பாத்திரந்தான் எங்கென்றார் பண்டாரம்
அது-வைத்துநீர் போனபின்பு மாயமாய் மறைந்ததையா
ஆகையா லாண்டவனே அக்ஷணம் இதுசெய்தேன்
என்றது கேட்டவுடன் ஜங்கமர் சொல்லுகின்றார்
என்-பாட்டனார் நாளையிலே பண்ணிவைத்த பாத்திரத்தை
நீ-ஏமாற்றி இல்லையென் றிம்மோசம் ஏன்செய்தாய்
மன்னனிடம் வாவிந்த வழக்கைநாம் சொல்வமென்றார்
மடிபிடித்து மற்றவனை இழுத்துவரு கின்றாரே
முடிமன்னன் தன்சபைக்கு முன்பாக வந்துசொன்னார்
பசிக்குணவு நான்கேட்டேன் பகலைக்கு வாருமென்றார்
மாணிக்கத் தாலிழைத்த ஆணிப்பொன் பாத்திரத்தை
இவனிடம் கொடுத்துவைத்தேன் இஷ்டரிடம் போயிருந்தேன்
பின்பு-வந்துநான் அதைக்கேட்டால் காணோமென் றிவன்சொன்ன [ன்
ஆகையி னலிவனை அழைத்துவந்தே னும்மிடத்தில்
நான்-அதிதி பரதேசி யாருமில்லை என்றனக்கு
ஆண்டி யுடைமையென்றார் அதனை இவனிடத்தில்
வாங்கியே தாருமென்றார் மன்னன் முகநோக்கி
என்றது கேட்டவுடன் எரிபறந்தான் மன்னனவன்
அறிவுகெட்ட பாதகனே அன்புகெட்ட நீலகண்டா
பரதேசி யுடைமையை நீ பறிக்கத் தகுமோடா

குயவனும் குயத்தியுமாய்க் கொள்ளை யடித்தீர்கள்
உங்கள்-இருவரையும் சும்மாநான் விடமாட்டேன் என்றுசொல்லி
இந்தக்-குயவன் குயத்தியரைக் கொப்பெனவே கட்டுமென்றான்
வெள்ளிப் பிரம்பாலே வீசி யடியுமென்றான்
கப்பற் பிரம்பாலே கட்டி யடியுமென்றான்
மாறி யடியுமென்றான் கணவன் மனைவியரை
இவ்வார்த்தை கேட்டெழுந்தார் இம்மெனவே காவலர்கள்
எருக்க மலாராலே எட்டி யடித்தாரே
புளிய மலாராலே புரட்டி யடித்தார்கள்
உள்ளம் நடுநடுங்க உடம்பெங்கும் பிளவுபட
உயிரும் துடிதுடித் துதிரம் வழிகிறது
அப்போது மன்னனிடம் ஆண்டியவர் ஏதுசொல்வார்
கட்டவிழ்த்து விடுமென்றார் கடுகியவ் விருவரையும்
அப்படியே அந்தமன்னன் அவர்களை விட்டுவிட்டான்
அவர்களை-ஐயாழைத் துக்கொண்டே அப்புறம் போகையிலே
அரண்மனையைத் தாண்டியவர் அப்புறம் போகையிலே
அவர்கள்தம் அன்பதனுக் கதிக மனமகிழ்ந்து
வெள்ளை ரிஷபமதில் காட்சி கொடுத்தாரே
சிங்கத்தில் ஈச்வரியாந் தேவி யமர்ந்துவந்தாள்
பேழை வயிறுடையோன் பெருச்சாளி வாகனத்தில்
கந்தர் மயில்மேலே கடுகியே வந்துநின்றார்
தத்தமது வாகனத்தில் சாமிகளும் ஏறிவந்தார்
வந்தா ரெதிராக மண்ணுடையான் கண்டுவிட்டான்
சரணஞ் சரணமென்று சாஷ்டாங்க தெண்டனிட்டான்
அவர்கள்-குயவன் குயத்தியர்தம் குறைகளைத் தீர்த்தார்கள்
காட்சி கொடுத்தார்கள் கைலாசம் போனார்கள்
நீலகண்டன் பேறுபெற்ற நிலமாகும் இவ்வனந்தான்
இவ்வனத்தி லேதீர்த்தம் இருக்கின்ற தென்றுசொன்னான்
என்றது கேட்டவுடன் அருச்சுனன் மனமகிழ்ந்து
புண்ணிய வனத்தினிலே போய்த்தீர்த்தம் ஆடிவந்தால்
என்பாவம் தீர்ந்திடவே ஈசுவரனார் வரமளிப்பார்

என்றந்தப் பொய்கைதனில் இறங்கிநீ ராடியபின்
சிவனை நினைந்துருகித் திருநீற்றுக் காப்பணிந்தான்
அரனை நினைந்துருகி அள்ளியிட்டான் வெண்ணீறு
பஞ்சா க்ஷரம்ஜெபித்துப் பகவானைப் பூசைசெய்தான்
அரகரா என்றுசொல்லி அடித்தானே ஜெயகண்டி
ஓம்நமசி வாயாவென் றொலித்தானே சங்குதனை
ஒருவன்சி வனேயென்றால் உலகஞ்சி வனேயென்னும்
அரகரா என்றுசொல்லி அந்த வனங்கடந்து
மற்று மொருவனத்தில வருகின்றார் இருவருமாய்
இந்தவனம் யாருடைய தென்றானே வாள்விஜயன்

## சபாமிருக வனங்கடந்து ஊர்க்குருவி வனம்வருதல்.

அதற்கவன்-ஊர்க்குருவி பேறுபெற்ற வனமென் றுரைத்தானே
அர்ச்சுனன்-வாயில்லா ஜீவன்கள் மரமேறும் பக்ஷிகள்தாம்
எந்த விதமாக ஈச்வரனைக் கண்டனகாண்
அந்த அதிசயத்தை அன்பனே சொல்லுமென்றான்

## பிராமணன் அருச்சுனற்கு ஊர்க்குருவி வரலாறு கூறுதல்.

அப்போது பிராமணனும் அர்ச்சுனற் கேதுசொல்வான்
ஊர்க்குருவிப் பக்ஷியிரண்டுண் டாணும் பெண்ணுமாக
இந்த வனத்திலவை யிருந்துவா ழுந்நாளில்
பிள்ளைகள் பெற்றிருந்த பெருத்த வனந்தனிலே
போவார் வருவார்கள் குஞ்சுகளைக் கொள்ளைகொள்வார்
இரைதேடி வருவதற்குள் எடுத்தோடிப் போவார்கள்
கூண்டி னிடமாகக் குருவிவந்து பார்த்தவுடன்
அழுது புலம்பிமிக ஆயாசப்பட்டிருக்கும்
மறுகால் ஒருதாமும் மைந்தருண்டா யிருக்கையிலே
பெண்குருவி தன்னுடைய புருஷனுக் கேதுசொல்லும்
என்புருஷ ரேகணவ ரேயெனது மொழிகேளும்
நான்பெற்ற பிள்ளைகளை நமனுக் கிரைகொடுத்தேன்

போவார் வருவார்கள் பிள்ளைகளைக் கொண்டுசென்றார்
இப்போதும் பிள்ளைபெற்றால் அப்படியே கொண்டுசெல்வார்
ஆசை வளர்கிறதே ஆணழகா என்னசெய்வேன்
எங்கேநான் பெற்றெடுப்பேன் எனக்கறியச் சொல்லுமென்ன
ஆணுற்கேள் பெண்கொடியே ஆரணங்கே ஒருவார்த்தை
இந்த வனத்தினிலே இங்கே குளிகுளித்தால்
நமக்கு-அன்னம் அரிதாகும் அன்னமே ஆகையினால்
சமுத்திரக் கரையோரம் [1]தாவுண்டு பிள்ளைபெற
என்றதன் மொழிகேட்டுப் பெண்குருவி என்கணவா
அலைபெருகி நீர்வந்தால் அடித்துப்போய் விடுமதனால்
அங்கேயும் பிள்ளைபெற்றால் ஆபத்து வந்துவிடும்
இப்போதும் பிள்ளைபெற்றால் ஏமாந்து போவேனே
என்றது கேட்டவுடன் ஆண்குருவி தைரியமாய்
இவ்விடத்தில் பிள்ளைபெற் றேதுகுறை வந்தாலும்
சமுத்திர ராஜனொடு சண்டைகள் செய்திடுவேன்
யுத்தங்கள் செய்திடுவேன் உன்பிள்ளை களைமீட்பேன்
என்று·தலையி லடித்ததுவும் சத்தியம் செய்துதந்து
சபதங்கள் பண்ணினதைச் சமுத்திர ராஜனறிந்து
இது-எவ்வளவு ஊர்க்குருவி என்னுடன் சண்டைபண்ண
சொல்லாத வார்த்தைகளைச் சொல்கிறது சிட்டினத்தின்
ஆண்மையைப் பார்ப்போமென் றங்கவனுந் தானிருந்தான்
அப்போது சிட்டினத்தில் அழகான பெண்குருவி
செத்தையைத் தான்பொறுக்கிச் சிறுவீடு கட்டியதில்
இருமுட்டை யிட்டதன்மேல் இரவுபகல் அடைகாத்துப்
பிரியாமல் அடைகாத்துப் பெற்றதிரு குஞ்சுகளைக்
கொப்பெனவே யப்பறவை குழந்தைகளுக் கிரைதேடி
இப்படி யக்குருவி இருக்கின்ற நாளையிலே
ஒருநாள்-தாயுந் தகப்பனுந் தாம்இல்லா வேளையிலே
சமுத்திர மகாராஜன் தண்ணீர் பெருகிவந்து

[1] தாவு=இடம்.

குழந்தைகள் இரண்டையுந்தான் கொப்பெனவே கொண்டேகிப்
பாதாள லோகமதில் பத்திரம் பண்ணிவைத்தான்
பக்ஷி சமர்த்துக்களைப் பார்ப்போம் எனவிருந்தான்
அந்தச் சமயமதில் அழகான பெண்குருவி
குழந்தைகட் கிரைதேடிக் கொண்டுவந்து பார்க்கையிலே
மக்களைக் காணுமல் மறுகி யழுகிறது
மார்பிலுந் தோள்களிலும் வண்ண முகத்தினிலும்
அறைந்து புலம்பிஐயோ மக்களே என்றுசொல்லி
மக்களைப் பறிகொடுத்து மண்மேலே தங்குவனே
என்கணவா-பாவிநீ கெடுத்தாயே பாலகரைக் கொல்லவென்றே
என்றும் பகையாளி ஏற்பட்டா யென்தனக்கு
என்று-புதல்வரைப் பறிகொடுத்துப் புலம்பி யழுகிறது
ஐயோ சிவனேயென் றலைகிறது பெண்குருவி
அந்தச் சமயமதில் ஆண்குருவி அதைநோக்கி
மனது சலியாதே மக்களை மீட்கின்றேன்
சமுத்திர ராஜனுடன் சண்டைசெய் துன்னுடைய
புதல்வரை மீட்கின்றேன் புலம்பாதே பெண்மயிலே
என்றெழுந்த தாண்குருவி [1]எகிரிப் பறந்துசென்று
மூக்கினுற் பனைகிழித்து முனையா லவசரமாய்
ஒரு-திருமுகம் பறவைகட்குத் தெண்டன் சமர்ப்பித்துக்
காக்கை குருவிகளே கழுகு பருந்துகளே
மாடப் புறுவினமே மயில்குயில் பக்ஷிகளே
காடை குருவிகளே கௌதாரி கொக்குகளே
அன்னப் பறவைகளே அண்டங்காக் கையினமே
கூளிவல் லூறுகளே கோட்டான்கள் ஆந்தைகளே
பச்சைக் கிளியினமே விச்சுளிப் பறவைகளே
நீங்களிந்த-ஓலேகண்ட நாழிகையில் ஓடியே வாருங்கள்
திருமுகங் கண்டவுடன் சீக்கிரம் வாருங்கள்
சமுத்திர ராஜனுடன் சண்டைசெய்ய வேண்டியதால்

---

[1] எகிரி=எழும்பி (தெலுங்கு.)

என்தன் இனத்தார்கள் எல்லாரும் வாருங்கள்
என்றெழுதித் திருமுகத்தைக் காக்கையிடத் திற்கொடுத்து
வாயால்-உண்மை சிலசொல்லி உடனேபோ [1]வாயசமே
தெய்வலோ கத்தார்க்கும் சேதிசொல் லென்றவுடன்
காற்று பறப்பதுபோல் காகம் பறந்துசென்று
வாயு பறப்பதுபோல் வாயசம் பறந்தோடி
அவனியில் உள்ளவர்க்கும் அந்தரத்தில் உள்ளவர்க்கும்
செப்பித் திரும்பினது திருமாலின் வாகனமாம்
கருட னெழுந்திருந்து கரியமா லைப்பணிந்தே
ஆழ்வார் வணக்கமுடன் ஆயன் அடிவணங்கி
என்குலத் தரசனுக்கும் எறிகடல் மன்னனுக்கும்
யுத்தம் நடப்பதனல் உலகளந்த பெருமாளே
அவர்-என்னை வரவழைத்தார் யான்போய் வரவேண்டும்
சாமியென்மேல் தயவாகி அனுப்புவிக்க வேண்டுமென்றே
நின்றது மாயவனுர் அன்றதன் மொழிகேட்டுக்
குலுங்க மிகநகைத்துக் கொப்பெனவே விடைகொடுத்தார்
பிரமாவின் வாகனமாம் அன்னமும் பேர்வடிவேற்
கந்தரின் வாகனமாம் கான மயிலினமும்
மன்மதன் வாகனமாம் வண்ணக் கிளியினமும்
சனிபகவான் வாகனமாம் சமர்த்துள்ள வாயசமும்
அவரவர் தேவாண்டை அடிபணிந்து தெண்டனிட்டுச்
சமுத்திர ராஜருடன் சண்டைசெய்யப் போவதற்கு
விடைதா வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொண்டு
திருமுகம் வந்தசெய்தி தெரிவித்து நின்றதனல்
அந்தந்தத் தேவர்களும் அதிசயப் பட்டார்கள்
சமுத்திர ராஜனெடு சண்டைநடக் கின்றவிதம்
எப்படி இப்புதுமை யாங்களும் பார்க்கவேண்டும்
ஆதலால்-நாங்களும் வருகின்றோம் நடவுங்கள் முன்னென்றார்
அந்தர வுலகிலுள்ள பக்ஷிகள் அடங்கலுமே
அவனியில் இறங்கிவந்து சேர்ந்தன அவசரமாய்

[1] வாயசமே=காக்கையே.

தனித்தனியே பக்ஷியெல்லாம் சமுத்திரக் கரையோரம்
தங்குலத்துச் சிட்டுமன்னன் தன்னைவந்து கண்டனவே
அப்போது சிட்டுமன்னன் அனைவர்க்கும் சொல்லுகின்றான்
திருமாலின் வாகனமாம் செம்பருந்து மன்னுகேள்
பிரமாவின் வாகனமாம் அன்னமே பேர்வடிவேற்
கந்தரின் வாகனமாம் கான மயிலினமே
மன்மதன் வாகனமாம் வண்ணக் கிளியினமே
காகமே கூளிகளே கருங்குயிலே தாராவே
செம்போத்தே நாரையானே சிச்சிலிப் பறவைகளே
என்னுடைய வயிற்றெரிச்சல் என்னவென் றுரைப்பேனான்
என்மனைவி இவ்விடத்தில் எவ்வளவோ மெய்வருந்திப்
பிள்ளைகள் பெற்றெடுத்துப் பிரியமாய்க் காத்துவந்தாள்
காத்துவந்த பிள்ளைகளைக் கடலெடுத்துப் போனதுவே
களவுசெய்து கொண்டுசென்ற உளவறிந்து நானும்மை
சமுத்திர ராஜனொடு சண்டைசெய்ய வாவழைத்தேன்
வாருங்கள் என்றழைத்து வருத்தம் அறிந்துவந்தீர்
வந்த வுமக்கெல்லாம் வந்தனங்கள் செய்கின்றேன்
நாம்-சமுத்திர ராஜனுடன் சண்டைசெய்வோம் வாருங்கள்
என்னுடைய குஞ்சுகளை எப்படியும் மீட்டிடலாம்
என்றதுகேட்டவுடன் எல்லாப் பறவைகளும்
கோபம் அதிகரித்துக் கூகா எனக்கூவி
காகம் ஒருவரிசை கழுகுகள் ஒருவரிசை
அன்னம் ஒருவரிசை ஆழ்வார் ஒருவரிசை
பருந்துகள் ஒருவரிசை பைங்கிளிகள் ஒருவரிசை
மயில்கள் ஒருவரிசை வல்லூ றொருவரிசை
குயில்கள் ஒருவரிசை குருவி யொருவரிசை
காடை ஒருவரிசை கௌதாரி யொருவரிசை
புல்புல் ஒருவரிசை புறக்கள் ஒருவரிசை
உள்ளான் ஒருவரிசை ஊர்க்குருவி யொருவரிசை
நாரை ஒருவரிசை நாகணவாய் ஒருவரிசை
கொக்குகள் ஒருவரிசை கோட்டான் ஒருவரிசை

வரிசைவ ரிசையாக அணிவகுத்து நின்றுகொண்டு
யுத்தம் புரிவதற்குச் சித்தமா யிருந்தனவே
அந்தச் சமயமதில் ஐரா வதத்தோனும்
மூவரும் தேவருடன் முனிவோர்கள் எல்லாரும்
ஆகாய மார்க்கமதில் அந்தரமாய் நின்றுகொண்டு
பக்ஷிகள் நின்றிருக்கும் பாவனையைக் கண்டார்கள்
எழும்பியே அந்தரத்தில் எட்டிப்ப றக்கிறதும்
தாமாக வேபறந்து தண்ணீரில் தாமிறங்கி
இருபக்கம் இறக்கைகளில் தண்ணீர் எடுக்கிறதும்
பாரெல்லாம் நீர்தளும்பப் பறந்து தெளிக்கிறதும்
ஆக-இப்படிப்ப றவையெல்லாம் இடைவிடா மற்செய்தே
அரைநாழிக் கொள்ளையிலே அடியோடு நீர்வறளச்
சமுத்திர ராஜனுக்குச் சங்கடமுண் டாக்கினவே
சமுத்திர ராஜனந்தச் சங்கடம் பொறுக்காமல்
தேவர்கள் தம்முடனே செப்பிமுறை யிட்டானே
அத்தனை தேவர்கள் அனைவரும் வந்திறங்கிச்
சிட்டுக் குருவியைத்தாம் அழைத்ததற்குச் சொல்லுகின்றார்
உன்தன்-மக்களை நாங்கள் வரவழைத்துத் தருகின்றோம்
சமுத்திரத்தில் தண்ணீரை எப்போதும் போல்வரச்செய்
என்றுசொல்லக் கேட்டவுடன் பக்ஷியெல்லாம் ஒருமனதாய்
மயில்அரசை யருகழைத்து மயிலே வடிவேலர்
தமக்கிதனை அறிவித்தால் சாமி மனமிரங்கித்
தம்-வேலால் தண்ணீரை வரச்செய்வார் முன்போல
என்றன அப்படியே இசைந்தந்த மயிலரசன்
கந்தரை மனதிலெண்ணிக் கர்த்தாவே கதிர்வேலா
பறக்கும் பறவையினம் எங்களால் முன்போலச்
சமுத்திரத்தில் தண்ணீரு முண்டாக்க முடியாது
உன்-பொன்வேலை ஏவியதில் போனஜலம் வரச்செய்வாய்
ஆறு முகமுடைய ஆண்டவனே வடிவேலா
பன்னிரண்டு கையோனே பாமரருள் துய்யோனே
வள்ளி மணவாளா வாசவன் மகள்கணவா
என்று துதித்தவுடன் ஏவினர் அவர்வேலை

அது-சென்றுதன் கூர்முனையில் சிறுமுத்தே போலொளிரத்
தண்ணீரைச் சமுத்திரத்தில் எப்போதும் போல்வரவே
செய்து திரும்பியது செவ்வேள் கரத்தினிலே
எப்போதும் போல இருந்ததந்த வேலதனுல்
சமுத்திர மஹாராஜன் சந்தோஷப் பட்டானே
குருவிகளின் மக்களைத்தான் கொண்டுவந்து தந்தானே
சிட்டுகளை-ஆதி சிவனர்தாம் அன்புடனே வாழ்த்திநல்ல
வரங்களைத் தந்துசென்ருர் மற்றுமுள்ள தேவரெல்லாம்
அவைகளை-ஆசீர் வதித்தார்கள் அவரவர் மனம்போல
வரங்க ளளித்தார்கள் வல்லமை பெற்றிருந்த
ஊர்க்குருவி பேறுபெற்றே ஓங்கும் வனமிதுகாண்
இங்கேயும் தீர்த்தம் இருக்கின்ற தென்றுரைத்தேன்
என்றது கேட்டவுடன் எழில்விஜய மன்னனவன்
உள்ள மிகமகிழ்ந்தான் உடனேயப் பிராமணன்தான்
போகவிடை தாருமென்று போர்விஜயன் தனைக்கேட்டான்
போய்வாரும் என்றவர்க்குப் போக விடைகொடுத்துப்
போகலுற்றுன் அப்பாலே [1]புரந்தரன்றன் மைந்தனவன்

பதினேராவது சபாமிருகவனம்
முற்றிற்று.

---

## கஉ-வது காளபைரவவனம்.

பன்னிரண் டாம்வருஷம் பிறந்தது பஞ்சவர்க்கு
கூடை தலைமேலே குடிவாழ்க்கைக் கானகத்தில்
கோலிவைத்த சும்மாடு கூடைதலை மேல்வைத்தார்
மன்னிவைத்த சும்மாடு வனமே குடித்தனமாய்
அந்த வனத்தைவிட்டே அப்பால் நடந்தார்கள்
காளபயி ரவவனத்தில் காவலர்கள் வந்தார்கள்
அங்கே குடித்தனமாய் ஐவர் குடியிருந்தார்
காண்டா வனமெரித்த காளை யருச்சுனனும்
காளபயி ரவவனத்தில் வந்தமர்ந்தான் அவ்விடத்தில்
அருந்தவ முனிவோர்கள் அநேகம்பேர் அப்பொழுது

---

[1] புரந்தரன்மைந்தன் = அருச்சுனன்.

அருச்சுனனைப் பார்த்துரைப்பார் ஐயா துறந்தோரே
முற்றத் துறந்தோரே முழுஞானம் சிறந்தோரே
தவவேடம் பூண்டோரே தங்களைப்போல் நாங்களெல்லாம்
அநேகநாள் முன்பிங்கே அருந்தவம் செய்யவந்தோம்
இத்தனைநாள் தவஞ்செய்து ஈசனைக் காணுமே
சிவனைநாங் காணுமல் செய்ததவம் வீணுனேம்
அரனைநாங் காணுமல் அருந்தவம் கெட்டோமே
பரனைநாங் காணுமல் பண்ணின தவமிழந்தோம்
சருகுகள் தின்றுடலம் சருகுபோல் வாடினமே
தீயிலே நின்றதனல் தீயாய் விட்டோமே
வனத்தில் வசித்தேஎவ் வனத்தை யிழந்தோமே
சிறுகிழங்கைத் தின்றுபெருங் கிழங்கைக் கொண்டோமே
தவமெல்லாம் அவமாகித் தத்தளிக்கின் றேமதனல்
நீருமெம்மைப் போல்வருந்த வேண்டா நினைத்தபடி
நீர்-கயிலாச மலையருகில் கடுகிதவஞ் செய்வீராளுல்
பரம சிவனுமக்குப் பாக்கியம் தந்திடுவார்
சுகமாக வாழ்ந்திடுவீர் துரிதமா யேகுமென்றூர்
அவ்வார்த்தை கேட்டவுடன் அர்ச்சுனன் மனமகிழ்ந்தே
அவர்கள்-அனைவர்க்குஞ் சரணமிட்டான் அப்பால் நடந்தானே
கடுகி நடந்தானே கைலாச மலைநோக்கிப்
பொய்கையில் குளித்தபின்பு பூசைஜபம் முடித்தானே
காள பயிரவரைக் கருத்தில் மறவாமல்
எழுபதடி கம்பமொன்றை எழிலாக நட்டதன்மேல்
ஏழிள நீரைவைத்தான் ஏழிள நீர்களின்மேல்
ஏழுவிளாம் பழத்தைவைத்தான் ஏழுவிளாம் பழங்களின்மேல்
ஏழெலு மிச்சைவைத்தான் ஏழெலு மிச்சையின்மேல்
ஏழுகொட்டைப் பாக்குவைத்தான் ஏழுகோட்டைப் பாக்குகள்மேல்
ஏழுகுன்றி மணியைவைத்தான் ஏழுகுன்றி மணிகளின்மேல்
ஏழு கடுகைவைத்தான் ஏழு கடுகுகள்மேல்
ஏழுசெப் பூசிவைத்தான் ஏழுசெப் பூசிகள்மேல்
ஏழுசெவ் வலரிவைத்தான் ஏழுசெவ் வலரியின்மேல்

ஏறிநின்றான் வாள்விஜயன் இடதுகாலைக் கீழூன்றி
மற்றதன் துடைமேலே வலப்பாதம் பொருந்தவைத்து
நின்றான் ஒருகாலில் நிலைதவறா தேநின்றான்
கைகள் தலையுயர்த்திக் ககனத்தில் விரித்தானே
கண்களை மூடியவன் கர்த்தன்மேல் நினைவானான்
நெருப்பின் நடுவிருந்து நிமலன்மேல் நினைவானான்
அக்கினி நடுவிருந்தான் அரன்மேல் நினைவானான்
கதிரோனைக் கூசாமல் கண்களாற் பார்த்தானே
வெயிலுக்கும் கானலுக்கும் மிகுமழை பனிகுளிர்க்கும்
எதற்கும் சிறிதுமஞ்சான் இருந்தபடி யேயிருந்தான்
அரகர சிவாவென்றான் அடித்தானே ஜயகண்டி
ஓம்நமசி வாயவென்றான் ஒலித்தானே சங்குதனை
ஒருவன்சி வாவென்றால் உலகம்சி வாவென்னும்
அருந்தவம் பண்ணுகின்றான் அர்ச்சுன ராஜதுரை
அகோரதவம் பண்ணுகின்றான் ஆண்டவனைக் காண்பதற்கு
அர்ச்சுனன் செய்ததவம் ஆதி சிவனார்க்குப்
பொறுக்க முடியவில்லை போர்விஜயன் செய்ததவம்
அக்கினியாய் வீசியதால் அரனாது தெரிந்தார்
காலனைக்கா லாலுதைத்த கைலாச நாதரவர்
தெரிந்துந் தெரியார்போல் தூதரைக்கூப் பிட்டாரே
திருவிளை யாட்டாக கோபத்தைக் கொள்வார்போல்
மாயவனை அழையுமென்றார் மயிலோனை அழையுமென்றார்
பிரமனை அழையுமென்றார் பிள்ளையார் தம்மையுநீர்
அழையுங்கள் இப்பொழுதே அழைத்தோடி வாருமென்றார்
வாயுவை அழையுமென்றார் வருணனை அழையுமென்றார்
இடியை அழையுமென்றார் இந்திரனை அழையுமென்றார்
அப்படியே தூதுவர்கள் அவர்களை அழைத்தார்கள்
சிவனார் அழைக்கின்றார் சீக்கிரம் வாருமென்றார்
அரனார் அழைக்கின்றார் அவசரமா வாருமென்றார்
பரனார் அழைக்கின்றார் பரிந்துநீர் வாருமென்றார்
அவ்வார்த்தை கேட்டவுடன் அவரவர் பயணமானார்

கருடன்மேல் ஏறியந்தக் கரியமால் வந்துவிட்டார்
அன்னத்தின் மேலேறி அயனாரும் வந்துவிட்டார்
ஆனையின்மேல் இந்திரனர் அப்போதே வந்துவிட்டார்
கான மயிலேறிக் கந்தரும் வந்துவிட்டார்
பெருச்சாளி வாகனமேற் பிள்ளையார் வந்துவிட்டார்
முப்பத்து முக்கோடி முனிவரும் வந்துவிட்டார்
ஆதி சிவனருகே அனைவோரும் வந்துவிட்டார்
வந்து பணிந்தார்கள் வாய்புதைத்து நின்றார்கள்
அப்போது-அத்தி யுரித்தபரன் ஆதி சிவபெருமான்
சித்தி யளித்தபரன் செஞ்சடை விரித்தபரன்
முத்தி யளித்தருளும் முக்கட் பரன்மதியைச்
சூடும் பரன்நதியைச் சுமந்த பரன்விரைந்து
மாயவரே என்னுடைய மைத்துனரே இவ்விடத்தில்
ஆரோ ஒருவன் அகோரதவம் செய்கின்றான்
எவனோ தெரியவில்லை எப்படியோ இங்குவந்தான்
கைலாச மலைமேலே கடுகிவர ஞாயமுண்டோ
வெள்ளியங் கிரிமேலே விரைந்துவர ஞாயமுண்டோ
இங்கே-எத்தனைநாள் தவசுபண்ணி இருந்தாலும் நாமவற்குக்
காட்சி தருவோமோ கைலாச மலைதாண்டி
அவன்-கானகந் தனிலிருந்து கடுந்தவஞ் செய்வானேல்
காட்சி வரந்தருவோம் ஆக்ஷேப மினையில்லை
இங்கே தவம்புரிய ஏற்குமோ மாதவரே
ஆரோ தெரியாது வந்துவிட்டான் ஆண்மையுடன்
என்-தலைமாட்டி லேநின்று சத்தங்கள் போடுகிறான்
அரகரா என்கின்றான் ஆண்டவனே என்கின்றான்
சிவசிவா என்கின்றான் செவியை அடைக்கிறது
கர்த்தாவே என்கின்றான் காதடைத்துப் போகிறது
பிடிவாதக் காரனவன் பித்தன்போற் கத்துகிறான்
ஆரென் றவனைநீர் அறிந்துவந்து சொல்லுமென்றார்
அதற்கு-மாயன் பெருமாளும் மகாதேவர் தமைநோக்கி
பாண்டுமன்னன் பெற்றெடுத்த பார்த்திபர் ஐவருண்டு

குந்திமா தேவிபெற்ற குலமணிகள் ஐவருண்டு
அவர்களில்- [1]நடுவே பிறந்தமன்னன் நயன விழியழகன்
மீசை முறுக்கழகன் விழியிற் கறுப்பழகன்
தோளில் துளசிமணி சுத்தல க்ஷணமுடையான்
பாதத்தில் பதுமமுள்ள [2]பற்குனன் இவனென்றார்
இவன்-இடதுகால் விருதுபொம்மை வலதுகால் வீரதண்டை
சலவிருது குலவிருது சமர்த்துகள் படைத்தவன்காண்
சிவபூசை குருபூசை சிவன்பாத மறவான்காண்
என்ன வரம்வேண்டி யிங்குவந்தா னென்றறியேன்
என்றாரே மாயவனார் ஈச்வரனார் அதுகேட்டார்
தருமனுக்கு பின்பிறந்த சமர்த்துடையோ னானாலும்
வீமனுக்குப் பின்பிறந்த வீரமுள்ளோ னானாலும்
நகுலனுக்கு முன்பிறந்த நரனிவனே ஆனாலும்
சகாதேவ னுடன்பிறந்த மகாசூரன் ஆனாலும்
யாரா யிருந்தாலும் இங்கே வரலாமோ
கயிலாசந் தன்னிலிவன் கடுகிவர ஞாயமுண்டோ
இவன்-எந்தப் படியிருந்திங் கேதுதவம் செய்தாலும்
நொந்து வருந்தியிவன் நோற்றாலும் பலனென்ன
நான்-வரமருள மாட்டேனே தவத்தைக் கெடுத்திடுவேன்
என்று மகாதேவர் எரிபறந்து கண்சிவந்து
வாயு பகவானை வாவென் றருகழைத்தே
அருச்சுனன் நிற்கின்ற அருந்தவசுக் கம்பமதை
தவசுநிலைக் கம்பமதைச் சமுத்திரத்திற் போடென்றார்
அரைநாழிக் கொள்ளேயிலே அதமாக்கி வாவென்றார்
என்றவுரை கேட்டவுடன் எழுந்தானே வாயுமன்னன்
அதை-மாயன் பெருமாள்தாம் கண்டோடி வருகின்றார்
ஐயையோ அர்ச்சுனனுக் கனர்த்தங்கள் வருமதனால்
அவனைநாம்-காக்கக் கடமையென்றே கரியமால் ஓடுகிறார்

---

[1] நடுவிலவன் என்று வழங்குகிறது.

[2] பற்குனன் = பாற்குணன் = பால்குணமாதம், அதாவது பங்குனி உத்திரத்திற் பிறந்தவன் (தத்திதாந்தம்.)

ஓடிவந் தர்ச்சுனனுக் குண்மையைச் சொல்லுகின்றார்
காண்டீபா அர்ச்சுனனே என்னுடைய கண்மணியே
உனக்கு-மோசங்கள் வருமதனால் நாசங்கள் உண்டாகும்
சிவபெருமான் உன்மேலே தீராக்கோ பங்கொண்டார்
ஆகையினாலே ஆண்டவனார் வாயுவை அனுப்பிவைத்தார்
அவன்வந்திங் குன்னுடைய தவநிலையைக் குலைப்பானே
நிலையைக் குலைப்பானே நீயவன்முன் நிற்பாயோ
வாயுபக வான்வந்தால் வலுவா யிருப்பவரார்
காற்றரசன் தனையெதிர்க்கும் மாற்றரசன் எவனிங்கே
முன்னாலே இதுவறிந்து சொன்னேனே உன்தனக்கு
என்றார் அதுகேட்டான் எழில்விஜயன் மாயவரே
ஆயவரே தூயவரே அடியேன் அகத்திலென்றும்
மேயவரே ஊதுகுழல் [1]வேயவரே மூவுலகுந்
தாயவரே உம்முடைய சரணமடி யேனன்றோ
உம்மைநம்பி அன்றோநான் அம்மையப்பன் வாழ்கின்ற
கயிலாச மலைதேடிக் கடுகியே ஓடிவந்தேன்
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
எவரைச் சதமென்பேன் இனியாரைத் தஞ்சமென்பேன்
உமது உள்ளங்கைப் பழம்வெதும்பி உருக்குலைந்து போகாமல்
தோளில் ஜெபமாலை [2]தோடழிந்து போகாமல்
பெட்டியில் பூஷணந்தான் பெருமை குலையாமல்
காக்கக் கடனுமக்குக் கரியமா லேஎன்னை
என்றன்-அண்ணருந் தம்பியரும் அனுப்பினாரும்மை நம்பி
நீரன்றி யெங்களுக்கு வேறுதுணை யாருலகில்
தாயன்றி சூலுண்டோ சாற்றுமையா மாயவரே
வந்தவினைமாற்றி வையுமையா தூயவரே
என்று வணங்கிநின்றான் இயலான வாள்விஜயன்
அதற்கே-சித்தங் குளிர்ந்ததனால் ஸ்ரீராமர் வாமவற்கு
வாயுமன்னன் வந்திருந்தான் கம்பத்தை வலிமையுடன்
அசக்கிப் பெயர்த்தாலும் அசையா திருக்கவென்றும்

---

[1] வேயவர்=மூங்கிலையுடையவர். [2] தோடு=இதழ்.

இதனைத்-தேவாதி தேவரொன்றாய்ச் சேர்ந்துவந் தசைத்திடினும்
அருச்சுனன் தவசுநிலை அழியா திருக்கவென்றும்
வரங்கொடுத்து வந்துவிட்டார் பான்கயிலை மலைதனக்கே
ஆரு மறியாமல் ஆதிசிவன் அருகுவந்தார்
அந்தச் சமயமதில் ஆங்கார வாயுமன்னன்
மண்ணதிர விண்ணதிர வருகின்றான் வாயுமன்னன்
தெற்குத் திசையிருந்து வடக்கு முகம்நோக்கி
இரைந்துவந்து மோதுகிறான் இளவிஜயன் தவநிலையை
அப்படி யிப்படிசற்றும் அசையவில்லை கம்பமது
மறுகால் ஒருதரமும் வந்தடித்தான் வாயுமன்னன்
அப்போதுஞ் சாயவில்லை தவசுநிலைக் கம்பமது
தன்னாலே யாகாமல் சலித்துவிட்டான் வாயுமன்னன்
அருச்சுனனைக் கண்டவனும் அதிக மனமகிழ்ந்தான்
என்னிலும் வல்லவனீ என்று புகழ்வதற்குத்
தன்னுடைய அஸ்திரத்தைத் தயவுடனே கொடுத்தானே
வாங்கி நமஸ்கரித்து வாள்விஜயன் மிகமகிழ்ந்தான்
எவரனுப்ப நீர்வந்தீர் என்தவம் அழிப்பதற்கிங்
கென்றான் அதற்கந்த வாயுமன்னன் இதமாக
ஆதி சிவபெருமான் அனுப்பநான் இங்குவந்தேன்
உன்-தவநிலைக் கம்பமதைச் சமுத்திரத்திற் போடவந்தேன்
வந்தென்னா லானமட்டும் அசைத்தேன் முடியவில்லை
ஆதிசிவன் வந்துனக் கான வரந்தருவார்
பயப்பட வேண்டாநீ பற்குனனே என்றுரைத்தான்
அதற்கு-அர்ச்சுனன் அவனிடத்தில் அன்புடனே உரைக்கின்றான்
நீர்-உம்பர்தம் பிரான்தனக் குவந்தொரு வார்த்தை சொல்லும்
எனக்கு-வேண்டும் வரமளிக்க விமலற்குச் சொல்லுமையா
பாசுபதம் வேண்டுமென்று பரமற்குச் சொல்லுமையா
பரமன்-வரங்கள்தந் தாலன்றி மலையைவிட்டு நான்போகேன்
தவசு நிலையைவிட்டுத் தனஞ்செயனான் போகேனே
எனது-மண்டையைப் பிளந்துகொள்வேன் மாதேவர் வாராரேல்
தலையை அரிந்துகொள்வேன் சங்கரர் வாராரேல்

உடல்வெந்து நீறுவேன் உமாபதி வாராரேல்
மாணத்தை ஓர்திரண மாக மதிப்பேனே
வெண்ணீறு பூசியுள்ள விமலன்மேல் அன்பாய்நான்
கண்ணீர் விடுகின்ற காரணத்தைச் சொல்லுமென்றான்
அப்படியே யென்றுசொல்லி ஒப்பிவந்தான் வாயுமன்னன்
ஆதி சிவன்பாதம் அடிவணங்கித் தெண்டனிட்டான்
மான்மழு தரித்தவரே மதில்மூன் றெரித்தவரே
அரவா பரணமணி ஆண்டவரே சரணமையா
அர்ச்சுனன் தவசழிக்க ஆராலும் ஆகாதே
என்னாலும் ஆகாதிங் கெவராலும் முடியாது
நீர்-காட்சி தாராமலிங்கே காலதா மதஞ்செய்தால்
அவன்-தன்னுடைய மண்டைதனைத் தானுடைத்துக் கொள்வானும்
உம்மையவன் காணமல் உளமுருகி வாடுகிறான்
என்றான் அதுகேட்டார் ஈச்வானூர் தம்முடைய
திருவிளையாட் டதனைத் திரும்பவும் காட்டவெண்ணி
இடியாசன் தன்னையழைத் தெம்பிரான் சொல்லுகின்றார்
ஏழிடியுங் கூடியொரு பேரிடி யாயிடித்தே
அர்ச்சுனன் தலையையுடைத் தறுபது துண்டாக்கிக்
கொன்றுவிட்டு நீவருவாய் கொப்பெனவே என்னிடத்தில்
என்றார் சிவபெருமான் இடிபகவான் எழுந்திருந்தான்
அந்தச் சமயமதில் அரிராமர் ஓடிவந்தார்
அர்ச்சுனா உன்மேலே அரனார் கடுங்கோபம்
கொண்டார் அதனாலே கோடை யிடிபகவான்
தன்னை யனுப்பிவைத்தார் உன்னைத் தலையுடைக்கத்
தப்பித்துக் கொள்வையென்று சாமியவர் போனாரே
அப்போதவ் விடிபகவான் ஆங்காரக் கோபமுடன்
தேவலோ கம்மதிர தேவேந் திரன்மிரள
பாதாள லோகமதில் பாம்புகள் பயந்தோட
கர்ப்பம் கிடுகிடென்ன கிரிகள் [1]கமரிக்கொள்ள
அஷ்டகுல பர்வதங்கள் அதிர்ந்து கிடுகிடென்ன

[1] கமரிக்கொள்ள=பிளக்க; பிளவுபட.

எட்டுத் திசைநடுங்க ஏழுலகுந் தத்தளிக்க
ஏழிடியுங் கூடியொரு பேரிடியாய்த் தானிடித்தான்
அர்ச்சுனர்க்கு நேராக ஆகாய மீதிருந்தே
உறுதியாய்ப் பயங்காட்டி உச்சியிலே தானிடித்தான்
இவன்-வரட்டும் வரட்டுமென்று வாள்விஜயன் காத்திருந்தான்
இடிபகவான் வருகையிலே இசைவா யருச்சுனன்தான்
ஒஞ்சரித்துத் தனதுடலை ஒடுக்கி யிருந்துகொண்டு
அதனைத்தன் கையாலே அழுத்திப் பிடித்தானே
அவனுக்குக்-கண்கள் முழிபிதுங்கிக் கண்ணீரும் வடிகிறது
மூச்சுத் திணறியவன் பேச்சுக் குளறியதால்
மெச்சினேன் மருமகனே விட்டுவிடு விட்டுவிடு
சீக்கிரம் விட்டுவிடு செத்து மடிந்திடுவேன்
உனக்கு-என்மகளை மின்னொளியை ஈந்திடுவேன் இப்பொழுது
இடியாஸ் திரங்கொடுப்பேன் ஏற்றுக்கொள் என்றுசொன்னான்
அவ்வார்த்தை கேட்டவுடன் அர்ச்சுனன் மாமாவே
இனிமேல் கலியுகத்தில் எங்கே யிடித்தாலும்
அர்ச்சுனா என்றென்பேர் ஆர்விரும்பிச் சொன்னாலும்
நீர்-ஒதுங்கிப்போய் விடுவீரா ஒருகாதம் போவீரா
என்றான் அதுகேட்டே இடிபகவான் அப்படியே
ஆகட்டும் நிச்சயமாய் அப்பாலே போய்விடுவேன்
நிற்காமற் போய்விடுவேன் நிருபனுன்றன் பேர்சொன்னால்
ஆணையுடன் சொல்கின்றேன் அப்பா எனைவிடென்றான்
விட்டுவிட்டு மற்றவனை விஜயன் வினவுகின்றான்
யாரனுப்ப நீர்வந்தீர் என்னைக் கொலைசெய்ய
என்றான் அதுகேட்டவ் விடிபகவான் சொல்லுகிறான்
ஆதி சிவபெருமான் அனுப்பினார் உன்னிடத்தில்
ஆங்காரத் துடன்வந்தேன் அகப்பட்டேன் உன்னிடத்தில்
நீ-சத்தியவான் ஆகையினால் தப்பவிட்டா யென்தலையை
உன்றன்-புண்ணியத்தி னாலேநான் போகிறே னுயிர்பிழைத்தே
என்றது கேட்டவுடன் ஏழில்விஜயன் புன்சிரிப்பாய்
ஆதி சிவனடியை மறவேன் அதே நினைவாய்

இரவு பகலாக இடைவிடா தெப்பொழுதும்
ஏங்கி யிருக்கின்றேன் எப்போ தவர்வருவார்
என்றெண்ணி வாடுகிறேன் தேடுகிறேன் என்னசெய்வேன்
இந்த விஷயமதை எம்பிரான் சந்நிதியில்
நீர்-சென்றவரைக் காண்கையிலே செப்புவீர் எனவுரைத்தான்
அப்படியே இடிபகவான் ஆகட்டும் என்றுசொல்லி
சென்றான் சிவபெருமான் சந்நிதியில் வணக்கமுடன்
நின்றான் அடிபணிந்தான் நிமலனே அருச்சுனன்றன்
தவசு நிலைகலக்கச் சாத்திய மல்லவென்றான்
அண்டம் புரண்டாலும் அவன்புரளான் அக்கினிதான்
குளிர்ந்தாலும் அவன்தவசைக் குலைக்கமுடி யாதென்றான்
நான்பிழைத்து வந்ததுவே நல்ல அதிஷ்டமென்றான்
என்னை யவன்பிடித்தே இடுக்கி நசுக்கிவிட்டான்
நல்வார்த்தை யவர்க்குரைத்து நானும் பிழைத்துவந்தேன்
அவன்-புண்ணியவான் ஆகையினால் போவென் றெனைவிடுத்தான்
நீர்-ஏதவனைச் செய்தாலும் இளையான் அவனென்றான்
உம்மிடத்தில்-வரம்வாங்கா மற்போகான் மருட்டினால் அஞ்சானே
அவனைநான்-சித்தத்தி லெண்ணவெண்ணத் தேக நடுங்குகின்றேன்
உள்ளத்தி லெண்ணவெண்ண உடலம் நடுங்குகின்றேன்
உம்மை யொருகணமும் மறவா னவனென்றான்
என்ற வுரைகேட்டார் ஈச்வரனார் தம்முடைய
திருவிளை யாட்டையின்னும் தெரிவிக்க மனமாகி
அநேக விதமான செல்லுகளை அப்போதே
ஆண்டவனார் உண்டுபண்ணி அர்ச்சுனன்மேல் ஏவினரே
செல்லுகள் ஒருமனதாய்ச் சென்றன அர்ச்சுனன்மேல்
அந்தச் சமயத்தில் அரிராமர் ஓடிவந்தார்
அர்ச்சுனா வாள்விஜயா ஆபத்து நேர்ந்ததென்றார்
ஆண்டவனார் தென்தில்லைத் தாண்டவனார் இப்போது
செல்லுகளை உன்மேலே செல்லவிட்டார் அவைகளெல்லாம்
வருகின் றனவதனால் மன்னவனே எச்சரிக்கை
ஜாக்கிரதை ஜாக்கிரதை ஜாக்கிரதை யென்றுசொல்லி

எம்பெருமா ளேகிவிட்டார் எத்தனையோ செல்லுகள்தாம்
கணக்குமித மில்லாமல் காண்டீபன் தனைச்சூழ்ந்த
கண்டானே காண்டீபன் காண்டீபந் தனைவளைத்தான்
வில்லைக் குணத்தொனிசெய் தம்புகளை விட்டானே
அக்கினி யாஸ்திரத்தை அர்ச்சுனன் விட்டானே
சமுத்திரத்தில் தீவுதனைத் தண்ணீர்சூழ்ந் திருப்பதுபோல்
தவசுநிலை-அர்ச்சுனன் கம்பமதை அக்கினி சூழ்ந்ததுவே
அதைக்-கண்டவுட னேயந்தக் கறையான்கள் சிவபெருமான்
சந்நிதியில் ஓடிவந்து சாஷ்டாங்க தெண்டனிட்டு
காமனைக் காய்ந்தவரே காலனை உதைத்தவரே
மாமனைக் காய்ந்தவரே சோமனை வேய்ந்தவரே
அர்ச்சுனன் தனைச்சூழ அழல்வளர்ந் தெரிகிறது
நெருப்புக்கு நடுவிலந்த நிருபன் இருக்கின்றான்
எங்களா லாகாது இளையான் அவனைவெல்ல
உம்மையே தேடுகிறான் உமதுபதம் நாடுகிறான்
என்றவைகள் போனவுடன் ஈச்வரனார் மறுபடியும்
திருவிளை யாட்டாக வருணனை வாவென்றார்
அவனது கேட்டவுடன் அரனடி பணிந்துநின்றான்
அப்போது சிவபெருமான் திருவாய் மலர்ந்தருள்வார்
வருணா-ஆனைத் துதிக்கையைப்போல் அத்தனை பருமனாக
அர்ச்சுனன் மேலேநீ அடைமழை பொழியென்றார்
ஆதிசிவன் ஆக்கினையை வருணன் கடவாமல்
[1] ஆர்கலியின் நீரையெல்லாம் அடியோடே உண்டுசென்று
மழைபொழிய மப்புகளை அனுப்பினான் அர்ச்சுனன்மேல்
கார்மேகம் வருவதனைக் கண்டார் அரிராமர்
அர்ச்சுனன் தன்னருகில் அவசரமா ஓடிவந்தார்
மேகங்கள் வருவதனால் விஜயாநீ எச்சரிக்கை
என்றுசொல்லி நடந்தாரே எம்பெருமாள் மாயவனார்
மேகங்கள் கறுத்தெழும்பி மின்னாமல் இடியாமல்
ஆனைத் தொடையளவு பருமனாம் அடைமழையைப்

---

[1] ஆர்கலி = சமுத்திரம்.

பொழிந்தன போர்விஜயன் போட்டானே சரப்பந்தல்
வில்வளைத்து நாணேற்றி விட்டானே அம்புகளை
அம்புகளால் கூடாரம் அர்ச்சுனன் போட்டதனுல்
தண்ணீர் ஒருதுளியும் தான்வளர்த்த அக்கினிமேல்
படவில்லை தன்மேலே ஒருதுளியும் படவில்லை
தவசு நிலைகுலையான் சவுக்கியமா யிருந்தானே
கண்டான் வருணனைக் கணக்கில்லா மகிழ்ச்சியுற்ருன்
வருணஸ் திரமாவதற்கு வழங்கினுன் வரமளித்தான்
அர்ச்சுனன் அதைவாங்கி வணங்கி வினயமுடன்
உம்மை அனுப்பினதார் உத்தமரே சொல்லுமென்ருர்
ஆதிசிவபெருமான் அனுப்பினுர் என்னையென்று
வருணன் விடைகொடுத்தான் வாள்விஜயன் சொல்லுகின்ருன்
கல்லானைக் கரும்புண்ணக் கற்ருனை மேருமலை
வில்லானை அன்றுவளை விற்ருனை வெற்றியுடன்
போரானைத் தோலெடுத்துப் போர்த்தானை பூமியென்னும்
தேரானை வேதமெல்லாம் தேர்ந்தானைச் சங்கரனை
என்றும் மறவேனுன் எத்தனைதான் என்னையவன்
துன்பங்கள் செய்தாலும் சோதியா னவனடியைக்
காணமற் போகேனுன் கர்த்தாவுக் குரையென்ருன்
அப்படியே என்றுசொல்லி வருணன் அகமகிழ்ந்தே
சென்று சிவனடியில் தெண்டனிட்டுச் சொல்லுகிருன்
ஐயரே அர்ச்சுனனை வெல்லயா ராலாகும்
தேவர்கள் தம்மாலும் தேவேந் திரனுலும்
மூவர்கள் தம்மாலும் முனிவரர்கள் தம்மாலும்
முடியாது முடியாது முடியாதென் றேயுரைத்தான்
அதற்குச் சிவபெருமான் அகத்தில் மிகமகிழ்ந்தார்
ஆனுலும் திருவிளை யாட்டதனை விரும்பியின்னும்
அன்பனைச் சோதிக்க அரனுர் மனதாகிக்
கழுகுகளைக் கூளிகளைக் கானகத்துப் பக்ஷிகளைக்
கொல்லுங் குருவிகளைக் கூட்டமாய் வாநினைத்தார்
அவைகள் பறந்துவந்தே அரனுர் அடிபணிந்து

நின்றன அவைகளுக்கு நிமலர் உரைக்கின்றார்
அர்ச்சுனனை நீங்களெல்லாம் அடியோடே மாய்த்திடுவீர்
அவன்-தவசைக் கெடுத்துவிட்டுச் சடுதியில் வருகவென்றார்
குளவி யினங்களையும் கூடவே அனுப்பிவைத்தார்
அந்தச் சமயமதில் அரிராமர் ஓடிவந்து
காண்டீபா எச்சரிக்கை கானகத்துக் கூளிகளும்
குளவிகளும் உன்னிடத்தில் கூடிவருகின்றனவே
அரனார்தாம் உன்மேலே அவைகளை ஏவிவிட்டார்
என்றுசொன்னார் மாயவனார் இளவிஜயன் அன்புடனே
அவரை வணங்கி ஆண்டவரே நீர்நினைந்தால்
குளவிகளும் கூளிகளும் கூடிவந்தால் என்னசெய்யும்
அவைகள்-என்னை வருத்தாமல் இருக்கவரம் தாருமென்றான்
அப்படியே மாயவனார் வரமளித்துப் போனாரே
போனவுடனேயந்தப் பொல்லாத கூளிகளும்
குளவிகளும் கூடிவந்து கொற்றவனைப் பிடுங்கினவே
பிடுங்கின சதைமுன்போல் பெருத்து வளர்ந்ததனால்
கூளிகள் இளைத்தனவே குளவிகளும் ஓய்ந்தனவே
குத்தின கூளிகட்கு மூக்குக்கூர் மழுங்கினவே
கொட்டின குளவிகட்குக் கொடுக்குகள் ஒடிந்தனவே
என்னசெய்யும் அவைகளெல்லாம் எம்பிரான் இடம்ஓடி
அடிபணிந்து தெண்டனிட்டே ஆண்டவரே அர்ச்சுனனை
எங்களால் வெல்வதற்கு முடியாதெள் ளத்தனையும்
இன்னுந் திருவிளையாட் டதனை மனதிலெண்ணிக்
கற்பூர மண்டபத்தில் கர்த்தர் கொலுவிருந்தார்
அந்தச் சமயமதில் அரிராமர் வீற்றிருந்தார்
அர்ச்சுனா சிவபெருமான் அப்பாலே நடந்துவிட்டார்
கற்பூர மண்டபத்தில் கர்த்தர் இருக்கின்றார்
என்றுசொன்னார் அதுதெரிந்தே எடுத்தான் தனதுவில்லை
அதில்-அக்கினியாஸ் திரந்தொடுத்தான் அதன்மேலே ஏவிவிட்டான்
கற்பூர மண்டபந்தான் கனலுக் கிரையாச்சே
அப்போது சிவபெருமான் அதிகசினங் கொண்டவர்போல்

நடித்து மொழிகின்றான் நாரா யணனுடனே
பார்த்தீரோ மாயவரே பற்குனன் செய்கைதன்னை
என்னுடைய மண்டபத்தை எரியாமல் கொளுத்திவிட்டான்
இப்படி என்வீட்டைக் கொளுத்தினவன் இஷ்டம்போல்
நான்-எப்படிக் காட்சிதா இசைவேன் உரையுமென்று
வெண்ணீறு மண்டபத்தில் விமலனார் போயிருந்தார்
மாயன் பெருமாளும் மாயமாய் ஓடிவந்தே
வெண்ணீறு மண்டபத்தில் வீற்றிருக்கின் றதனால்
அர்ச்சுனா காண்டீபா ஆனார்தாம் இப்போது
தண்ணீர் விடுத்ததனைப் புண்ணியனே கரையென்றார்
அப்போது வாள்விஜயன் அரிராமர் சொற்படியே
வருணாஸ் திரம்விடுத்து மழைபொழியச் செய்ததனால்
தண்ணீர் புரளவைத்து வெண்ணீற்றைக் கரைத்துவிட்டான்
விமல ரிருந்துவந்த விபூதியின் மண்டபந்தான்
கரைந்ததனாற் கர்த்தாவர் கருத்தில் மகிழ்ந்திருந்தும்
கோபத்தைக் கொண்டவர்போற் கூத்தாடிப் பாதாள
மண்டபத்திற் போயிருப்பேன் என்றெழுந்தார் மகாதேவர்
அப்போது மாயவனார் அவசரமா ஓடிவந்து
காண்டீபா கனமோசம் வந்துவிடும் சிவபெருமான்
பாதாளம் போய்விட்டால் பார்க்க முடியாது
காணக் கிடையாது கர்த்தாவின் சேவையைநீ
போகாம லேதடுத்தால் புண்ணியனைக் கண்டிடலாம்
என்றுசொல்லிப் போய்விட்டார் எம்பெருமாள் அப்போது
காண்டீபன் வில்லெடுத்துக் கனலம்பு தொடுத்துவிட்டான்
அக்கினி அம்புகள்தாம் மலைபோலே குவிந்ததனால்
போகவழி யில்லாமல் புண்ணியரைத் தடுத்தனவே
கண்டார் பரமசிவன் கண்கொள்ளாச் சினங்கொண்டார்
போல நடித்தந்த புண்ணியனார் தாமேயோர்
திருவிளை யாட்டதனில் திருவுளங் கொண்டதனால்
ஏமன் தனையழைத்தார் ஏனமாய் வடிவெடுத்துக்
காண்டீபன் தவமழிக்கக் கடுகவே போவென்றார்

அப்படியே-ஏன வடிவெடுத்தான் ஏமனவன் ஓடுகின்றான்
பன்றி வடிவெடுத்தான் பார்த்திபன் அருகுவந்தான்
அபயம் அபயமென்றே அழுது புலம்புகிறான்
அபயக் குரல்கேட்டால் ஆதரித்தல் ஞாயமென்றே
அலகம்பைத் தான்தொடுத்தே அர்ச்சுனன் விட்டானே
கானகத்துப் பன்றிதனைக் கட்டிவைக்க அம்பைவிட்டான்
அது-பன்றியைப் பிடித்துவந்து கட்டாகக் கட்டியதே
அந்தச் சமயமதில் ஆதி சிவனெழுந்தார்
மெத்தப் பெரியவராய் வேடன் வடிவெடுத்தார்
பிரமனும் வேடுவனாய்ப் பிரியமுடன் வடிவெடுத்தான்
விநாயகரும் வேடுவராய் வெளியே புறப்பட்டார்
கந்தரும் வேடுவராய்க் காத லுடன்வந்தார்
தேவேந் திரனுமொரு வேடனாய் வந்தானே
மாயவரும் வேடுவராய் மகிழ்ந்துவந்து சேர்ந்தாரே
அர்ச்சுனனை வெல்வதற்குச் சேர்ந்தார்கள் அனைவோரும்
வேடச்சி வடிவெடுத்து *விமலையும் வந்தாளே
வேட வடிவெடுத்து விரைந்துவந்து சேர்ந்தார்கள்
வேடர்கள்-காலிற் செருப்பணிந்தார் தோலை அரைக்கசைத்தார்
தலையிலே குல்லாக்கள் தமைமாட்டிக் கொண்டார்கள்
மான்வலை யெடுத்தார்கள் சில்லாக்கோல் வைத்தார்கள்
நேரிசங்கள் தாங்கினார்கள் நீண்டவில் லம்புகளை
எடுத்துப் புறப்பட்டார் எல்லாரும் கூடியொன்றாய்
சின்னசின்ன வேடரெல்லாம் சேர்ந்தொரு புறமாக
மற்றுமுள்ள வேடரொரு புறமாக வாற்குறங்குக்
கூட்டத் திடையிருந்த கோசலா மன்போலச்
சிவவேடர் வேட்டைக்குச் சென்றார் சிறப்பாக
கருநாயும் செந்நாயும் கணக்கிலா நாய்களுடன்
வேடர்-காட்டைக் கலைத்தார்கள் கருநாயை ஏவிவிட்டார்
அம்புவில் லாயுதத்தோ டனைவோரும் வருகின்றார்
வருகிறார் வேடரெல்லாம் வனத்தை நிலைகலக்கி

* விமலை=பார்வதி.

அத்தனை வேடவரும் அர்ச்சுனன் அருகுவந்தார்
அப்போது சிலவேடர் அர்ச்சுனன் தனைநோக்கி
ஆரையா சங்கமரே அறிவைப் படைத்தவரே
புதிய தவசுபண்ண மதியைப் படைத்தவரே
தீரப் படித்தவரே தெளிவைப் படைத்தவரே
ஏழைகண்டீர் வேடுவன்நான் எட்டுநாள் மிகவருந்திக்
காத்திருந்திவ் வேனமதைக் கணையாலே எய்துவிட்டேன்
எய்துவிட்ட ஏனமிது தப்பிவந் தெப்படியோ
உன்னிடத்தில் அகப்பட்ட துத்தமரே கட்டிவைத்தீர்
தப்பிவந்த ஏனமிதைத் தவறுமல் நாங்களெல்லாம்
அடிபிடித் தோடிவந்தோம் ஐயாவே உம்மிடத்தில்
இது-கட்டிவைத் திருக்கின்ற காரணம் தெரியவில்லை
நாங்கள்-பசியாமல் வருந்துகின்றோம் பன்றிதனை விட்டுவிடும்
பிள்ளைகளும் குட்டிகளும் பெரும்பசியால் வருந்துகிறோம்
இதைக் கட்டவிழ்த்து விட்டுவிடும் கடுகப் புசித்திடுவோம்
என்றார் அதுகேட்டான் இளையான் அருச்சுனன்தான்
அபயமென்று வந்தவரை ஆதரிக்க ஞாயமுண்டு
மிருகமே ஆனாலும் ஒருமுறை அபயமென்றால்
நாம்-காக்கக் கடமையுண்டு கானவனே ஆகையினால்
இதற்கு-அபய மளித்ததனால் அவிழ்த்துவிடக் கூடாது
என்-ஆருயிர் போனாலும் அவிழ்த்திதை விடமாட்டேன்
இந்த-ஒருபன்றி இறைச்சியினால் உமதுபசி ஆறாது
கூட்டம் பெருத்ததொருநீ குடும்பியா யிருக்கின்றாய்
நாங்கள்-தவசுநிலை நிற்பதனால் தயவின்றி ஒருயிரைக்
கொல்லக் கருதோமே கொல்பவரைப் பாரோமே
கொல்லா விரதமெமக் கெல்லாம் பெருவிரதம்
கொல்லான் புலாலைமறுத் தானைக்கை கூப்பிநின்று
இங்குள்ளா வுயிருந் தொழுமதனால் என்போன்ற
ஒரு-ஜீவனை வதைசெய்யச் சிறிதுநான் ஒவ்வேனே
சிவபிரான் தனைநோக்கிச் செய்கிறேன் அருந்தவசு
கைலாச வாசனைநான் கருதியே நோற்கின்றேன்

சிவபூசை வேளையிலே காடிவந்து நுழைந்தது போல்
என்னை வருத்தாமல் எல்லாரும் போய்விடுங்கள்
தவத்தைக் கெடுக்காமல் சங்கடம் கொடுக்காமல்
அப்பாலே போங்களென்றான் அடித்தானே ஜெயகண்டி
சம்போ சிவாவென்றான் சங்கநாதஞ் செய்தான்
ஆதி சிவபெருமான் அர்ச்சுனன் தனைநோக்கி
எத்தனை சொன்னாலும் இரங்காதோ உன்மனது
கல்லோ இரும்போ கனவயிர மோவறியேன்
தவசுநிலை நிற்பவர்கள் தருமநிலை பாராரோ
பசியைத் தணிப்பதென்றால் பாமசிவற் காகாதோ
நீ-பசியைத் தணித்துவிட்டால் பாமசிவன் துணைசெய்வார்
உன்-தாயார் தகப்பனுக்கும் தமையனுக்கும் தம்பியர்க்கும்
எல்லார்க்கும் மோக்ஷமுண்டாம் என்பசி தீருமென்றார்
அவ்வார்த்தை தான்கேட்டான் அர்ச்சுனன் அவர்க்குரைப்பான்
ஒருகால் உரைத்தேனே உன்செவிக்கேன் ஏறவில்லை
நான்-தவசு புரிகையிலே சத்தங்கள் போடாதே
என்-மனதைக் கலக்காதே மற்றொன்றும் பேசாதே
சந்திர சூரியர்கள் தமதுநிலை தவறிடினும்
காலம் புரண்டாலும் கலியுகம் மாறிடினும்
என்னை-நறுக்கிப் பிழிந்தெடுத்து நாகத்தில் போட்டாலும்
வாயாலே சொன்னசொல்லை மாற்றவே மாட்டேனே
இதனை-ஆதரிப்பேன் அல்லாமல் அலையவிட மாட்டேனே
மறுபடியும் பேசாதே மௌனமாய் நடந்துவிடு
நீ-வீண்வார்த்தை பேசிநின்றால் வில்லா லுனையடிப்பேன்
என்னெதிரே நிற்காதே இடையவே போவென்றான்
அரகரசிவாவென்றான் அரன்மேல் நினைவானான்
அப்போது பாமசிவன் அதிசயித்துச் சொல்லுகிறார்
நான்-ஏழையென்றோ சங்கமரே என்னை மிரட்டுகிறீர்
வேடனென்றோ சங்கமரே வீண்வார்த்தை பேசுகிறீர்
உம்மைவிட்டு-நான்போவே னென்றெண்ணி என்வீணாய்ப் பேசுகிறீர்
பன்றிதனைக் கொன்றுசுட்டுப் பங்குகள்போட் டவைகளிலே

நீரும் ஒருபங்கு நேர்மையாய் எடுத்துண்ணும்
நாங்களும் தின்னுகிறோம் ஞாயம் இதுவென்றார்
அந்த வுரைகேட்டே அர்ச்சுனன் மனம்நொந்து
வேட மதியுனக்கு விளங்கி யிருப்பதனால்
இப்படிப் பேசுகிறாய் அப்பாலே போவென்றான்
பாமசிவன்-ஆண்டி மதியுன்னை ஆட்டுகிற தாகையினால்
வேண்டி வணங்கிடினும் வீண்மொழி பேசுகின்றாய்
நானெய்த பன்றிதனைக் களவுசெய்ய ஞாயமுண்டோ
ஆண்டிப் பயலே அறிவிலையோ வுன்தனக்கு
தப்பிவந்த மிருகமதைத் தவசிநீ களவுசெய்து
கொண்டதும் அல்லாமல் கூவுகிறாய் வீரனைப்போல்
கீழிறங்கி வாடாநீ கேடுகெட்ட சங்கமனே
தரையி லிறங்கிவந்தால் சமர்த்தைநான் காட்டுகிறேன்
என்சமர்த்தும் உன்சமர்த்தும் இறங்கிவந்தால் காட்டுகிறேன்
சண்டைக்கு வாடாநீ சமர்த்துள்ள சங்கமனே
என்றார் அதுகேட்டான் இறங்கினான் வாள்விஜயன்
வில்லெடுத்துக் கொண்டுவந்தான் விமலருடன் சண்டைசெய்ய
விமலரென் றறியாமல் வேடரென் றோடிவந்தான்
பாமசிவன்-அர்ச்சுனன் மேனிதம்மேல் படுவதற் காசைகொண்டார்
அவன்முதுகில் மச்சமதை ஆண்டவர் காண்பதற்கு
விரும்பினார் ஆசையினால் மேல்விழுந்து சண்டைசெய்தார்
கட்டிப் புரண்டார்கள் காண்டீபன் வில்லதனால்
ஆண்டவனை மண்டையின்மேல் அடித்தான் உறைப்பாகப்
பாமனார் கீழ்விழுந்து பார்த்தனைத் தாமெடுத்தார்
பார்த்திபன் வல்லமையைப் பார்வதி பார்த்ததனால்
பார்த்திபன் என்றவற்குப் பேர்கொடுத்தாள் பாமசிவன்
பாசுபதாஸ் திரங்கொடுத்தார் பலவாமுங் கொடுத்தாரே
அநேக வரம்பெற்றே அர்ச்சுனனும் திரும்பிவந்தான்
அண்ண னிடம்வந்தான் அடிபணிந்து தெண்டனிட்டான்
பன்னிரண்டு வருஷங்கள் பஞ்சவர் வனவாசம்
பண்ணி முடித்துவிட்டார் பாரளந்தான் தயவாலே

அஞ்ஞாத வாசத்தை அருமையாய் முடியுங்கள்
என்றவர்க்கு மாயவனார் இயம்பினார் அப்பொழுதே
வட்டக் கருடனேறி வந்துவிட்டார் துவாரகைக்கு
அப்பாலே பாண்டவர்கள் ஆரணியம் விட்டகன்று
நாட்டில் மறைந்திருக்க நாணயமாய் வந்தார்கள்
இந்தக் கதைபடிப்போர் எந்நாளும் இதைக்கேட்போர்
பால்போல் மிகப்பொங்கிப் பாரிடத்தில் வாழ்வார்கள்
மூங்கில்போல் சுற்றமெல்லாம் முசியாமல் வாழ்வார்கள்
ஓங்கிய நால்வேதம் உலகிடத்தில் வாழியவே.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இப்பெருங் கதையை யுரைத்தவர் படித்தோர்
எழுதினோர் பொருள்விரித் திசைத்தோர்
செப்பரும் அன்பாற் கேட்டுளோர் இதன்பேர்
செப்பினோர் தீமையில் தீர்வார்
எப்பெருஞ் சிறப்பும் மைந்தரும் வாழ்வும்
இசைந்ததீர்க் காயுளும் பெறுவார்
ஒப்பருங் கதியில் நிலைபெற விளங்கி
உம்பரும் புகழவாழ் குவரே.

பஞ்சபாண்டவர் வனவாசம் முற்றியது.



# அனுபந்தம்

இந்நூலில் வருவார் சிலர்க்கு வழங்கும் பலபெயர்கள்

1.—தருமர், இவர்க்கு, தருமராஜர், தருமராயர், தர்மராசர், தர்மராயர், தருமராசர், தருமலிங்கம், தர்மலிங்கம் என்னும் பெயர்களும் வழங்கும்.

2.—வீமன், இவற்கு, பீமன், பீமசேனன், வீமசேனன், மதகிரியான் என்னும் பெயர்களும் வழங்கும்.

3.—அர்ச்சுனன், இவற்கு, பார்த்தன், அருச்சுனன், அருச்சுனராஜதுரை, ஆணுலழகுமன்னன், காண்டீபன், வில்லாளி, விஜயன், காளை, தனஞ்சயன், தனஞ்செயன், கிரீடி என்னும் பெயர்கள் வழங்கும்.

4.—நகுலன், இவற்கு, நாமக்கொடியான், காளை என்னும் பெயர்கள் வழங்கும்.

5.—சகாதேவன், இவற்கு, சாஸ்திரக்கொடியான், இளையான், சகதேவன் என்னும் பெயர்கள் வழங்கும்.

6.—பாண்டவர், இவர்களுக்கு, ஐவர், பஞ்சவர், ஐவர்பஞ்சபாண்டவர், பாண்டுமக்கள், மன்னர்பஞ்சபாண்டவர், பாண்டுகுமாரர் என்னும் பெயர்கள் வழங்கும்.

7.—துரியோதனன், இவற்கு, திரியோதனன், துரியன், நாகக்கொடியோன், சர்ப்பக்கொடியோன், நாகக்கொடிவேந்தன், சத்துராதி, அழும்பன், குருடன்மகன், திரியோதிரன், திரியன் என்னும் பெயர்கள் வழங்கும்.

8.—திரௌபதி, இவட்கு, பாஞ்சாலி, பாஞ்சாலன் பெற்றபெண், துரோபதை, நெருப்பிற் பிறந்தவள், நீலவண்ணன் தங்கை, அனலிற் பிறந்தவள், அபிஷேகபத்தினி, ஐவருக்குந்தேவி அழியாத பத்தினி, மானத்தில் அருந்ததியாள், அருந்துதியாள், மாசுபடாப்பத்தினியாள், துரோபதையாள் என்னும் பெயர்கள் வழங்கும்.

## குறிப்பு.

இங்கு குறிக்கப்பட்ட பெயர்களை யன்றி இவற்றின் திரிபான சிலபெயர்களும் வழங்கும். பெயர்களுட் பெரும்பாலும் காரணப் பெயர்களே. திரியன், அருந்துதி முதலிய சிலபெயர்கள், உலக வழக்கை யொட்டித் திரிந்தனவாகும்.

---